# தீக்கதிர் — மே-மலர்

கதிர் 9]  [மலர் 36 2—5—71  50 காசுகள்


# சோஷலிச விஞ்ஞானத்தின் சாதனை!

“ சல்யூட் ” என்ற சொற்கைக் கோள் பூமிக்கு மேல் 130 மைல் உயரத்தில் பறந்து கொண்டிருக்கிறது.

இது என்ன அதிசயமோ என்று உலகமே வியப்பில் ஆழ்ந்துள்ளது.

முதல் வான வெளி மனிதன் ககாரின் வான வெளியில் பறந்தபின், 10 ஆண்டுகளுக்குள் இத்தகைய சாதனையை எவ்வாறு சோவியத் யூனியனால் நிகழ்த்த முடிந்தது என்று விஞ்ஞானிகளே திகைத்துள்ளனர்.

நாம் வசிக்கும் பூமிக்கு வெளியே அமைந்துள்ள இந்த “நிரந்தர” சோதனைக்கூடம் பூமியைப் பற்றிய இதுவரை அறிந்திராத உண்மைகளையெல்லாம் அறிந்திடவும் பருவ நிலைகளை முன் கூட்டி கூறிடவும் உதவும். “ சோயஸ் ” என்ற விண்வெளிக் கப்பல்களில் மனிதன் பறந்து சென்று இந்த வான வெளிச் சோதனைக் கூடத்தை அடையமுடியும். அம் முறையில் முதன் முதலாகச் சென்ற விண்வெளிக்கப்பல்தான் “ சோயஸ்—10 ”.

அந்தக் கப்பலில் சென்ற மூன்று வானவெளி வீரர்களும் பூமியைச் சுற்றும் ‘சல்யூட்’’டுடன் தங்கள் கப்பலை ஐந்தரை மணிநேரம் இணைந்திருக்கச்செய்தபின், பூமிக்குத் திரும்பி வந்துள்ளார்கள்.

இவ்வாறு ஒவ்வொரு முறை செல்லும்போதும் வானவெளி வீரர்கள் புதுப்புது “இரகசியங்களை”த் தெரிந்து கொண்டுவருவார்கள்—மற்ற கிரகங்களைப்பற்றிய “செய்தி”களும் கூடவரும்.

வானவெளிக் கப்பல்களை அனுப்பி சோதனைகளை நடத்தியதிலிருந்து வானவெளியிலேயே பறந்து கொண்டிருக்கும் சோதனைக்கூடத்தை அமைத்திருக்கும் கட்டத்தை அடைந்ததின் மூலம் வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த விஞ்ஞானிகள் தொடர்ந்த ஆராய்ச்சிகளைச்செய்வதற்கு நிறைந்த வசதிகள் ஏற்பட்டுள்ளன.

இந்தச் சாதனை எவ்விதம் சாத்தியமாயிற்று? சோஷலிசப் பாதையில் ஒரு நாடு காலெடுத்து வைக்குமானால், பொருளாதாரத் துறையிலும், விஞ்ஞானத் துறையிலும் தொழில் நுட்பத்துறையிலும் மற்றெல்லா துறைகளிலும் முன்னேற்றத்துக்கு மேல் முன்னேற்றம் காணமுடிகிறது. சோஷலிச அமைப்பில் மனிதன் முழுச்சுதந்திரம் அடைகிறான் அவனுடைய சக்தி முழுவதும் எல்லாத் துறைகளிலும் புதிய சாதனைகளைச் செய்வதில் வெளிப்படுகிறது.

முதலாளித்துவச் சுரண்டலை ஒழித்துக்கட்டி முதல் தொழிலாளி வர்க்க அரசு நிறுவப்பட்டிருக்கும் சோவியத் நாட்டின் இந்த விஞ்ஞான சாதனை குறித்து இந்த மே தினத்தில் உலகம் முழுவதுமுள்ள தொழிலாளிவர்க்கம் பெருமைப்படமுடியும்.

# வங்காள தேச மக்களுக்கு வாரி வழங்கிட வருக!

வங்காள தேச மக்களுக்கு உதவியளிக்க கல்கத்தாவில் தோழர் ஜோதிபாசு தலைமையில் அமைக்கப்பட்டுள்ள உதவிக்குழு கீழ்க்கண்ட அவசர வேண்டுகோளை வெளியிட்டிருக்கிறது.

கொலை வெறி பிடித்த பாகிஸ்தானின் படைபட்டாளங்களை எதிர்த்து, சுதந்திரத்துக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் புனிதப் போர் புரியும் வங்காள தேச மக்கள் கண்ணீரையும் செந்நீரையும் ஆறாய்ப் பாய்ச்சிக்கொண்டிருக்கிறார்கள்! அவர்கள் அண்டை நாட்டவர் மாத்திரமல்ல; நமது சொந்த சகோதரர்கள்; உற்றார் உறவினர்கள்; உறுதுணைத் தோழர்கள்!

23 ஆண்டு கொடுங்கோலாட்சிக்கும் ஈவிரக்கமற்றச் சுரண்டலுக்கும் பலியான மக்கள், "சுதந்திர வங்காள ஆதிபத்யக் குடியரசு" அமைத்தே தீருவோம் என்று போர்க் கொடி தூக்கலாயினர். நியாயத்துக்கப் போராடும் மக்கள் மீது, இரத்த வெறி பிடித்த பாகிஸ்தான் அரசு முப்படைகளையும் ஏவி கொன்று குவித்து வருகிறது. குழந்தைகளும் பெண்மக்களும் கூட கூட்டம் கூட்டமாகக் கொலை செய்யப் படுகிறார்கள்.

எவ்வளவு கொடுமைகளை இழைத்தாலும், எவ்வளவு உயிர்களைக் காவு கொடுக்க நேரிட்டாலும், இம்மியும் விட்டுக்கொடுக்காமல் வங்கதேச மக்கள் எதிர்த்துப் போராடுகிறார்கள். அவர்களிடம் இரண்டே இரண்டு ஆயுதங்கள் தான், அதாவது:

1. மக்கள் அனைவரின் அசைக்க முடியாத வெற்றி!

2. எவராலும் உடைக்க முடியாத எல்லையற்ற மனோவுறுதி.

ஆகியவைதான் அந்த ஆயுதங்கள் பாகிஸ்தான் படைகளை எதிர்த்து இவர்கள் பல இடங்களில் வெற்றிமேல் வெற்றி பெற்று வருகிறார்கள்.

ஆனாலும்கூட எண்ணிக்கை பலத்திலும், நவீன ஆயுத அளவிலும் மேலோங்கியிருக்கும் பாகிஸ்தான் படைகளை எதிர்த்து, தொடர்ந்து போராடி வெற்றிபெற வேண்டுமானால், தனித்து நின்றால் முடியுமா? வெளியுதவி ஏதுமில்லமால் இருந்தால் வெற்றி பெற முடியுமா?

ஆகவே உலக முழுவதுமுள்ள சுதந்திரம் விரும்பும் மக்கள் உடனடியாக உதவி புரிய முன்வரவேண்டும். இதில் இந்திய மக்களின் பொறுப்பு தான் மிக மிகப் பெரிதாக உள்ளது என்பதை மறக்க வேண்டாம். வங்காள தேச மக்கள் நமது அண்டை நாட்டவா மட்டுமா? உற்றார் உறவினர் அல்லவா! தோழர்கள் அல்லவா! நாமும் அவர்களும் சேர்ந்துதானே ஏகாதிபத்தியத்தை எதிர்த்து சுதந்திரப்போர் நடத்தினோம்! இந்திய சுதந்திரத்துக்காக போராடிய ஆயிரமாயிரம் வீரத்தியாகங்களின் புனித ரத்தம் வங்காள தேச மண்ணை நனைககவில்லையா? அந்த ரத்தப்பூமியிலே மீண்டும் சுதந்திரப் போர் நடைபெறுகிறது. எனவே அவர்களோடு கைகோர்த்துநிற்க வேண்டிய தருணமீது என்பதை யாரு மறந்திடவேண்டாம்!

## இந்திய அரசே ஆயுதம் தருக!

இன்றுவங்காள தேசத்தின் உடனடி தேவைஎன்ன? ஆயுதங்கள் தோட்டாக்கள்! வெடிபொருள்கள்! அந்தத் தேவைகளை அரசாங்கம் தான் பூர்த்தி செய்யமுடியும். அதனால்தான் நாம் கோருகிறோம்: உடனடியாக வங்காள தேச சுதந்திர அரசை இந்திய சர்க்கார் அங்கிகரிக்க வேண்டும் என்று கோருகிறோம் வங்காளதேசத்திற்குத்தேவை ஆயுதங்களும், ஆயுதக்கருவிகளும் உட்பட சகல உதவியும் இந்திய சர்க்கார் அளிக்க வேண்டும் என்று கோருகிறோம். பொதுஜன உதவிகளெல்லாம தங்குதடையின்றி வங்காள தேசத்திற்குள் செல்லுவதற்காக எல்லைப்புறங்களைத் திறந்துவிடுங்கள் என்று இந்திய சர்க்காரைக் கேட்டுக் காள்கிறோம்.

இந்தக் கோரிக்கை முழக்கமாகது கடல் முழக்கமென நாடு முழுவதிலும் கிளம்பினால்தான் இந்திய அரசு அசையும் என்று மக்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறோம்.

## மக்களின் தேவைகள்

வங்கதேச மக்களுக்குத் தேவைப் படுவது ஆயுதங்கள் மாத்திரமல்ல: மருந்துகள் தேவை; உணவுப் பொருள்கள்தேவை: துணிமணிகள் தேவை; அன்றாடத் தேவைப் பொருள்கள் அனைத்தும் தேவை; இரத்தம் தேவை; குழந்தை உணவு தேவை; தீப்பெட்டிகள் தேவை; நிறைய நிதியும் தேவை.

நமது மக்களால் இவையெல்லாம் கொடுக்க முடியாதா? முடியும். முடியும், முடியும்! உடனே எதெல்லாம் மிச்சபடுத்த முடியுமோ அதெல்லாம் மிச்சப்படுத்தி அனுப்புங்கள்!

ஸ்தாபன ரீதியாக; சரியான மார்க்கத்தில், தகுதியான இடத்துக்கு உதவிகளை அனுப்புங்கள்!

தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், வாலிபர்கள், பெண்கள், ஆசிரியர்கள், ஊழியர்கள்...... அனைவரது சங்கங்களும், ஒவ்வொரு தனி நபரிடமும் அனுகி ஒருநாள் சம்பளமாவது கேட்டு வாங்கி அனுப்புங்கள்.

## அனுப்பவேண்டிய முகவரி

அனுப்பப்படும் உதவிகள் கையாடல்காரர்களிடம் சிக்கி வீணாகிவிடாதபடி இருக்கவேண்டுமானால்— பொறுப்பான ஸ்தாபனங்கள் மூலமாக, தகுதியான இடத்திற்குப் போய்ச் சேரவேண்டுமானால்— உங்கள் உதவிகள் அனைத்தும், உதவிக் கமிட்டியின் பொருளாளர் தோழர். கிருஷ்ணபாத கோஷுக்கு அனுப்பிவையுங்கள். அவரது முகவரி:

Krishnapada Gh0sh
80, Acharya Jagadish B0se R0ad,
CALCUTTA—14.

அனுப்பப்படும் பணம், பொருள் யாவற்றுக்கும் அச்சடித்த ரசீது, வரிசை எண்ணுடன் கிடைக்கும். ரசீது இல்லாமல் நன்கொடைகள் கொடுக்க வேண்டாம.

ஜோதிபாசு,
தலைவர்,
வங்காளதேச ஒருமைப்பாடு
உதவிக் கமிட்டி.

## உதவிக் குழு வேண்டுகோள்

# ஜனநாயக உரிமைகளை நிலைநாட்டப் போராடுவோம்!

சர்வதேச தொழிலாளி வர்க்கத் தினமான 1971 மே தினத்தில் இலட்சோப லட்சக்கணக்கான இந்தியத் தொழிலாளர்களுக்கும், ஏழை விவசாயிகளுக்கும், மற்ற உழைக்கும் மக்களுக்கும் இந்தியத் தொழிற்சங்க மையம் தனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க பாரிஸ் கம்யூன் நூற்றாண்டு விழாவின் மத்தியில் இந்த மே தினம் வருகிறது. முதல் தொழிலாளி வர்க்க அரசினை உருவாக்கி சர்வதேச ஒற்றுமைப் பதாகையினை உயர்த்தியவர்களின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தும்போது உலகெங்கும் போராடும் தொழிலாளி வர்க்கத்துக்கு சி. ஐ. டி. யூ. தன் சகோதர வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறது. பாரிஸ் கம்யூன் படிப்பினைகள் தொடர்ந்து உலகத்தொழிலாளி வர்க்க இயக்கத்துக்கு சோஷலிசத்துக்கான புரட்சிப் போராட்டப் பாதையில் செல்லுவதற்கு ஆதர்சமூட்டும் என்று சி. ஐ. டி. யூ. நம்புகிறது.

சென்ற வருடம் இந்தியத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வரலாற்றில் ஒரு முன்னேற்ற மைல்கல்லாக அமைந்திருந்து பல தொழில் கேந்திரங்களில் முதலாளிகள், அரசாங்கத்தின் தாக்குதலை எதிர்த்துத் தொழிலாளர்கள் தீரமிக்க போராட்டங்களை நடத்தியுள்ளனர் இந்தப் போராட்ட அலைவீச்சுக்களின் உச்சம் 1970-ஆண்டில் வேலை நிறுத்தங்களிலும் கதவடைப்புகளிலும் இழந்த மனித நாட்களின் எண்ணிக்கை 2 கோடியாக உயர்ந்ததில் தெரிந்தது. இந்த அளவு மனித நாட்கள் நட்டம் முன்பு எந்த ஆண்டிலும் ஏற்படாததாகும்.

## தியாகிகளின் பேரால்......

இந்தக் காலகட்டத்தில் மேற்கு வங்கத் தொழிலாளி வர்க்கம் எண்ணற்ற வேலை நிறுத்தப் போராட்டங்களில் ஈடுபட்டு முதலாளிகளிடமிருந்து பல சலுகைகளைப் பறித்தது. இந்தப் போராட்டங்களில் முன்னெப்போதும் கண்டிராத போலீஸ் அடக்குமுறையையும் ஆயுதமேந்திய குண்டர்களின் தாக்குதல்களையும் தொழிலாளர்கள் சந்திக்க வேண்டியிருந்தது. இந்தத் தாக்குதலை எதிர்த்து நின்ற எண்ணற்ற தொழிலாளி வர்க்கத்தின் வீரப்புதல்வர்கள் தங்கள் இன்னுயிரை இழந்தனர். அந்த வீரத் தியாகிகளின் நினைவுக்கு சி. ஐ. டி. யூ. அஞ்சலி செலுத்துகிறது—அவர்கள் வாழ்நாளில் பூர்த்திசெய்யாமல் விட்டுச்சென்ற பணியினை முற்றுப்பெறச் செய்ய சபதமேற்கிறது.

துர்க்காபூரில் 30 ஆயிரம் ஆயுதப் போலீசையும் மத்திய ரிசர்வ் போலீஸ் படையையும் எதிர்த்து 60 ஆயிரம் தொழிலாளர்கள் நடத்திய வீரமிக்கப் போராட்டம் இந்தியத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வரலாற்றில் புகழ் செறிந்த அத்தியாயத்தைச் சேர்த்துள்ளது. போலீஸ் சோதனைகளின் போதும் ஊடுருவல்களின்போதும் ஊரடங்கு உத்திரவுகளின்போதும் போலீஸ் சித்திரவதைகளின்போதும் தொழிலாளர்களும் அவர்களுடைய குடும்பத்தினரும் காட்டிய வீரம் தொழிலாளி வர்க்கம் ஒன்றுபட்டுவிட்டால் அவர்களுடைய தொழிற்சங்க ஜனநாயக உரிமைகளின் மீது தாக்குதல்களை அவர்கள் சும்மா விடமாட்டார்கள் என்பதைக் காட்டிவிட்டது. துர்க்காப்பூர் தொழிலாளர்களுடன் தங்களுடைய ஒருமைப்பாட்டை உணர்த்தும் முறையில் இந்தியா முழுவதிலும் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் துர்க்காப்பூர் நிதிக்கு வாரி வழங்கினார்கள்.

## சி. ஐ. டி. யூ. மே தின அறைகூவல்

## தொழிலாளர் போராட்டங்கள்

முறையை ஒப்பந்தக் கூலிமுறையை ஒழிக்கக் கோரியும், இராஜஸ்தான், கிராக்கிப் படி போனஸ் கோரியும் மேற்கு வங்கத்தில் இரண்டரை லட்சம் சணல் தொழிலாளர்கள் நடத்திய ஒன்றுபட்ட போராட்டம் வெற்றி பெற்று தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு சணல் ஆலை முதலாளிகள் பணிந்தனர்.

கூலி உயர்வுக்காக ஜாம்ஷெட்பூரில் 35 ஆயிரம் எஞ்சினியரிங் தொழிலாளர்களும் தமிழ்நாட்டில் 40 ஆயிரம் பீடித் தொழிலாளர்களும் மேற்கு வங்கத்தில் முனிசிபல் தொழிலாளர்களும், அசாம், பீகார், இராஜஸ்தான், உ. பி. மாநிலங்களில் மின்சாரத் தொழிலாளர்களும், ராணிகஞ்ச் பகுதியில் நிலக்கரித் தொழிலாளர்களும், கேரளத்தில் இரண்டு லட்சம் கயிறு தொழிலாளர்களும், கேரளத்திலும், தமிழ்நாட்டிலும் ரோடு போக்குவரத்துத் தொழிலாளர்களும், பம்பாய், அகமதாபாத், மதுரை, கோயமுத்தூர் நகரங்களில் டெக்ஸ்டைல்ஸ் தொழிலாளர்களும், திரிபுரா, கேரளத்தில் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களும், கேரளத்தில் முந்திரித் தொழிலாளர்களும் நடத்திய வேலை நிறுத்தப் போராட்டங்கள் முதலாளித்துவ அரசாங்கத்தின் அடக்குமுறையை உறுதியாக எதிர்த்த தொழிலாளி வர்க்கத்தின் வளர்ந்து வரும் ஒற்றுமை உணர்வையும் போர்க்குணத்தையும் முன்னிலைக்குக் கொண்டு வந்துள்ளது.

துர்க்காப்பூர் உருக்காலைத் தொழிலாளர்களால் வழி காட்டப்பட்டு நாடெங்கிலுமுள்ள உருக்காலைத் தொழிலாளர்கள் வலுவான இயக்கத்தைக் கட்டினார்கள்—ஏ. ஐ. டி. யூ. சி., ஐ. என். டி. யூ. சி. தலைமை துரோகமிழைத்த போதிலும் குறைந்த தொகைக்கு சமரசம் செய்ய அத்தலைமை தயாரான போதிலும் போராடி கணிசமான ஊதிய உயர்வு பெற்றனர்.

## அரசு ஊழியர் போராட்டம்

27-லட்சம் மத்திய அரசு ஊழியர்கள் விடுதலைக்கிளர்ச்சியிலும், மற்ற தொழிற்சங்கங்களின் ஆதரவிலும் 1968-ம் ஆண்டு வேலை நிறுத்தத்தை யடுத்து மேற்கொள்ளப்பட்ட பழி

வாங்கும் நடவடிக்கைகளைத் திரும்பப் பெறச்செய்தார்கள். மூன்றாவது ஊதியக் குழு கண்தடைப்பு இடைக்கால நிவாரணம் கொடுக்கச் சிபாரிசு செய்த பின்னரும் ஊதிய உயர்வு கோரி மத்திய அரசு ஊழியர்கள் தொடர்ந்து போராடினார்கள்.

அத்தியாவசிய சிவில் பராமரிப்புச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்ட போதிலும் ஊதிய உயர்வுக்காக மாநிலம் மாநிலமாக 40 லட்சம் மாநில அரசு ஊழியர்கள் போராடினார்கள்.

கேரளத்தில் அச்சுதமேனன் அரசு வெட்கமற்ற முறையில் ஊதிய முடக்கம் செய்யவேண்டுமென்று கூறியது. ஆனால் அது நீண்ட வேலை நிறுத்தப் போராட்டத்தை சந்திக்க வேண்டியிருந்தது. மேற்கு வங்கத்திலும், மகாராஷ்டிரத்திலும், இராஜஸ்தானிலும், பஞ்சாபிலும், ஆந்திரத்திலும், பீகாரிலும் மற்ற மாநிலங்களிலும் மாநிலம் தழுவிய அரசு ஊழியர் வேலை நிறுத்தப் போராட்டங்கள் வெடித்தன.

## போலீஸ் அடக்குமுறை

இரயில்வேத் தொழிலாளர்கள் தங்களுடைய போராட்டங்களில் மிருகத்தனமான போலீஸ் அடக்குமுறைக்கு உள்ளாயினர். தென் கிழக்கு, கிழக்கு, வடக்கு எல்லை ரயில்வேக்களில் ஏற்பட்ட வேலை நிறுத்தங்கள் தொழிலாளர்களின் அதிருப்தி வளர்ந்து வருவதையும் போலீஸ் அடக்குமுறையை எதிர்த்துப் போராடுவதற்கு அவர்கள் கொண்டுள்ள உறுதியையும் வெளிப்படுத்திற்று.

கோடாவில் ஜே. கே. சிந்தடிக் தொழிற்சாலையில் சிங்கானியாக்களின் நலன்களைப் பாதுகாப்பதற்காக இராஜஸ்தான் போலீஸ் வேலை நிறுத்தம் செய்த பல தொழிலாளர்களைச் சுட்டு வீழ்த்தியது. நக்தாவில் பிர்லாவின் சுரண்டலைப் பாதுகாப்பதற்காக ம. பி. போலீஸ் தொழிலாளர்களைக் கொன்று குவித்தது. வட வங்கத்தில் போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தில் பல தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் உயிரிழந்தனர். இத்தகைய காட்டுமிராண்டித்தனமான போலீஸ் அடக்குமுறை மேலும் தீவிரமாகப்போராடுவதற்குத் தொழிலாளர்களின் உறுதியைத்தான் பலப்படுத்திற்று.

சென்ற வருடத்தில் எல். ஐ. சி., பாங்க், மற்ற வர்த்தக நிறுவனத் தொழிலாளர்கள் பல போராட்டங்களை நடத்தினர். விலைவாசி உயர்வை எதிர்த்தும், தொழிற்சாலைகள் மூடப்படுவதையும் ஆட்குறைப்புச் செய்யப்படுவதையும், வேலைப்பளு அதிகரிப்பையும் எதிர்த்தும் போராட்டகளத்தில் இறங்கும் தொழிலாளர்களின் எண்ணிக்கை நாள்தோறும் உயர்ந்துகொண்டேயிருக்கிறது. தங்களுடைய நலன்களைக் காக்க புகழ்பெற்ற போராட்டம் நடத்தும் இந்தியத் தொழிலாளர்களுக்கெல்லாம் சி. ஐ. டி. யூ. வாழ்த்துக் கூறுகிறது.

## விவசாயத் தொழிலாளர் போராட்டம்

கூலி உயர்வுக்காக மேற்குவங்கத்திலும், கேரளத்திலும், தமிழ்நாட்டிலும், பீகாரிலும் மற்ற மாநிலங்களிலும் பல போராட்டங்களை நடத்திய விவசாயத் தொழிலாளர்களுக்கு சி. ஐ. டி. யூ. வாழ்த்துக் கூறுகிறது. நிலப்பிரபுக்களின் ஒடுக்குமுறையை எதிர்த்தும் பல இடங்களில் கடும் போராட்டங்களின்மூலம் நிலத்தைக் கைப்பற்றியுமுள்ள ஏழை விவசாயிகளுக்கு சி. ஐ. டி. யூ. வாழ்த்துக் கூறுகிறது.

இந்த மே தினத்தில் விவசாயிகள் போராட்டங்களுக்குத் தொழிலாளி வர்க்கம் முழுமனதான ஆதரவளித்து சக்திவாய்ந்த தொழிலாளர்—விவசாயி கூட்டணி அமைவதற்கு வழி வகுக்க வேண்டும்.

ஏ. ஐ. டி. யூ. சி., ஐ. என். டி. யூ. சி. தலைமை வர்க்க சமரசக் கொள்கையைப் பின்பற்றுவதையும், பல சந்தர்ப்பங்களில் தொழிலாளர்களைக் காட்டிக்கொடுப்பதையும், தொழிலாளர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தைச் சீர்குலைப்பதையும் கடந்த ஓராண்டு கால அனுபவம் தொழிலாளர்களுக்குத் தெளிவாகக் காட்டிவிட்டது. இதற்கு மாறாக சி. ஐ. டி. யூ. வர்க்கப் போராட்டக் கொள்கையைப் பின்பற்றுவதையும் போராட்டப் பாதையில் செல்லும் எல்லா சக்திகளுடனும் நெருக்கமாகச் சேர்ந்து பொதுப்பிரச்னைகளின் மீது போராடி வருவதையும் தொழிலாளர்கள் கண்டுள்ளனர்.

மேற்குவங்கத்தில் இடதுசாரி ஐக்கிய முன்னணி பெற்றுள்ள மகத்தான வெற்றி தொழிலாளி வர்க்கமும் மக்களும் ஒன்றுபட்டுப் போராடினால் இரு முதலாளித்துவக் கூட்டணிகளையுமே முறியடிக்க முடியும் என்பதை நாட்டு மக்கள் அனைவருக்கும் காட்டியுள்ளது.

இராணுவத்தையும், மத்திய ரிசர்வ் போலீஸ் படையையும் மற்ற மாநிலங்களின் ஆயுதப் போலீஸ் படையினரையும் கொண்டுவந்து குவித்தனர். எனினும் மேற்கு வங்க சட்டமன்றத்தில் இடதுசாரி ஐக்கிய முன்னணி தனிப்பெரும் அணியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அது நாடாளுமன்றத் தொகுதிகளில் 20 இடங்களைப் பிடித்திருக்கிறது. இது ஜனாதிபதி ஆட்சியின் அடக்குமுறையை எதிர்த்து மேற்கு வங்கத் தொழிலாளர்களும் மக்களும் தொடுத்த பல போராட்டங்களின் நேரடி விளைவேயாகும். மேற்கு வங்கத்தில் மக்கள் போராட்டங்களை நசுக்குவதற்கு மத்திய அரசாங்கத்தால் உருவாக்கப்பட்டிருக்கும் புதிய சதியைப் பற்றி சி. ஐ. டி. யூ. எச்சரிக்கிறது. வங்கத் தொழிலாளி வர்க்கத்துக்கும் மக்களுக்கும் ஆதரவாக இந்தியத் தொழிலாளி வர்க்கம் திரண்டெழுந்து முதலாளித்துவச் சதியை முறியடிப்பதற்கு இயன்றதனைத்தையும் செய்யவேண்டும் என்று அது அறைகூவல் விடுக்கிறது.

## சில இடதுசாரி கட்சிகளின் போக்கு

சில இடதுசாரி கட்சிகள் பின்பற்றிய சந்தர்ப்பவாதக் கொள்கைகளின் விளைவாக காங்கிரஸ் எதிர்ப்பு ஜனநாயக முன்னணி உடைந்ததைப் பற்றி இந்த மே தினத்தில் இந்தியத் தொழிலாளி வர்க்கம் நினைவு கூராமல் இருக்கமுடியாது. இந்திரா காந்தியின் தலைமையிலமைந்த முற்போக்குக் கூட்டணியிலோ அல்லது சிண்டிகேட் கூட்டணியிலோ சேர்ந்த இடதுசாரிக் கட்சிகள் நாடாளுமன்றத்தில் பெருவாரியான இடங்களை ஆளும் காங்கிரஸ் கட்சி பிடிப்பதற்குப் பேருதவிபுரிந்துள்ளன.

இந்திரா காந்தியின் கட்சி மக்களிடம் தன்னுடைய போலிக்கொள்கைகளைப்பற்றி சில பிரமைகளைப் பரப்ப முடிந்திருப்பினும் அவர் சோசலிச வேடங்களின் மூலம் ஏமாற்றிக் கொண்டிருக்கிறார் என்று கண்டு பிடிப்பதற்கு இந்தியத்தொழிலாளர்களுக்கும் மக்களுக்கும் அதிக காலம் பிடிக்காது.

தற்போதைய முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ அரசியல் சட்டத்தின் கீழ் மக்களின் வேலை நிலைமைகளிலும் வாழ்க்கை நிலைமைகளிலும் எந்த அடிப்படை மாற்றத்தையும் செய்ய முடியாது என்பதை மக்களும் உணருவார்கள். வேலையின்மையைத்

துடைத்தெறிவது பற்றி அரசாங்கம் வாய்ப்பறை அடித்தாலும் அதிர்ச்சியூட்டும் அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் வளர்ந்துகொண்டிருக்கிறது. அரசாங்கம் பின்பற்றும் கொள்கைகளின் காரணமாக வேலை வாய்ப்புக்கள் குறைந்துகொண்டிருக்கும்போது சுமார் ஒன்றரைக்கோடி இளைஞர்கள் வேலை தேடி அலைந்துகொண்டிருக்கிறார்கள்.

## பிரச்னைகள் தீர

தற்போதைய அரசாங்கத்தை மாற்றி ஒரு உண்மையான மக்கள் ஜனநாயக அரசாங்கத்தைக் கொண்டு வந்தால்தான்—இந்தப் பணியில் தொழிலாளி வர்க்கம் அதற்கு உரித்தான பெருமைமிக்கப் பாத்திரத்தை ஆற்றத் தயாராக இருந்தால்தான் நாட்டின் முன்னுள்ள பிரச்னைகளைத் தீர்க்க முடியும்.

நாடாளுமன்றத்துக்கு அண்மையில் நடைபெற்ற தேர்தலில் ஆளும் காங்கிரஸ் கட்சி வெற்றியடைந்த பின்னர் முற்றிவரும் பொருளாதார நெருக்கடிக்கு அது வழிகாண முடியவில்லை. இந்நிலையில் தொழிலாளி வர்க்கத்தின் மீதும் உழைக்கும் மக்களின் மீதும் மூர்க்கத்தனமான தாக்குதலைத் தொடுக்க அது முனைந்துகொண்டிருக்கிறது என்று இந்தியத் தொழிலாளி வர்க்கத்தை சி. ஐ. டி. யூ. எச்சரிக்கிறது. வேலை நிறுத்தத்தைத் தடைசெய்வதற்கும் கடுமையான போராட்டங்களின் மூலம் தொழிலாளர்கள் பெற்றுள்ள தொழிற்சங்க உரிமைகளை நசுக்குவதற்காகவும் புதிய தொழில் உறவு கமிஷன் அமைக்கப்படுகிறது. தொழிலாளர்களின் தொழிற்சங்க உரிமைகளைப் பறிப்பதற்கு இம்முறையிலான சட்டங்கள் மகாராஷ்டிரத்திலும் ஆந்திரத்திலும் ஏற்கனவே இயற்றப்பட்டுள்ளன. மத்திய ரிசர்வ் போலீஸ் படையை உபயோகிப்பது, 144 தடையுத்தரவு போடுவது, அத்தியவசிய சர்வீஸ் பராமரிப்புச் சட்டத்தைப் பிரயோகிப்பது முதலியன சர்வசாதாரணமாகக் காணும் காட்சியாகிவிட்டது. அரசாங்கத்தின் இந்த முறையில் மேற்கு வங்கத்தில் தொழில் தகராறுகளின் போது சமூகவிரோத சக்திகளைப் பயன்படுத்துவது புதிதாகச் சேர்ந்துள்ளது. தொழிலாளர்களின் போராட்டங்களை நசுக்குவதற்கான அரசாங்கத்தின் மூர்க்கத்தனம் எந்த அளவுக்குப் போயுள்ளது என்பதற்கு இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன் வேலை நிறுத்தத்தின்போது இராணுவத்தினரை வேலை நிறுத்தத்தை உடைப்பவர்களாகப் பயன்படுத்தியிருப்பது ஒரு உதாரணமாகும். ஆளும் வர்க்கங்களின் சூழ்ச்சியை முறியடிக்குமாறும் அடக்குமுறை நடவடிக்கைகளுக்கு எதிராக விட்டுக்கொடுக்காமல் போராடுமாறும் இந்தியத் தொழிலாளி வர்க்கத்தை சி. ஐ. டி. யூ. அறைகூவி அழைக்கிறது. இரகசிய வாக்கெடுப்பு மூலம் தொழிற்சங்க அங்கீகாரம் வழங்குவதற்கான போராட்டத்தில் ஒன்றுபடுமாறு எல்லா சங்கங்களையும் சேர்ந்த தொழிலாளர்களுக்கு சி. ஐ. டி. யூ. வேண்டுகோள் விடுக்கிறது.

## உழைக்கும் மக்களுக்கு வாழ்த்து

அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்கும் அவர்களுடைய பொம்மை ஆட்சியினருக்கும் அடிக்கு மேல் அடி கொடுத்துவரும் வியட்நாம், கம்போடியா, லாவோஸ் தொழிலாளர்களுக்கும் மக்களுக்கும் சி. ஐ. டி. யூ. தனது உளப்பூர்வமான சகோதர வாழ்த்துக்களை அனுப்புகிறது. தொழிலாளி வர்க்கத்தின், மக்களின் பிரதான எதிரிக்கு எதிராக அமெரிக்கா உள்ளிட்ட உலகம் முழுவதுமுள்ள உழைக்கும் மக்களை அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் ஆக்கிரமிப்புக் கொள்கைகள் ஒன்றுபடுத்தி வருகிறது.

கண்மூடித்தனமான இராணுவ சர்வாதிகாரத்தை எதிர்த்து சுதந்திரத்துக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் ஒன்றுபட்டெழுந்து போராடிக்கொண்டிருக்கும் வீரஞ்செறிந்த பங்களாதேஷ் மக்களுக்கு சி. ஐ. டி. யூ. தன்னுடைய சகோதர வாழ்த்துக்களை அனுப்புகிறது. நிராயுதபாணியான மக்களை மிருகத்தனமான முறையில் கொன்று குவிப்பதின் மூலம் பங்களாதேஷ் மக்களின் எழுச்சியை அடக்கிவிட முடியாது என்றும் மற்றெல்லா நாடுகளின் மக்களின் ஆதரவுடன் அவர்கள் விரைவில் பூரண வெற்றியடைந்தே தீருவார்கள் என்றும் சி. ஐ. டி. யூ. நம்புகிறது. பங்களாதேஷ் அரசாங்கத்துக்கு உடனடியாக அங்கீகாரம் அளிக்கவேண்டும் என்று மே தினத்தில் இந்தியத் தொழிலாளி வர்க்கம் குரல் எழுப்புமாக!

சோஷலிச நிர்மாணத்தில் புரிந்துள்ள சாதனைகளுக்காகவும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்துக்கு அளித்துள்ள அரிய உதவிகளுக்காகவும் சோவியத் யூனியன், சீனா, வியட்நாம், வடகொரியா, கியூபா, ருமேனியா, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு, போலந்து, ஹங்கேரி, பல்கேரியா, செக்கோஸ்லோவேகியா, அல்பேனியா தொழிலாளி வர்க்கத்துக்கும் மக்களுக்கும் இந்த மே தினத்தில் சி. ஐ. டி. யூ. தன்னுடைய சகோதர வாழ்த்துக்களை அனுப்புகிறது.

ஏகபோக மூலதனத்தை எதிர்த்துப் பல போராட்டங்கள் நடத்தியுள்ள—உலகின் தேசிய விடுதலை இயக்கங்களோடு ஒருமைப்பாட்டு உணர்வை பல சமயங்களில் வெளிப்படுத்தியுள்ள முன்னேறிய முதலாளித்துவ நாடுகளின் தொழிலாளி வர்க்கத்துக்கு சி. ஐ. டி. யூ. உளங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறது.

ஏகாதிபத்திய சூழ்ச்சிகளை எதிர்த்தும் தேசிய சுதந்திரத்துக்காகவும் உலக சமாதானத்துக்காகவும் அயராது போராடும் ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க மக்களுக்கு சி. ஐ. டி. யூ. தன்னுடைய சகோதர வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறது. சுயநல இராணுவக் கும்பலுக்கு எதிராக போராடிக் கொண்டிருக்கும் பாகிஸ்தான் தொழிலாளர்களுக்கும் மக்களுக்கும் சி. ஐ. டி. யூ. சகோதர வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறது. இந்தச் சோதனையான நேரத்தில் பங்களாதேஷ் மக்களின் மகத்தான போராட்டத்துக்கு ஆதரவாக மேற்கு பாகிஸ்தானின் முன்னேறிய தொழிலாளர்களும் உழைக்கும் மக்களும் ஒன்றுபட்டு நிற்பார்கள் என்று சி. ஐ. டி. யூ. நம்புகிறது.

இந்த மே தினத்தில் இலட்சோப லட்சம் தொழிலாளர்கள் ஒன்று சேருவார்களாக. ஏகாதிபத்தியத்துக்கும் யுத்த வெறியர்களுக்கும் எதிரான உலக சமாதானத்தைக் காப்பதற்கான உலகம் தழுவிய போராட்டத்தைப் பலப்படுத்துவதற்கு இந்த மே தினத்தில் அவர்கள் சபதமேற்பார்களாக! ஏகபோக முதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்கும் எதிரான போராட்டத்தில்—இந்திய மண்ணில் ஜனநாயக ஆட்சியை நிறுவுவதற்கான போராட்டத்தில் இந்தியத் தொழிலாளி வர்க்கம் இந்த மே தினத்தில் ஒன்றுபட்டு முன்னேறட்டுமாக! ★

# சந்தர்ப்பவாத சகதி!



1969 துவக்கத்தில் பரிதாபத்தில் அ. இ. கா. க. கூட்டம் நடந்தது. அப்பொழுது காங்கிரஸ் இன்னும் இரண்டாகப் பிரியவில்லை. ஆனாலும் தலைவர்களில் சிலர் காங்கிரசாட்சியின் எதிர்காலத்தைக் காபந்து செய்யவேண்டுமென்றால் காங்கிரஸ், சுதந்திரா, ஜனசங்கம் போன்ற கட்சிகளுடன் உறவு கொள்ள வேண்டும் என்றனர். அக்கட்சிகள் தான் காங்கிரசுக்கு "ஒத்த கருத்துக்கொண்ட" கட்சிகள் என்றனர். வேறு சிலர் பி. சோ. கட்சி ச. சோ. கட்சி வலது கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவற்றுடன்தான் உறவு கொள்ள வேண்டும் என்றனர். நெருக்கடியில் சிக்கியிருக்கும் ஆளும் வர்க்கங்களின் ஆட்சியை நிலைப்படுத்த என்ன உபாயத்தைக் கையாளலாம் என்பது குறித்து இரண்டு கருத்துக்கள் முன் வந்தன.

அப்பொழுதே 1969 ஏப்ரல் மாதத்தில் நமது கட்சியின் மத்தியக் கமிட்டி இதர இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளுக்கு எச்சரிக்கை விடுத்தது. முதலாளித்துவ — நிலப்பிரபுத்துவ ஆட்சிக்கு முட்டுக் கொடுக்க இவ ஜனநாயகக் கட்சிகளை இழுத்துப்போட்டு இணைத்துக்கொள்ள காங்கிரஸ் சூழ்ச்சி செய்கிறது என்றும் இவ்வாறு இணைந்தால் அது ஜனநாயக இயக்கத்துக்கே பெருத்த நாசத்தை விளைவிக்கும் என்றும், அவ்வாறு இணையும் கட்சிகளுடைய ஜனநாயக உருவத்தையே அழித்து விடும் என்றும் எச்சரிக்கை செய்தோம்.

## செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று

ஆனால் நமது சொல்லை அக்கட்சியில் பொருட்படுத்தவில்லை. நமது கூப்பாடு செவிடன் காதில் ஊதிய சங்காயிற்று. காங்கிரஸ் கட்சி இரண்டாக உடைவதற்கு முன்னரும். அது இரண்டாக உடைந்த பின்னரும், நாம் ஓயாமல் நமது கடமையைச் செய்தோம். இந்திராவும் அவரது ஆதரவாளர்களும்



ஏ. பாலசுப்ரமணியம்

சிண்டிகேட்டும் அதன் பரிவாரங்களும், ஆளும் வர்க்கங்களின் இரண்டு வேடங்களே என்றாலும் இவை இரண்டுக்கும் இடையில் அடிப்படை வேறுபாடு இல்லை என்றாலும் ஆளும் வர்க்கங்களின் அடிப்படை நலன்களைப் பாதுகாக்க என்ன உபாயத்தைக் கையாள்வது என்பது குறித்தே இவ்விரண்டுக்கும் இடையில் கருத்து மாறுபாடு என்றோம். நாம் எவ்வளவு தெளிவாக எடுத்துச்சொல்லியும், எத்தனையோ தடவைகள் திரும்பத் திரும்பச் சொல்லியும் மற்ற இடதுசாரி ஜனநாயகக் கட்சிகள் நமது எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. எஸ். எஸ். பி. கட்சி நேரடியாக இந்திரா—எதிர்ப்பு என்பதன் பெயரால் சிண்டிகேட் கூட்டணியில் சேர்ந்தது. சிண்டிகேட் கூட்டணியை எதிர்ப்பது என்பதன் பெயரால், பி. சோ. கட்சி, வலதுசாரி கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவை இண்டிகேட்டுக்குத் துணைபோயின.

இதன் விளைவுகள் என்ன? இந்த விளைவுகளைப் பரிசீலிக்கு முன்னர் இன்னொன்றையும் மனதில் கொள்வது நல்லது. காங்கிரஸ் எதிர்ப்பு என்பதன் பெயரால், அப்பட்டமான வலதுசாரிக்கட்சிகளுடன் சேர்வது கூடாது என்று 1967-க்கு முன்பிருந்தே நாம் கூறி வந்துள்ளோம். நாம் அவ்வாறு கூறிய பொழுது எஸ். எஸ். பி. கட்சியின் நிலையை மனதில் கொண்டுதான் கூறினோம். காங்கிரசை எதிர்க்க எவருடனும் சேரலாம் என்றும், சேரும் கட்சிகளின் தன்மையும் கொள்கையும் எப்படி இருப்பினும் பரவாயில்லை என்றும அக்கட்சி கூறி வந்தது. இப்போக்கின் அபாயத்தை நாம் பல தடவை எடுத்துக் கூறினோம். இடதுசாரி சக்திகளும் இதர ஜனநாயக சக்திகளும் இணைந்து முற்போக்கான கோணத்திலிருந்து காங்கிரசை எதிர்க்க வேண்டுமேயல்லாது, சுதந்திரா கட்சியுடனும், ஜனசங்கத்துடனும் இணைந்து செல்வது ஆளும் வர்க்கங்களை பலப்படுத்தும் என்றும் எடுத்துக் காட்டினோம் ஆயினும் அக்கட்சித் தலைவர்கள் செவி மடுக்கவில்லை.

## விளைவுகள் என்ன?

அக்கட்சித் தலைவர்கள் 1967 தேர்தலுக்கு முன்னரோ, பின்னரோ, கேட்கவில்லை என்பது மட்டுமல்ல; சுதந்திரா ஜனசங்கம் போன்ற வலதுசாரி பிற்போக்குக் கட்சிகளை ஒழித்துக் கட்ட எதுவும் செய்யலாம் என்றும், அதற்காக காங்கிரசுடனும் சேரலாம் என்றும் கூறிவந்த வலது கம்யூனிஸ்டு தலைவர்களும் "பல்டி" அடித்தனர். 1967 தேர்தலுக்குப் பின்னர் உத்திரப் பிரதேசம், பீகார், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் காங்கிரசல்லாத அரசுகள் அமைப்பது என்பதன் பெயரால் ஜனசங்கத்துடனும் சுதந்திரா கட்சியுடனும் கூட்டுச் சேர்ந்தனர். சட்ட மன்றத்தில் சில ஸ்தானங்களைப் பிடிப்பதற்காகவோ, மந்திரி பதவிகளுக்காகவோ இவ்வாறு செய்வது சந்தர்ப்பவாதமாகும் என்று நாம் கூறியதைப் புறக்கணித்தனர். அதே சமயம் வலதுசாரி பிற்போக்குக் கட்சிகளான சுதந்திராவும் ஜனசங்கமும் காங்கிரஸ் எதிர்ப்பு என்பதன் பெயரால் எஸ். எஸ். பி. யுடனும் வலது கம்யூனிஸ்டுகளுடனும் சேர்ந்து கொள்ளத் தயங்கவில்லை. இதன் விளைவு என்ன ஆயிற்று என்று பார்ப்பது நல்லது

அந்த மாநிலங்களில் இந்த சந்தர்ப்பவாதக் கூட்டாட்சிகள்

விழ்ந்து, 1969-ல் மீண்டும் தேர்தல்கள் நடந்தன. அந்தத் தேர்தல்களின் முடிவுகள் ஒரு விஷயத்தைத் தெளிவாக்கின. உதாரணத்திற்காக உத்திரப் பிரதேசத்தை எடுத்துக் கொள்ளலாம். 1967-ல் எஸ். எஸ். பிக்கு கிடைத்த வாக்குகள் மொத்தம் பதிவானதில் 9.97 சதவிகிதம். ஆனால் 1969-ல் இது 7.85 சதவிகிதம் ஆகக் குறைந்தது. ஜனசங்கத்துக்கு 1967-ல் பதிவான வாக்குகளில் 21.67 சதவிகிதம் கிடைத்தது. ஆனால் 1969-ல் இது 17.88 சதவிகிதம் ஆகக்குறைந்தது. அதாவது ''இடதுசாரிக் கட்சியான எஸ். எஸ். பி. யும் நஷ்டப்பட்டது. வலதுசாரிக் கட்சியான ஜனசங்கமும் நஷ்டப்பட்டது லாபம் அடைந்தது யார்? காங்கிரஸ்! காங்கிரசல்லாத கூட்டாட்சி நடத்திய காலத்தில் ஜனசங்கம் தனது மக்கள் விரோத நிலையை அம்பலப்படுத்திக் கொண்டது. இதுபோன்ற கட்சிகளுடன் சேர்ந்த சந்தர்ப்பவாதத்தின் மூலம் இடதுசாரிக் கட்சிகளும் கொஞ்சம் செல்வாக்கை இழந்தன. காங்கிரசே பரவாயில்லை என்ற போக்கு தென்பட்டது. இதை நாம் சுட்டிக் காட்டினோம். இந்தக் கசப்பான அனுபவம் இருந்தும் இதன் படிப்பினைகளை ''இடதுசாரிக் கட்சிகள்'' அல்லது ''ஜனநாயகக் கட்சிகள்'' உணரவில்லை.

காங்கிரஸ் இரண்டாகப்பிளந்தது. சிண்டிகேட்—சுதந்திரா—ஜனசங்கக் கூட்டணி பிறந்தது. இண்டிகேட் இடதுசாரி வேடம் அணிந்தது. இடதுசாரிக் கட்சிகளுக்கும் ஜனநாயகக் கட்சிகளுக்கும் வலை வீசியது. நாம் மீண்டும் மீண்டும் எச்சரிக்கை செய்தோம். ஆனாலும் சிண்டிகேட் கூட்டுடன் எஸ். எஸ். பி. சேர்ந்தது. மற்ற சில கட்சிகள் சிண்டிகேட்டின் வலையில் சிக்கின. தேர்தல்களும் முடிந்தன. இப்பொழுது என்ன நிலை?

## எஸ். எஸ். பி. எங்கே?

எஸ். எஸ். பி. எங்கே? ''1962-ல் டில்லியில் அதிகாரத்தைப் பிடிப்போம்'' என்று டாக்டர் ராம் மனோகர் லோகியா முழங்கியதை நாம் மறக்கவில்லை. உத்தரபிரதேசம், பீகார் போன்ற மாநிலங்களில் நல்ல வெகுஜன ஆதரவுடன் வளர்ந்துவந்த கட்சி எஸ். எஸ். பி. 1967 தேர்தலுக்குப்பின் நாடாளுமன்றத்தில் 23 ஸ்தானங்களுடன் வீற்றிருந்த எஸ். எஸ். பி, இன்று 3 ஸ்தானங்களுடன் காட்சியளிக்கின்றது. 1967 தேர்தலில் நாடாளுமன்றத்திற்கான வாக்குகளில் எஸ். எஸ். பி. பெற்ற வாக்குகள் 71 லட்சத்து 71000. 1971 நாடாளுமன்றத் தேர்தலில் அதுபெற்ற வாக்குகள் 35 லட்சத்து 54000. 1967-ல் மொத்தம் பதிவான வாக்குகளில் அது 4.92 சதவிகிதம் பெற்றது. இப்பொழுது 1971-ல் அது 2.44 சதவிகிதம் மட்டும் பெற்றது. அதாவது அதன் வெகுஜன ஆதரவு பாதிக்குமேல் குறைந்தது. 36,17,000 வாக்காளர்கள் எஸ். எஸ். பி. யை விட்டுப் பிரிந்து போய்விட்டனர். அது மட்டுமல்ல. அக்கட்சியின் அணிகளில் பெருத்த குழப்பமும் ஆத்திரமும் ஏற்பட்டுள்ளது. ஆயிரக் கணக்கானோர் அக்கட்சியிலிருந்து பிரிந்து இந்திரா காங்கிரசில் ஐக்கியமாகி வருகின்றனர் என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. இவ்வளவுக்கும் பின்னரும் பீகாரில் சிண்டிகேட்—ஜனசங்கம்—சுதந்திராவுடன் கூடிய மந்திரிசபையில் எஸ். எஸ். பியினர் ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். மைசூரில் சிண்டிகேட்டின் துணையுடன் மந்திரிசபை அமைக்க முயற்சிக்கின்றனர் இப்படிப்பட்ட கட்சித் தலைவர்களை எவரும் காப்பாற்ற முடியாது. இவர்கள் திருந்துவதற்குள் இவர்கள் கட்சி அழிந்துவிடும் போலிருக்கிறது.

## பி. எஸ். பி. நிலை

அடுத்து பி. சோ. கட்சியைப் பார்ப்போம். 1967 பொதுத் தேர்தலில் நாடாளுமன்ற வாக்குகளில் பி. சோ. கட்சிக்கு 44,56,000 கிடைத்தது. 1971-ல் பி. சோ. பெற்ற வாக்குகள் 15,99,000; அதாவது 1.03 சதவிகிதம்தான். அது 28,57,000 வாக்குகளை இழந்தது. அகில இந்திய ரீதியில் அது இண்டிகேட்டுக்கு ஆதரவான நிலை எடுத்தது. ஆனால் ஸ்தானங்களுக்கான பேரத்தில் சண்டை வந்ததும் மாநிலத்துக்கு மாநிலம் வெவ்வேறு நிலை எடுத்தது. தமிழகத்தில் இண்டிகேட்டுக்கு ஆதரவு; மைசூரில் சிண்டிகேட் கூட்டணிக்கு ஆதரவு. இப்படிப்பட்ட கோமாளித்தனத்தின் விளைவாக அக்கட்சி அநேகமாக அரசியல் படத்தில் இல்லாத நிலை ஏற்பட்டது. நாடாளுமன்றத்தில் இருந்த 13 ஸ்தானங்கள், இன்று 2 ஆகக் குறுகிவிட்டன. இன்று மைசூரில் அக்கட்சிக்கு இருந்த எம். எல். ஏக்கள் அனைவரும் இண்டிகேட்டுக்குச் சென்றுவிட்டனர்.

தமிழகத்தில் நெல்லை மாவட்டத்தில் அதற்கிருந்த ஊழியர்கள் அனைவரும் அதற்கு முழுக்குப் போட்டுவிட்டு, இண்டிகேட்டில் இணைந்துள்ளனர். கட்சியை உயிருடன் வைத்திருக்க என்ன செய்வது என்று தலைவர்கள் தவிக்கின்றனர். மீண்டும் எஸ். எஸ். பியுடன் இணைந்தால் என்ன என்று பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன!

## வலது கம்யூனிஸ்டுகளின் உண்மை பலம் என்ன?

வலது கம்யூனிஸ்டுகளை எடுத்துக் கொண்டால் ஒரு தோற்றம் தெரிகிறது. 1967-ல் நாடாளுமன்றத்தில் 24 ஸ்தானங்கள் இருந்தன. இப்பொழுதும் 24 ஸ்தானங்கள் பழைய பலத்தைத் தங்க வைத்துக் கொண்டுள்ளார்கள் என்று தோன்றும். இது வெறும் தோற்றமே தவிர வேறில்லை. பீகாரில் கிடைத்த ஸ்தானங்களில் ஒன்று தவிர, பீகாரிலும் பாக்கி அனைத்து மாநிலங்களிலும் கிடைத்த அத்தனை ஸ்தானங்களும் இந்திரா காங்கிரசின் உதவியுடன் கிடைத்தவையே. தமிழகத்தில் கிடைத்த நான்கும் தி.மு.க. இண்டிகேட் துணையினால் கிடைத்தவை. கேரளத்தில் கிடைத்த மூன்றும் இண்டிகேட், கேரள காங்கிரஸ் முஸ்லீம் லீக் ஆகியவைகளின் துணையினால் கிடைத்தவை. மற்றவை எல்லாம் இண்டிகேட் போட்டியிடாமல் இருந்து, ஆதரவு கொடுத்ததால் கிடைத்தவை. பீகாரில் இவர்களுடன் இண்டிகேட் மோதிய ஒரே ஸ்தானத்தில், இண்டிகேட்டின் முக்கியஸ்தர்கள் பலர் இண்டிகேட்டின் வேட்பாளரைக் காலை வாரிவிட்டு, இவர்களை ஆதரித்ததால் கிடைத்தது! ஆக அத்தனை ஸ்தானங்களிலும்—வெற்றி பெற்ற அத்தனை ஸ்தானங்களிலும் இண்டிகேட்டின் உதவி இருந்தது என்று கூறலாம்.

## பல்டி மன்னர்கள்

அவர்களது கொள்கை நிலை என்ன? 1965-ல் கேரளத்தில் முஸ்லீம் லீகைத் தொடக் கூடாது என்று கருதினர். லீகுடன் உறவு கொண்டதால் நம்மையும் தொட முடியாது என்றனர். இதன் மூலம் காங்கிரசுக்கு உதவினர். 1967-ல் கேரளத்தில் மட்டும் நம்மையும் லீகையும் தொட இசைந்தனர். ஆனால் பாக்கி இந்தியா முழுவதிலும் நம்முடன் சேர மறுத்தனர். மேற்கு வங்காளத்தில் பங்களா காங்கிரசுடன் கூடி போட்டி முன்னணி அமைத்தனர். இதன் மூலம் காங்கிரஸ் அதிக இடங்கள் பெற உதவினர். 1967 தேர்த

லுக்குப் பின் பஞ்சாப் உத்திரப் பிரதேசம், பீகார் ஆகிய மாநிலங்களில் சுதந்திரா ஜன சங்கம் ஆகிய கட்சிகளுடன் சேர்ந்து காங்கிரசல்லாத அரசுகள் அமைத்தனர்.

1969 ல் மே வங்கத்தில் நம்முடன் சேர்ந்து காங்கிரசை எதிர்த்து ஒரே கூட்டணிக்கு வந்தனர். 1969 ஜூலை மாதத்தில், கேரளத்தில் இண்டிகேட், சிண்டிகேட் கேரளா காங்கிரஸ் ஆகிய 3 காங்கிரசுடனும் சேர்ந்து நம்மைக் காலை வாரி விட்டனர். இண்டிகேட்டின் தயவுடன் குட்டி முன்னணி ஆட்சி அமைத்தனர். 1970-ல் மே. வங்கத்தில் பங்களா காங்கிரசுடன் சேர்ந்து நம்மைக் காலைவாரி விட்டனர். ஜனாதிபதியின் ஆட்சிக்கு ஏற்பாடு செய்தனர். 1970 செப்டம்பரில் கேரளத்தின் சட்டமன்ற தேர்தல்களில் இண்டிகேட்டுடன் பகிரங்க உறவு கொண்டு இணைந்து போட்டியிட்டனர். இன்று இண்டிகேட்டின் துணையுடன் ஆட்சி நடத்துகின்றனர். மேலும் இண்டிகேட்டும், கேரளா காங்கிரசும் மந்திரிசபையில் பங்கெடுக்க வேண்டும் என்று கெஞ்சிக் கொண்டுள்ளனர்.

அண்மையில் நடந்து முடிந்த தேர்தல்களுக்குப் பின்னர், மே. வங்கத்தில் மூன்று காங்கிரசுடனும் சேர்ந்து இண்டிகேட், சிண்டிகேட், பங்களா காங்கிரஸ் ஆகிய மூன்றுடனும் சேர்ந்து-அஜாய்முகர்ஜியிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்க வேண்டும் என்று கையெழுத்திட்டு கவர்னரிடம் கொடுத்தனர்!

## வலது கம்யூனிஸ்டுகளின் பாலம்

1967-ல் தமிழகத்தில் தி.மு.க.வை ஒரு வலதுசாரி பிற்போக்குக் கட்சி என்றனர். காங்கிரசை எதிர்த்த கூட்டணியில் சேர மறுத்தனர். இன்று 1971-ல் தி. மு. க. இண்டிகேட்டுடன் இணைவதற்கு பாலம் அமைத்துக் கொடுத்து, இரண்டுக்கும் "முற்போக்கு"ப் பட்டம் சூட்டியுள்ளனர். இத்தனை சந்தர்ப்பவாத சதிராட்டத்துக்கும் இடையில், அடி ஆழத்தில் ஒருபோக்கு தெளிவாக இருக்கிறது. அது என்ன? தவிர்க்க முடியாமல் நம்முடன் சேர வேண்டிய சில சமயங்கள் தவிர, நம்மையும் நாம் பிரதிநிதித்துவப்படுத்தும் பாட்டாளி மக்களையும் வஞ்சிப்பதும் எதிர்ப்பதும் எப்படி என்பதே நோக்கமாக ஆகின்றனர். அதே மாதிரி, தவிர்க்க முடியாமல் காங்கிரசை எதிர்க்க வேண்டிய சில சமயங்கள்தவிர, காங்கிரஸ்ஆட்சிக்கு துணை போவது எப்படி என்றே கவலைப்படுகின்றனர்!

## கழுதைதேய்ந்து கட்டெறும்பாகிறது

இதன்விளைவு? அக்கட்சிக்குள் நடுமையான குழுபம் இக்கட்சியில் இருந்து கொண்டே இந்திராவுக்கு 'ஜே' போடுவதைவிட, நேரடியாக இந்திரா காங்கிரசில் சேர்ந்துவிடலாமே என்று மோகன்குமாரமங்கலத்தின் அடிச்சுவட்டைப் பின்பற்றுபவர் அதிகரிக்கின்றனர். மகாராஷ்டிரா எம். எல். ஏ.க்கள் இருவர் இந்திராவுடன் போய் விட்டனர்! பல மாநிலங்களில் அதன் கிளைகள் மே வங்கத்தில் அஜாய்முகர்ஜியை ஆதரிக்கலாகாது என்றும், மார்க்சிஸ்டுகளுடன் சேர்ந்து மந்திரிசபை அமைக்க வேண்டும் என்றும், தலைமைக்குக் கடிதங்கள் எழுதியிருக்கின்றனர். இங்குமங்குமாக சிலர் (டெல்லியில் ஏற்பட்டது போல்) நமது கட்சிக்கு வந்து கொண்டுள்ளனர். இது மட்டுமல்ல. அக்கட்சியின் வெகுஜன அஸ்திவாரம் சுருங்கி வருகிறது. இந்தியாவில் எந்த ஒருநாடாளுமன்ற தொகுதியிலும் சொந்த பலத்தில் ஜெயிக்க முடியாத நிலைக்கு வந்துள்ளனர். 1967 பொதுத்தேர்தலில் அக்கட்சி பெற்ற வாக்குகளைவிட 1971 தேர்தலில் அக்கட்சி சுமார் 6½ லட்சம் வாக்குகள் கம்மியாகப் பெற்றுள்ளது. எல்லா மாநிலங்களிலும் இண்டிகேட்டின் ஆசரவு இருந்தும், தமிழகத்தில் தி. மு. க. வின் துணை இருந்தும், கேரளத்தில் கேரளா காங்கிரஸ் லீக், இண்டிகேட் ஆகியோரின் உதவி இருந்தும் 1971-ல், 1967-ஐ விட வாக்குகள் குறைந்து விட்டன. அதனால்தான் அக்கட்சியின் வெகுஜன ஆதரவு சுருங்கி வருகிறது என்கிறோம்.

## நமது பலம்

இதற்கு மாறாக நமது கட்சி பெற்றுள்ள 25 நாடாளுமன்ற ஸ்தானங்களும் இரண்டு பிற்போக்குக் கூட்டணிகளையும் எதிர்த்துப் பெற்றவை அவைகளில் 24 நமது சொந்த பலத்தைக் கொண்டே பெற்றவை. ஆந்திரத்தில் கிடைத்த ஒன்றில் மட்டும் வலது கம்யூனிஸ்டுகளின் உதவியால் கிடைத்த கொஞ்சம் ஓட்டுக்கள் உண்டு. மலைகள் போல் நின்று மோதிய இரண்டு கூட்டணிகளையும் எதிர்த்து தனி நிலையில் பெற்ற வெற்றிகள் நம்முடையவை. இந்தத் தனி நிலையிலும் 1967-ல் கிடைத்ததைவிட 13 லட்சம் வாக்குகள் நமக்குக் கூடியுள்ளன.

## நமதுவேண்டுகோள்!

இந்நிலையில் எல்லா இடதுசாரி கட்சிகளிடமும் ஜனநாயக கட்சிகளிடமும், அவைகளின் உறுப்பினர்களிடமும் நாம் கூறுவது இதுதான்—

1. ஆளும் வர்க்கங்களின் பிரதான கட்சியான காங்கிரஸ் மீண்டும் கூடுதல் பலத்துடன் நாடாளுமன்றத்தில் வீற்றிருக்கின்றது. சிண்டிகேட் மேலும் சுருங்கும் என்பது திண்ணம். அதன் பரிவாரங்கள் பெரும்பாலும் இந்திராவுடன் சேர்ந்து விடுவார்கள். இந்திரா காந்தியின் இடதுசாரி சாகசங்களும், மேலே நாம் குறிப்பிட்டுள்ள இடதுசாரிக் கட்சிகளின் சந்தர்ப்பவாத நடவடிக்கைகளுமாகச் சேர்ந்து ஆட்டங்கண்டுபோன காங்கிரஸ்ஆட்சியை தற்காலிகமாகவேனும் புத்துயிர் ஊட்டியுள்ளன.

2. மோசமான சந்தர்ப்பவாத நடவடிக்கைகளை மேற்கொண்ட இடதுசாரிக் கட்சிகள் எல்லாம் மிகவும் கடுமையாகப் பாதிக்கப்பட்டு, பொது மக்களின் ஆதரவை இழந்துள்ளன.

3. மக்களின் வாழ்வும் வாழ்க்கைத் தரமும் தாக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. தனக்குக் கிடைத்துள்ள புதிய பலத்தை காங்கிரஸ் அவ்வாறுதான் பயன்படுத்தும் என்பதை இன்னும் உணராதவர்கள் தங்களை இடதுசாரிகள் என்று சொல்லிக்கொள்ளத் தேவையில்லை!

4. எனவே காங்கிரசை எதிர்த்து எல்லா இடதுசாரி, ஜனநாயகக் கட்சிகளும் ஒன்றுசேர வேண்டும் என்ற நமது கட்சியின் அடிப்படை கோரிக்கையை—1964-ல் தனி அமைப்புடன் நமது கட்சி தோன்றிய காலம் முதல் நாம் விடாமல் வற்புறுத்திவரும் கோரிக்கையை ஏற்க முன்வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம். சென்ற ஐந்தாறு ஆண்டுகளின் கசப்பான அனுபவங்களிலிருந்து பாடம் கற்பது அவசியம். சந்தர்ப்பவாத சகதியிலிருந்து வெளியேறவேண்டும். அவசர அவசியமாக வெளியேற வேண்டும். இல்லையேல் உட்குழிந்து அழிந்து போகும் அபாயம் வரும்.



"நாங்கள் கோயில்களுக்கோ தெய்வத்திற்கோ விரோதிகள் அல்ல .........

"இருபது ஆண்டு காலமாக ஓடாததேரை தி. மு. க. ஆட்சியில் ஓடச்செய்தது; கும்பகோணம் மகாமகம் நடந்தது; அதற்கு ஆறு லட்சம் ரூபாய் செலவில் பக்தர்களுக்கு சுற்றுச் சாலை வசதிகள் செய்து கொடுத்தவர் தி. மு. க. ஆட்சியினர். இதையெல்லாம பிராமணர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.......

— முதலமைச்சர் மு. கருணாநிதி பேசியது.

(முரசொலி 18—4—71)

# மதம் என்ற அபினியும் சுயமரியாதை இயக்கத்தினரும்

★ கே. எம்.

மதத்தின் மீது நம்பிக்கையில்லாதவர்கள், மூடநம்பிக்கை அற்றவர்கள், பகுத்தறிவுவாதிகள் "பொருள் முதல்வாதிகள்" என்றெல்லாம் ஒரு காலத்தில் கூறிக்கொண்டவர்கள் "பகுத்தறிவுவாதி"களாக இருப்பதால்தான் சாதி, மதபேதத்தை எதிர்த்துப் போராடுவதாகவும் கூறிக்கொண்டவர்கள்தி.மு.க.வினர்

சாதியப்பாகுபாட்டின்கீழ்த்தட்டில் உள்ளவர்கள் இந்தப் பிரச்சாரத்தை அன்று முழுமையாக நம்பினார்கள். ஆனால் நடந்ததென்ன?

அரிஜன மக்கள் கூலி உயர்வு கோரி போராடியபோது அவர்களை அடக்கி, ஒடுக்கி நடவடிக்கை எடுக்கத்தயங்கவில்லை. இன்றைக்கு எத்தனையோ கிராமங்களில் அரிஜனங்கள்மீது தீண்டாமை என்னும் பண்டைய அடிமைத்தளைகளைப் பூட்டி அநீதி இழைக்கப்படுகின்றது. ஜாதி இந்துக்களின் கிணறுகளில் தண்ணீர் எடுக்கமுடியாது. எடுக்க முயன்றால் பயங்கரவிளைவுகள் ஏற்படும். அவர்களுக்கு சரியான பாதுகாப்பு கொடுக்க ஜாதி, மதபேதங்களை எதிர்ப்பதாகக் கூறும் அரசிடம் உறுதியான திட்டம் எதுவுமில்லை.

இந்துமதக் கோயில் நிர்வாகிகள் அரிஜனங்களை பூசாரிகளாக ஏற்காமல், தங்களது மதவைராக்கியத்தின் படியே சாதிபாகுபாட்டைப் பாதுகாத்துவருகிறார்கள். அதே சமயத்தில் இந்துமத தெய்வங்களில் ஒன்றான தியாகராஜருக்கு தேர் ஓட்டுவதில் தி. மு. க. அரசு பெரும் அக்கறை செலுத்தியதை முதலமைச்சர் கருணாநிதி பெருமையுடன் ஒப்புக்கொள்கிறார்!

இந்து சமுதாயத்தில் சாதிப் பிரிவுகளை நியாயப்படுத்தும்மூலஸ்தானங்கள் இந்துமதக் கோயில்களும் அவைகளில் அனுசரிக்கப்படும் நெறிமுறைகளும் ஆகும்.

எப்பொழுது ஒருவர் இந்துமத வழிபாட்டில் அக்கறை செலுத்துகிறாரோ, அப்பொழுதே அவர் ஏதோ ஒருவகையில் அதில் ஈடுபாடு கொள்வதில் நாட்டம் உடையவராக ஆகிவிடுகிறார். அதன்பிறகு "பகுத்தறிவு", "சுய மரியாதை இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்" என்று கூறிக் கொள்வதெல்லாம் போலித்தனமானவையாகி விடுகின்றன.

"மதம் மக்களுக்கோர்அபினி' என்பது வரலாறு ரீதியாக நிரூபிக்கப்பட்டதொரு உண்மை.

இந்த உலக வாழ்க்கையில்—நாம் வாழும் இந்த சமுதாய வாழ்வில்— ஒரு மனிதன் வாழ முடியாமல் வறுமைக்கு இரையாகி அழியும் காரணம் என்னவென்பதை அவன் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த சமுதாய அமைப்பின் ஆழத்தை அறியும் திறனில்லாத காரணத்தால் தனக்குப் புரியாத ஒரு சக்தி ஆட்டிப் படைக்கிறது என்ற எண்ணத்திற்கு இரையாகிறான். இதன் விளைவாகவே அவன் மதத்திலும் மத வழிபாடுகளிலும் அடைக்கலம் புகுகின்றான்- அபினியை உட்கொண்ட ஒருவன் நிலையை அடைகின்றான்.

ஆனால் இன்றைய சமுதாய நிலைமைகளையும் வர்க்கப் பிரிவுகளையும் ஆழ்ந்துணரும் பகுத்தறிவு உள்ள ஒருவன், தான் வாழமுடியாமைக்குக் காரணம் — வறுமைக்கும் வேலையில்லாக் கொடுமைக்கும் இரையாவதற்கான காரணம்-இன்றைய முதலாளித்துவ, நிலப்பிரபுத்துவ அமைப்புத்தான் என்பதை உணருவான். இந்தக் கருத்தை மக்களிடையே பரப்பி, இந்த சமுதாய அமைப்பை மாற்றப் போராடும் ஒரு புரட்சியாளனாக மாறுவான்.

மதத்திலும், மத வழிபாட்டிலும் மூழ்கி இருக்கும், சுரண்டப்பட்டு ஒடுக்கப்பட்டு முடங்கிக் கிடந்து இருக்கும், சகல மதங்களையும் சாதிகளையும் சார்ந்தவர்களை ஒரே அணியில் திரட்டிப் போராடும்படி வழிகாட்டுவான். இவ்வாறு அவர்கள் ஒன்று சேர்ந்து போராடி முன்னேறுகையில், அவர்களுக்கு தமது மனித சக்தியில் நம்பிக்கை வளர்கிறது. இவ்வாறு தோன்றும் தன்னம்பிக்கை தன் கஷ்டங்களுக்கு முற்பிறப்பின் நல்வினை, தீவினைகளில் நம்பிக்கை கொள்வதை தகர்த்து விடுகின்றன. மனித முயற்சியின் உருவாக்கம்தான் இன்றைய சமுதாய அமைப்பு என்ற உண்மையை தங்கள் சொந்த அனுபவத்தின் மூலம் மக்கள் தெரிந்து கொள்கிறார்கள்.

இத்தகையதொரு வழியில் செல்ல மக்களை வழிநடத்துவதின் மூலமே மதத்திலும் சாதியப் பிரிவினையிலும் நம்பிக்கை கொண்டிருப்பதிலிருந்து மக்களை விடுவிக்க முடியும்.

சோசலிச நாடுகளில் மத நம்பிக்கைகளிலிருந்தும் மூடத்தனமான வழிபாடுகளிலிருந்தும் மிகப் பெரும்பாலான மக்கள் இன்று விடுபட்டு பகுத்தறிவு விஞ்ஞானப் பாதைக்கு வந்ததின் வரலாறு இதுதான்.

"மனிதர்களாகிய உங்களை நாங்கள் நேசிக்கிறோம்; உங்கள் மதத்தை அல்ல. உங்களது முன்னேற்றத்திற்குப் போராடுவதே எங்கள் இலட்சியம். நீங்கள் பின்பற்றும் மதம் என்பது உங்களது சொந்த விவகாரம். ஆனால் எங்களைப் பொறுத்த வரையில் அந்த

மதம் என்பது ஓர் மாயை. தேவையற்ற ஒன்று என்றே கருதுகிறோம். எந்த சுபிட்ச வாழ்வை உங்களது மதத்தின்மூலம் நிரூபிக்கப்படாத 'மறு உலக'த்தில் காணலாம் என்று நீங்கள் நம்புகிறீர்களோ — அதை இங்கே — இந்தப் பூமியிலேயே சர்வமதத்தினரும் சேர்ந்து நின்று போராடுவதின்மூலம் காணலாம்" என்று மத நம்பிக்கையில் ஆழ்ந்துள்ளவர்களிடையே கூறும் மன உறுதியும் தெளிவும் மார்க்சியவாதிகளுக்குத்தான் உண்டு.

ஆனால் மத நம்பிக்கை உள்ளவர்களைப் பார்த்து பயந்து, தேர்தலில் தங்களுக்கு ஓட்டுக் கிடைக்காமல் போய்விடுமோ என்று அஞ்சி, "நாங்கள் மதத்தின் எதிரிகள் அல்ல; மத வழிபாட்டின் எதிரிகள் அல்ல" என்று தி. மு. க. தலைவர்கள் கூறிக்கொள்ள முன் வருவதின் விளைவு என்ன? மதம் என்ற அபினியை மக்கள் உட்கொள்வதில் — அதில் மக்கள் மயங்கிக் கிடப்பதில் — இவர்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றுதான் பொருள்படும்.

எப்பொழுது தான் "மதத்தின் எதிரியல்ல" என்று கூறிக்கொள்ள ஒருவர் முன் வருகிறாரோ, அப்பொழுதே அந்த மதத்தில் இருந்து தோன்றிய ஜாதீயப்பாகுபாடுகளுக்கும் அவர் எதிரி அல்ல என்ற முடிவுக்குத்தான் வரவேண்டும். இந்த வழியில் செல்வதினால்தான் தி. மு. க. வினர் மதத்திற்கும் ஜாதீயப் பிரிவினைக்கும் இரையாக நேரிடுகிறது!

ஆதலால்தான் ஆரம்ப காலத்தில் ஜாதிப் பிரிவினைகளை எதிர்ப்பதாக ஆரம்பித்து, அதன் பின்னர் பிராமண எதிர்ப்பில் மூழ்கி, தேர்தல் நெருங்கும் பொழுதெல்லாம் "மதத்திற்கு நாங்கள் எதிரிகள் அல்ல" என்று பறை சாற்றி, இறுதியில் ஓட்டுக்களுக்காக தாங்கள் "பிராமணர்களுக்கு எதிரியல்ல; நாடார்களுக்கும் எதிரியல்ல" என்று பொதுமேடைகளில் சத்தியம் செய்து கொடுக்கவேண்டிய பரிதாபமான நிலைமைக்கு வந்துள்ளனர்!

மக்கள் எந்த மதத்தையும் பின்பற்றலாம் என்று சொல்வதும் அதில் அரசாங்கம் தலையிடாது என்று சொல்வதும் ஒன்று.

கோயில் கும்பாபிஷேகங்கள், தேரோட்டுதல்கள் போன்றவைகளில் ஈடுபடுதல் தனிப்பட்டவர்களின் விஷயம் என்று கூறுவது ஒன்று. இது மத சார்பில்லாத ஓர் அரசு மேற்கொள்ள வேண்டிய அணுகுமுறை.

ஆனால், "நாம் மதத்திற்கும் எதிரியல்ல; சாதீயப் பிரிவினைகளுக்கும் எதிரியல்ல" என்று சுயமரியாதைக்காரர்கள் என்று சொல்லிக்கொள்ளும் தி. மு. க. வினர் கூறும் பொழுது, அவர்கள் மனிதனை மனிதனாகப் பார்க்காமல் ஜாதீய, மதவாதப் பார்வையில் பார்க்கிறார்கள் என்பது தெளிவு. புரட்சிகரமான,நோக்கத்திற்காக சமுதாய மாறுதலுக்காக பல்வேறு மதத்தினரையும் ஜாதியினரையும் ஒன்றுபடுத்த முடியும் என்ற புரட்சிகரப் பார்வை அவர்களுக்கு இல்லாதது தான் காரணம். அதாவது தி. மு. க. வினர் பொருள் முதல்வாதிகள் அல்ல என்பதுதான் அவர்களது இந்த முரண்பாட்டிற்கு அடிப்படையான காரணம்.

ஒரு மார்க்சியவாதி தான் "மதத்தின் எதிரி; ஜாதீயப் பிரிவினைகளின் எதிரி" என்று சொல்லிக் கொள்ள அஞ்சமாட்டான். ஒவ்வொரு மனிதனும் தான் விரும்பும் மதத்தைப் பின்பற்ற உரிமை உண்டு என்று சொல்லும் அதே சமயத்தில், ஒரு மார்க்சியவாதி, தான் மத வழிபாட்டின் எதிரி என்று சொல்லிக் கொள்ளவும் அஞ்சமாட்டான். ஓட்டுக்காகவோ அல்லது வேறு எந்த சந்தர்ப்பவாத காரணத்திற்காகவோ தன் கொள்கையிலிருந்து பிறழமாட்டான் காரணம் அவன் ஒரு பொருள் முதல்வாதி.

மத, ஜாதீய, வருண. பாகுபாடுகள் என்பவை எல்லாம், மனித வரலாற்றின் வளர்ச்சிப் போக்கில் தோன்றியவை. பொருளாதார, பௌதீக சூழ்நிலை காரணமாகத் தோன்றியவை. குறிப்பாக நிலப்பிரபுத்துவ அடிமை சமுதாய அமைப்பில் தோன்றியவை இந்த மத வழிபாடுகள். இத்தகைய சமுதாய அமைப்பை மாற்றி அமைக்கும் பொழுது, இந்த மாற்றத்திற்கான போராட்டங்கள் நடக்கும் பொழுது, அந்தப் போராட்டத்தில் பல்வேறு மத ஜாதீய பிரிவினர்கள் ஒன்று சேர்ந்து போராடும்பொழுது — மதத்தின் மீதும் ஜாதியின் மீதும் இருக்கும் பிடிப்புகள் தகர்ந்து தரைமட்டமாகிவிடும் என்று உறுதியான நம்பிக்கை உடையவன் மார்க்சியவாதி. ஆனால் தி. மு. க. வினருக்கு இந்தப் பார்வை இல்லாத காரணத்தால்தான் தங்களது ஆரம்பகால கொள்கைகளைக் கைவிட்டு, தாங்கள் "மதத்தின் எதிரியல்ல" என்று சத்தியம் செய்கின்றனர்!



## கடமை பெரிது!

நாம் தொழிலாளி வர்க்கத்தின் கட்சியாகும். ஆகவே, நமது வர்க்கம் முழுமையும் [யுத்தகாலத்திலும் சரி, உள்நாட்டு யுத்தம் நடக்கும் பொழுதும்சரி,] நம் கட்சியின் தலைமையில் செயல்பட வேண்டும். நம் வர்க்கத்துக்கு, எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூரம் நாம் நெருக்கமாக இருக்கவேண்டும்.

ஆனால், அதே சமயத்தில் தொழிலாளி வர்க்கம் முழுமையும் — அல்லது அதன் மிகப் பெரும்பான்மையினர், நம் கட்சியின் — அதாவது தொழிலாளிவர்க்கத்தின்முன்னணிப் படையின் உணர்வின் மட்டத்திற்கோ உயர்ந்துவிடுவர் என்று எண்ணுவது பகற்கனவாகும். இன்றைய முதலாளித்துவ அமைப்பின் கீழ், சாதாரண தொழிற்சங்கங்களிற்கூட [அவை மிக மிகச் சாதாரணமானவை அதே சமயத்தில்பின் தங்கிய தொழிலாளர்கள் புரிந்து ஏற்றுக்கொள்ளத்தக்கவை] தொழிலாளர்வர்க்கம் முழுமையும், அல்லது அதன் மிகப் பெரும்பான்மையும் சேருவதில்லை.

நம் கட்சி உறுப்பினராக உள்ளவருக்கும், முன்னணிப்படையை நோக்கி வரக்கூடிய வெகுஜனப்பகுதி முழுமைக்கும் இடையேயுள்ள வித்தியாசத்தைப் பார்க்க மறுப்பது, மிக உயர்ந்த அரசியல் மட்டத்திற்கு சாதாரணமானவர்களை உயர்த்துவது முன்னணிப்படையாயிருக்கும் கட்சியின் தொடர்ந்த கடமை என்பதை பார்க்க மறுப்பதும், நம்மை நாமே ஏமாற்றிக்கொண்டு, நம்முன்னால் உள்ள கடமைகளின் பரிணாமத்தை உணராமல், அவைகளைச் சுருக்கி, குறுக்கிவிடச் செய்யும் முயற்சியே ஆகும்.

— வி. ஐ. லெனின் எழுதிய 'சாண் உயர்ந்தால் முழம் சறுக்குவது' என்ற நூலில்



# வங்கதேசமக்களின் எழுச்சி!

என். ராம்

கையில் கிடைக்கும் எந்தப் பொருளையும் ஆயுதமாகப் பாவித்துக், காட்டுமிராண்டித்தனமான ராணுவத்தை எதிர்த்துப் போரிடும் மக்கள்—ஜனநாயக உரிமைக்காகவும், தங்கள் தேசிய தனித்தன்மையைக் காப்பதற்காகவும் போரிடும் மக்கள்—வங்க தேசம் என்பது—வலிமைமிக்க அதிகாரவர்க்கத்தினர் ஆயுதங்களை எதிர்த்த மக்கள்—அடக்குமுறையை எதிர்த்த மக்களின் சர்வபரித் தியாகம்—துப்பாக்கிகளையும் டாங்கிகளையும், போர் விமானங்களையும் எதிர்த்த மக்களின் வெறும் கைகள் — இவற்றின் புராணம் பாடும் காவியம்! வங்க தேசம் என்பது ரத்தத்தில் எழுதிய ஒரு தேசிய இனத்தின் கேள்வி—சுதந்திரமும், ஜனநாயகமும், தேர்தல் கூட்டங்களாலோ, தேர்தல் அறிக்கைகளாலோ, பெறமுடியாது—மாறாக அதிகார வர்க்கத்தையும், அதன் நிர்வாகத்தையும், நேருக்கு நேர் சந்தித்து தெருக்களிலும் வயல்வெளிகளிலும் நடக்கும் போராட்டங்கள் மூலமே பெறமுடியும் என்பதைக் காட்டுவது வங்க தேசம்.

## ஆதரவு ஆர்ப்பாட்டங்கள்!

நமக்குக் கிடைக்கும் குறைந்த அளவு செய்திகள்கூட, கொடூரமான பாகிஸ்தான் ராணுவத்திற்கு எவ்வளவு பெரிய எதிர்ப்பை, மக்கள் தருகிறார்கள் என்பதைத் தெரியப்படுத்துகிறது. வயது முதிர்ந்தவரும், பெண்களும், சிறுவர்களும் தங்களை ஈடுபடுத்திக்கொள்கிறார்கள், ஆயிரக்கணக்கான ஊர்வலமும், ஆர்ப்பாட்டமும் நடத்தப்படுகிறது.

இந்தப் பேரெழுச்சி, இந்திய மக்களிடமும், துடிப்பை ஏற்படுத்தி இருக்கிறது. மேற்குவங்கம், திரிபுரா மாநிலங்களில், தொழிலாளர்களும், விவசாயிகளும், மாணவர்களும், மத்தியதர உழைப்பாளிகளும், தங்கள் ஒற்றுமை உணர்வை வங்க மக்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டு ஆர்ப்பாட்டங்களை நடத்தினர். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியால் (மார்க்ஸிஸ்ட்) தலைமைதாங்கி நடத்தப்பட்ட ஒரு பொதுவேலைநிறுத்தம், வங்க மக்களின் உணர்வுபூர்வமான ஈடுபாட்டைத் தெரிவித்தது.

## சந்தர்ப்பவாத சதிராட்டம்

ஆனால், மக்களின் இந்த உணர்வுகளுக்கும், இந்திய அதிகார வர்க்கத்தின் போக்கிற்கும், இடைவெளி நிறைய இருக்கிறது. ஜனசங்கமும், சிண்டிகேட்டும் முதலைக்கண்ணீர் வடித்து, ஆதரவு அளிப்பதாகச் சொல்கின்றன. அவர்கள் தங்களுடைய பாகிஸ்தான் எதிர்ப்பு உணர்வுக்கு வடிகால் தேடுகிறார்கள்.

மக்களுடைய உணர்வைக் குறிப்பறிந்து, ஆளும் காங்கிரஸ் வங்க தேசப் பிரச்சினையில் தன்னுடைய சுயநலத்திற்குப் பயன்படுத்தப் பார்க்கிறது.



முஜிபுர்ரஹ்மான்

மக்களின் ஏகோபித்த உணர்வுக்கு எதிராக, இந்திராகாந்தி அரசு, வங்க தேசத்தை அங்கீகரிக்க மறுக்கிறது. இந்தப் பெருமுதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ இந்திய அரசு, தேசிய இனங்களின், எழுச்சியைக் கண்டு, சந்தர்ப்பவாத சதிராடுகிறது.

பாகிஸ்தான் அரசின் சுரண்டலையும், கொடூரத்தையும் கண்டிக்கும் இந்திய அரசு அதே முறையில், அமைந்த இந்திய அரசின் அமைப்பு, பல தேசிய இனங்களைக்கொண்ட இந்திய நாட்டிற்கு போதுமானது என்று கூறுகிறது.

## அரசியல் பின்னல்கள்

இந்திய-பாகிஸ்தான் துணைக்கண்டத்தின் அரசியல் சங்கிலியில், மிகவும் பலகீனமான கண்ணி, வங்க தேசம். இதனால்தான் இந்திய அரசும், நிலப்பிரபுக்களும், பயப்படுகிறார்கள்.

இரண்டாவது உலக யுத்தம் முடிந்து, தேசிய சோசலிச சக்திகள் சோவியத் குடியரசின் தலைமையில் பலம் பெற்றதும், ஏகாதிபத்தியம், வலுவிழந்தது. ஆயிரக்கணக்கானோர் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடினார்கள். ராணுவமும், (ஆர் ஐ என்.) கப்பல்படைக் கலகத்தின் மூலம் தன்னை ஈடுபடுத்திக்கொண்டது. இந்த துணிவுமிக்க இந்திய மக்களைக்கண்டு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், நடுங்கி, தன்னுடைய பொருளாதார நலனைக் காப்பாற்ற, ஒரு ஏற்பாட்டை அறிவித்தது. பெருமுதலாளித்துவ, நிலப்பிரபுத்துவக் கட்சிகளின் தலைவர்களான காந்தி, நேரு, படேல், ஜின்னா போன்றவர்கள், இந்த இனச்சலுகையை ஏற்றுக் கொள்ள இணங்கினார்கள். சுதேசிகளுக்கு அதிகாரம் என்ன? "மௌண்ட்பாட்டன் திட்டம்" வந்தது. இந்தத் திட்டம் பெருமுதலாளித்துவ-நிலப்பிரபுத்வ அரசு, ஏகாதிபத்தியத்தை மாற்றி, அதே சுரண்டலை தொடர ஏற்பாடு செய்தது. வங்கதேசம், இந்தச் சங்கிலியை துண்டிக்க போராடுகிறது இன்று.

பாகிஸ்தானின் 21-வது சுதந்திர தினத்தைக் கொண்டாடும்போது, டாக்காவிலிருந்துவரும் "சங்பாத்" பத்திரிகை எழுதியது; "லட்சக் கணக்கான மக்கள், பட்டினிகிடக்கும்போது சுதந்திரம் என்பது பொய்" என்று. முற்போக்கு எண்ணம்கொண்ட, கிழக்கு, மேற்கு பாகிஸ்தான் மக்கள், இந்த நிலைமையின் அடிவேரைத் தேட ஆரம்பித்தார்கள். இந்தியாவைப் போலவே நிலப்பிரபுத்துவ, ஏகபோக, வெளி மூலதன அமைப்பால் ஏற்பட்டது தான் என்று கண்டார்கள். ஏற்றத் தாழ்வுள்ள, மூலதன வளர்ச்சி, முதலாளித்துவ ஆட்சி இன்னும் தங்களுக்கு கஷ்டங்களை ஏற்படுத்தும் என்பதைப் புரிந்துகொண்டார்கள்.

வங்க தேசம், பாகிஸ்தானின் மூன்றில் இரண்டு பங்கு, ஏற்றுமதியைச் செய்கிறது. ஆனால், பாகிஸ்தானின் இறக்குமதியில் பாதிக்குக் குறைவாகப்பெறுகிறது. வளர்ச்சித் திட்டங்களுக்கும், பாதிக்கும்

குறைவுதான் கிடைக்கிறது. வாங்கும் பொருட்கள் கராச்சி துறைமுகத்தில் இறக்கப்பட்டு, அதிக விலைக்கு, வங்காள தேசத்தில் விற்கப்படுகிறது.

58 சதம் மக்களைக்கொண்ட வங்கம், ராணுவத்தில் 8 சதம் பெறுகிறது. கல்வி அறிவில்லாதவர்கள் 84 சதம். அடிப்படைக் கல்வி நிலையங்கள் குறைக்கப்பட்டுவிட்டன. 75 சதம் குழந்தைகள், தங்கள் ஆதாரக் கல்வியை முடிக்குமுன்பே, பள்ளியிலிருந்து விலக்கப்படுகிறார்கள்.

## தேசிய இனத்தை அடக்கும் ஒரு சரித்திரம்

1947 ம் ஆண்டிலிருந்தே, வங்க தேசிய இனத்தின் தனித்தன்மையைக் குழிதோண்டிப் புதைக்க ஆரம்பித்தனர். ஜின்னாவிலிருந்து தொடங்கி, வங்கமொழியில் இடம் பிரிக்கப்பட்டு, "உருது" திணிக்கப்பட்டது.

1952 ல் வங்க எழுத்து மாற்றப்பட்டு, உருது எழுத்துக்கள் கொண்டுவரப்பட்டபோது மக்கள் கிளர்ச்சி செய்தார்கள்; 26 மாணவர்கள் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். 1952 பிப்ரவரி 21 ம் நாள், வங்க மொழி, நாட்டின் இரண்டு தேசிய மொழிகளில் ஒன்றாகியது. பிப்ரவரி 21 ம் நாள், தியாகிகள் தினமாகியது.

1954 ல் நடந்த தேர்தலில், அவாமி லீக்கும், கிருஷிக் லோக் கட்சியும், கூட்டணி அமைத்து வெற்றிகண்டது. இந்தக் கூட்டணி பாகிஸ்தான்—அமெரிக்க ராணுவ ஒப்பந்தத்தை எதிர்த்தது. பஸலுல் ஹக், கிருஷக் கட்சியின் தலைவர், முதன்மந்திரி ஆனார்.

ஆனால் பாகிஸ்தான் ஆளும் வர்க்கம், இந்தக் கூட்டணி அரசை கவிழ்க்க முயற்சித்து வெற்றி கண்டது. மந்திரிசபை, கம்யூனிஸ்டுகளையும், பாகிஸ்தான் எதிர்ப்பவாதிகளையும் பாதுகாக்கிறது என்று குற்றம் சாட்டி நீக்கியது. (இந்த நிகழ்ச்சியை இந்திய அரசு அக்கறையோடும், அறிவுத்தாகத்தோடும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். 1959-ல், கேரளாவில் ஈ. எம். எஸ். மந்திரிசபையை நீக்க அவர்கள் இந்தப் புதிய அறிவை உபயோகப்படுத்தினார்கள்.)

சில மந்திரி பதவிக்காகவும், நிர்வாகச் சலுகைகளுக்காகவும், தங்களுக்குத் துரோகமிழைத்த, மண்டியிட்ட, "ஹக்"கை மக்கள் வெறுப்போடும், கலக்கத்தோடும், கவனித்தார்கள்.

இந்தியாவைப் போல் நீதி விசாரணையின்றி கைதுசெய்யப்பட்டு, அரசியல் அடக்குமுறை வங்கத்தில் நடந்தது. இருபுறமும் கொண்டு கிழக்கு வங்கம், ஆட்சி செய்யப்பட்டது.

ஜெனரல் இஸ்கந்தர் மிர்ஜா, பாகிஸ்தானின் மிகப்பெரிய புள்ளியானார். லஞ்சம், கொள்ளை லாபம், ஊழல், அத்தனையும் உச்சகட்டத்தை அடைந்தது. ஜனநாயகம் சரிந்து ஆளும் வர்க்கம் மிகவும் கேவலமான நிலை அடைந்தது; ஆனால், ஸ்தாபன ரீதியான ஜனநாயக இயக்கம் இல்லாததால், நிலைமை ஒரு "அரண்மனைப் புரட்சியில்" முடிந்தது.

## அயூப்கான் சகாப்தம்

1958-ம் ஆண்டு, அயூப்கான் கோஷ்டி, ஆட்சியைக் கைப்பற்றி ராணுவ சட்டத்தை அமுலாக்கியது. புதிய சர்வாதிகாரத்தின் தேசிய வங்காளத்தில் நடத்திய—அடக்குமுறை, சுயாட்சிக் கோரிக்கையை பாகிஸ்தான் முழுவதும், வங்காளம், பலுசிஸ்தானம், சிந்து, பக்தூனிஸ்தான் முழுவதும் கிளம்பியது.

1965-ம் ஆண்டு இந்திய—பாகிஸ்தான் யுத்தம் எப்படி இந்திய அரசாங்கத்திற்கு ஜனநாயக இயக்கத்தையும், சிறுபான்மையினரையும், அடக்க வாய்ப்பளித்ததோ அதே மாதிரி அயூப் ஆட்சிக்கும் புதிய சந்தர்ப்பத்தை அளித்தது. காங்கிரஸின் மறைமுக ஆதரவோடு ஜனசங்கம் "இந்திய மயமாக்குதல்" என்ற கோஷத்தை, முஸ்லீம் மக்களுக்கு எதிராகக் கொடுத்தது.

பாகிஸ்தானின், கவர்னர் மோனம் கான் "நாங்கள் எங்கள் கலாசாரத்தில் வேறு எதுவும் நடப்பதை அனுமதிக்கப் போவதில்லை" என்று பிரகடனம் செய்தார். டாக்காவின், மௌலானா பஷானியும், முஜுபிர் ரஹ்மானும், அயூபின் இந்த முயற்சிக்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். வங்காளிகளின் அரசியல் இயக்கம், அடக்குமுறையின் மத்தியில், வளர ஆரம்பித்தது.

1966-ம் ஆண்டு பாகிஸ்தானின் அரசியல் நீதித் துறையில், மிகப் பெரிய மாற்றம் ஏற்படுத்தும் தன் 'ஆறு அம்ச" கோரிக்கையை வெளியிட்டார். மக்களின் ஏகோபித்த வரவேற்பைக் கண்ட அயூப் அரசு, "இந்தகோரிக்கைபிரிவினையை அடிப்படையாகக் கொண்டது" என்று கூறி, முஜுபுர்ரஹ்மானைக் கைது செய்தது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பாணியில், அயூப்கான் போட்ட "அகர்தலா சதி வழக்கு" மக்களின் பேரெழுச்சியால், பிப்ரவரி 1968-ம் ஆண்டு கைவிடப்பட்டது.

சுரண்டப்பட்ட, அடக்கப்பட்ட மக்கள்—குறிப்பாக கிழக்கு வங்காளிகள், வெகுஜன இயக்கத்தை நடத்தினார்கள் எட்டுக்கட்சிகளைக்கொண்ட 'ஜனநாயகச் செயற் குழு" ஒன்று அயூப் அரசை அகற்ற அமைக்கப்பட்டது. அதிகார வர்க்கம், அதைக் குலைக்கச் செய்த முயற்சிகள், மக்களின் ஏகோபித்த சக்தியால் தடுக்கப்பட்டன. இந்த வெகுஜன இயக்கம் பல வெறுக்கப்பட்ட அதிகாரிகளை வெளியேற்றியது. வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை என்ற முறையில், ஒரு பாராளுமன்ற அரசை நிறுவச் செய்தது. கடைசியாக அயூப்கானையும் விரட்டியது.

இதன் பலனைப் பெற்ற யாஹ்யாகான சுத்தமான நிர்வாகத்தையும், ஜனநாயகத்தையும், நிலையான ஆட்சியையும் வழங்குவதாகக் கூறினார்.

1970-ம் ஆண்டு நடைபெற்ற தேர்தல் மத்திய ஆட்சியின் கொள்கையை எதிர்த்து வங்க மக்களின் தீர்ப்பைக் கொடுத்தது.

உண்மையான எதிர்க்கட்சிகளின் அரசை அனுமதிக்க இந்திய அரசு அனுமதிக்காமல் இருப்பதை மேற்கு வங்க, கேரள மக்கள் புரிந்துகொண்டதைப்போல, பாகிஸ்தானிலும் எதிர்க்கட்சிகளின் கையில் அரசை ஒப்படைக்க மறுத்ததை மக்கள் புரிந்து கொண்டனர். எப்படி பாகிஸ்தான் ராணுவம் பெரும்பான்மையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளிடம் அரசை ஒப்படைக்க மறுத்தது என்பதும் வங்க தேசத்தின் வரலாற்றில் ஒரு பகுதியாகிவிட்டது.

யாஹ்யாகான் கிழக்கு வங்கத்திற்கு வந்துபேச நிர்ப்பந்திக்கப்பட்டார் ரஹ்மானும், யாஹ்யாகானும் பேச்சு வார்த்தை நடத்தும்போது லட்சக் கணக்கான மக்கள் 'முஜாபீர், எங்களுக்குத் துரோகமிழைக்காதே" என்று கோஷித்

தார்கள். ஆனால் யாஹயாகான் காலம் கடத்துவதற்காகவும், ராணுவத்தின் வரவுக்காகவும் செய்த ஏற்பாடு இது என்பது வெட்ட வெளிச்சமாகியது;

பேச்சு வார்த்தையைத் திடீரென்று முறித்து அதற்கான பழியை ரஹ்மான் மீது போட்டார்.

ராணுவச்சட்டம் அமுல் நடத்தப்பட்டு அரசியல் கட்சிகள் தடை செய்யப்பட்டது; வங்கிகள் முடக்கப்பட்டது; பத்திரிகை சுதந்திரம் பறிக்கப்பட்டது; ராணுவம் சுட ஆரம்பித்தது.

இந்தக் கொடுமைக்கும் அரக்கத் தனத்திற்கும் உவமையாக இந்தோசீனாவில், அமெரிக்கா நடத்தும் நடவடிக்கைகளைக் கூறலாம்.

பாதுகாப்பற்ற மக்கள் மீது குண்டுமாரி பொழிகிறது— அரசு ஊழியர்கள் நிறுத்திவைக்கப்பட்டு சுடப்படுகிறார்கள்— பெண்களும் சிறுமிகளும் தாங்கொணாக் கொடுமைகளுக்கும் மானபங்கத்திற்கும் ஆளாகிறார்கள்.

## தொழிலாளி வர்க்கமும், கட்சிகளும்— வங்கதேசத்தின்பால் இவர்கள் மனப்பான்மையும்

இந்த மேதின மலரில், குறிப்பாக பாட்டாளி வர்க்கத்தின் மனப்பான்மையை வங்கதேச மக்களின், சுதந்திர ஜனநாயகத்திற்கான போராட்டத்தின்பால் எப்படி இருக்கவேண்டும் என்று நாம் பரிசீலிக்கவேண்டும்.

முதலில் நாம் ஒரு வார்த்தையை மட்டும் புரிந்து கொள்ளவேண்டும்:

"தேசம் என்பது சரித்திர பூர்வமாகப் படைக்கப்பட்ட நிலையான மக்கள் சமூகத்தைக் கொண்ட ஒரே மொழியைக்கொண்ட ஒரே பகுதியும், பொருளாதார வாழ்வு மனப் பான்மையை வெளிப்படுத்தும் பண்பாட்டைக்கொண்டதுமான இந்த எல்லா குணத்தையும் கொண்ட ஒன்று தான் தேசம் ஆகும்" என்று ஸ்டாலின் கூறினர்.

நாம், சரித்திரத்தையும், அதன் தோற்றத்தையும் காணவேண்டுவது முக்கியம்.

ஆசியாவில்—குறிப்பாக, இந்தியா, பாகிஸ்தானில் நிலபிரபுத்துவமுறை ஒழிக்கப்படுவதற்கு முன்பு— முதலாளித்துவம், பூரண வளர்ச்சி அடையா முன்பு, தேசிய இனங்கள் பின்னல் ஏகாதிபத்தியம் தள்ளப்பட்டபோது புதிய அரசுகளை அமைத்து சுதேசிகளையில் அதிகாரம் கொடுக்கப்பட்டது. வர்த்தகமும், தொடர்புகளும் வரை, பெரிய நகரங்களும், குடியிருப்புகளும் தோன்ற முதலாளித்துவம் வளர, வர்க்க முரண்பாடுகள் கூர்மையடைய பின் தள்ளப்பட்ட தேசிய இனங்கள் செயலில் இறங்க ஆரம்பித்தன. மொழிவாரி மாநிலம் என்ற கோஷமும், காஷ்மீரில் சுயநிர்ணய உரிமை கோரிக்கையும் நாகா மிஸோ மக்களின் சுதந்திரக் குரலும், கிழக்கு வங்க சிந்து பலுசி பக்கதுன் மக்களின் சுய ஆட்சிக் கோரிக்கையும் இன்றைய வங்க தேசத்தின் போராட்டமும் இந்த புதிய உணர்வுகளை [illegible] பிரதிபலிப்புகளைத்தான் காட்டுகிறது.

தேசம் புதிய சுதந்திர வாழ்வை பருக நினைக்கும் போது அது, முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ அரசால் தடுக்கப்படுகிறது.

தேசிய இனங்களின் அடக்கு முறைக்கு எதிராக, போர்க்கொடி உயர்த்துவதுதான் பாட்டாளி வர்க்கக் கட்சியின் கடமையாக இருக்க முடியும்.

"தேசிய இனங்களின் சரித்திர பூர்வமான உரிமைகளை" அங்கீகரிக்க வேண்டும்.

பிரபுத்துவ சோம்பேறித்தனத்தையும் அடக்குமுறையையும், எதிர்க்கும் மக்களின் எழுச்சி, ஜனநாயகமானது, முற்போக்கானது.

தொழிலாளிகள், தங்கள் சக தொழிலாளர்களோடு சேர்ந்த சர்வ தேசியப்படையை, பிற்போக்கை எதிர்த்து நிறுவுவதில் ஆர்வமுள்ளவர்களாக இருப்பதால் அவர்கள் "அதி தீவிரம்; பிரிவினை" என்ற சொற்களைக்கண்டு பயப்படவில்லை.

இந்தப்பிரச்சனைகள் மாநாட்டுப் பந்தலிலோ சட்டபூர்வமான வார்த்தைகளிலோ, அல்லது உள்நாட்டு விவகாரம் என்று கூறிவிடுவதாலோ முடியாது என்பது பாட்டாளி வர்க்கத்திற்குத் தெரியும். ஆகவேதான், அவர்கள் துணிந்து, சுயநிர்ணய உரிமையைக் கேட்கிறார்கள்.

"சுயநிர்ணய உரிமை என்பது அந்த தேசம் மட்டும்தான், அதன் போக்கை நிர்ணயிக்க உரிமையுள்ளது. வேறுயாரும், பலாத்காரமாக, அதன் தேச வாழ்வில் தலையிட உரிமை கிடையாது. அதன் பள்ளிகளையும், ஸ்தாபனங்களையும் அழிக்க, பழக்கத்தையும் கலாச்சாரத்தையும் குலைக்க, மொழியை மாற்ற வேறு எவர்க்கும் உரிமை கிடையாது" என்று ஸ்டாலின் கூறினர்.

ஸ்டாலினின் இந்தக்கூற்று வங்க தேசத்திற்கு, கச்சிதமாய்ப் பொருந்துகிறது.

இந்த சுயநிர்ணய உரிமை ஒன்றுக்குத்தான் இந்திய அரசு பயப்படுகிறது. இந்திய அரசு ஜனநாயகம் என்றும், பாகிஸ்தான். ராணுவம் என்றும், ஆண்டுவரும் அரசுகள்,

"தேசிய இனங்கள்" என்றுவரும் போது ஒரே நிலைமை எடுப்பதை யாரும் மறுக்கமுடியுமா?

காஷ்மீர் மக்களின் வெகுஜன இயக்கத்தை ஒடுக்கும் அரசு, சுயநிர்ணய இயக்கத்தை தடைசெய்யும் அரசு தலைவர்களை சிறைப்படுத்தி வெளியேற்றும் அரசு, காட்டுமிராண்டித்தனமாக அடக்கும் அரசு வெகுஜன அரசாங்கங்களை கவிழ்க்கும் அரசு, ராணுவம், போலீசைக் கொண்டு, ஒரு மக்கள் அரசை வங்கத்தில் ஏற்பட விடாமல் செய்த அரசு—

இத்தகைய அரசுக்கு, வங்க மக்களுடன், உண்மையான ஒன்றுபட்ட உணர்வைக் காட்ட என்ன தகுதியிருக்கிறது?

வங்க தேச அரசை அங்கீகரிப்பது என்பது ..

சுயநிர்ணய உரிமையை அங்கீகரிப்பதாகும்—தேசிய இனங்களிலும், சிறுபான்மையினரும் ஒடுக்கப்படுகிறார்கள் என்பதை அங்கீகரிப்பதாகும்—மொத்தமாக, கொள்கையை அடிப்படையாகக்கொண்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில், நடக்கும் வெகுஜனஇயக்கத்தை அங்கீகரிப்பதாகும். வங்க தேசம்— சுதந்திரத்திற்குப் பிறகு, இந்தியாவும்—பாகிஸ்தானும்—சென்ற பாதையின் கோரத்தைக் காட்டுவதாகும்—

வங்கதேசமக்கள் இன்று அதிகார வர்க்கத்தை எதிர்த்து போராடுகிறார்கள்—நாளை இந்தியாவின் பல தேசிய இனங்கள்தங்கள் உரிமைக்குக் குரல் கொடுப்பார்கள்—

"வங்கதேசம்" என்ற சொல்லில் மிக முக்கியத்துவம் வாய்ந்த பொருள் இதுதான்.

# உழைக்கும் பெண்களின் இன்றைய நிலை!

உழைக்கும் பெண்கள், நமது நாட்டின் சமூகத்திலும் பொருளாதாரத்திலும் திரட்டப்படாத ஒரு வலுவான சக்தியாக விளங்குகின்றனர். 1961-ம் ஆண்டு ஜனகணிப்பு கணக்குப்படி நமது நாட்டின் மொத்த ஜனத்தொகை 43 கோடி 80 லட்சமாகும். இதில் 21 கோடி 20—லட்சம் அதாவது செம்பாதி பெண்குலமாகும். மொத்த பெண்கள் எண்ணிக்கையில் 28 சதவிகிதம் பேர் உழைக்கும் பெண்களாகும். விவசாயம், தோட்டத்தொழில், பீடி, கயறு, முந்திரி, கைத்தறி, தீப்பட்டி, ரப்பர், பஞ்சாலை, மற்றும் அலுவலகங்கள், மருத்துவ நிலையங்களிலும் மற்றும் ஆசிரியைகளாகவும் பெண்கள் பணி புரிகின்றனர்.

இத்தகைய பலதரமான தொழில்களில் அவர்கள் வேலை செய்தாலும் அவர்களில் பெரும்பகுதியினர்—சுமார் 80 சதவிகிதம் பேர் விவசாயத்தில் தான் ஈடுபட்டுள்ளனர். தொழிற்சாலை விதிகளுக்குட்பட்ட தொழிற்சாலைகளில் 10 சதவிகிதம் பெண்கள் தான் பணிபுரிகின்றனர். பஞ்சாலைகளில் மூன்றில் ஒரு பகுதியினர் பெண்களாகும். தென்னிந்திய தேயிலை காபித்தோட்டங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களில் 50 சத விகிதத்துக்கு மேல் பெண்களாகும்.

இப்படி நமது நாட்டின் சமூக பொருளாதாரத்தின் ஒரு பிரதான சக்தியாக விளங்கும் தாய்குலத்தின் சமூக பொருளாதார பிரச்னைகளுக்கு தீர்வு காணாமல், நாட்டின் முன்னேற்றம் குறித்தும் சமூக பொருளாதார விடுதலை குறித்தும் விடிய விடிய பேசுவதால் பயனில்லை.

## சமவேலைக்கு சம சம்பள மறுப்பு!

உழைக்கும் பெண்களின் பிரதானமான பிரச்னைகள் என்ன என்பதைப் பார்ப்போம். முதல் அநீதி, சம வேலைக்கு சம சம்பளம் கொடுக்க மறுப்பதாகும் ஒரே வேலையைச் செய்தாலும் அந்த வேலைக்கென்று நிர்ணயிக்கப்பட்ட கூலியைக் கொடுக்காமல் பெண்கள் என்ற ஒரே காரணத்திற்காக ஆண்களை விட குறைவான கூலி கொடுக்கப்படுகிறது. இந்த அநீதியும் பாகு



பாப்பா உமாநாத்

பாடும் விவசாயம், தோட்டத் தொழில், கட்டிடத் தொழில் கல்லுடைக்கும் தொழில் போன்றவைகளில் பகிரங்கமாகவே அமுலில் உள்ளதைப் பார்க்க முடியும்.

தமிழகத்தில் அரசாங்க கணக்குப்படியே விவசாயத்தில் சராசரி நாள் கூலி நிலவரத்தினைப் பார்ப்போம்:

நாற்று நடுதல்

| | | |
|---|---|---|
| ஆண்கள் | ... | 91 காசுகள் |
| பெண்கள் | ... | 45 ,, |

களை எடுத்தல்

| | | |
|---|---|---|
| ஆண்கள் | ... | 61 ,, |
| பெண்கள் | ... | 45 ,, |

அறுவடைக்கு

| | | |
|---|---|---|
| ஆண்கள் | ... | 81 ,, |
| பெண்கள் | ... | 49 ,, |

1964-ம் ஆண்டில் தமிழகத்தில் முந்திரி தொழிலில் ஆண்களுக்கு நாளொன்றுக்கு ஒரு ரூபாய் 87 காசுகள் என்றால், பெண்களுக்கு ஒரு ரூபாய் 25 காசுகளாகும். இந்தியாவில் 1964-ம் ஆண்டில் கல்லுடைக்கும் தொழிலில் ஆண்களுக்கு ரூ. 1—75 என்றால் பெண்களுக்கு நாளொன்றுக்கு ரூ 1—50 ஆகும். குறைந்தபட்ச கூலி சட்டத்தின் கீழ், அரசாங்கமே கூலியை நிர்ணயிக்கும்போது, ஒரே வேலையைச் செய்யும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வித்தியாசமான கூலியைத்தான் நிர்ணயிக்கின்றனர். தஞ்சை மாவட்ட விவசாய இயக்க எழுச்சியின் விளைவாக, விவசாயத் தொழிலாளர்களுக்கு கூலி நிர்ணயிப்பதற்காக திரு- கணபதியாபிள்ளை கமிஷன்கூட ஆண், பெண் பாகுபாட்டின் அடிப்படையில்தான் கூலியை சிபாரிசு செய்துள்ளது. "மங்கையராகப் பிறப்பதற்கு நல்ல மாதவம் செய்திட வேண்டுமம்மா" என்று பெருமிதப்படுகிறார், கவிமணி. ஆனால், மங்கையராக இருப்பதினாலேயே கூலி குறைக்கப்பட்டு வயிற்றிலடிக்கும் கொடுமை இன்றைய சமுதாய நீதியாக அனுமதிக்கப்படுகிறது. சம வேலைக்கு சம கூலி மறுப்பதற்கு என்ன நியாயம் இருக்கமுடியும்? கழனியிலே இறங்கி கால்கடுக்க நின்று நெற்கதிர்களை அறுவடை செய்கின்றனர் ஆண்களும் பெண்களும், ஆண்களுக்கு அதிககூலியும் பெண்களுக்கு அதைவிட குறைவான கூலியும் தரப்படுகிறதே! ஏன்? ஆண்கள் அறுவடை செய்தால் அது நெல்லாகவும், பெண்கள் அறுவடை செய்தால் அது வெறும் புல்லாகவும் மாறிவிடுகிறதா?

சம வேலைக்கு சம கூலி நிர்ணயம் செய்யப்பட்டுள்ள சில தொழில்களிலும் கூட இந்தப் பாகுபாடு தொடர்கிறது. "தொழில் செய்யும் பெண்கள்" என்ற தலைப்பில் மத்திய அரசு 1964-ம் ஆண்டில் வெளியிட்ட ஒரு பிரசுரத்தில் பஞ்சாலைகளில் பெண் ரீலர்களைவிட ஆண் ரீலர்களுக்கு சராசரி வருமானம் 33.2 சத விகிதமும், காகிதப்பொருள் உற்பத்தித் தொழிலில் பெண் பிணிநர்களைவிட ஆண் பிணிநர்களின் வருமானம் 97.8 கூடுதலாகவும், உலோக சுரங்கத்தொழிலில் பெண் மஸ்தூர்களைவிட, ஆண் மஸ்தூர்களுக்கு சராசரி வருமானம் 18 சத விகிதம் கூடுதலெனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. பல்வேறு தொழிற்சட்டங்கள் அமுலிலிருக்கும் பெருந்தொழில் தோட்டத் தொழிலாகும். இதில் ஒரே ரக வேலைக்கு சட்டப்படியே ஆண்களுக்கொரு கூலியும், பெண்களுக்கு அதைவிட குறைந்த

கூலியும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

## முதலாளித்துவ அமைப்பின் முறைகேடு!

இன்றைய முதலாளித்துவ சமுதாய அமைப்பில் ஆண்களுக்கு அதிக மதிப்பும் பெண்களுக்கு குறைவான மதிப்பும் என்ற நிலையைப் பயன்படுத்தி, பூர்ஷ்வா வர்க்கம் லாபத்தை பெருக்குகிறது என்ற உண்மையை மறந்துவிடக்கூடாது. மனிதர்களில் ஒரு பகுதியினர் உயர்வானவர்களாக பூர்ஷ்வா வர்க்கம் கருதமுடியாது. வரலாற்று சிறப்பு வாய்ந்த "கம்யூனிஸ்ட் அறிக்கை"யில், "பூர்ஷ்வா வர்க்கம் அம்மணமான சுயநலத்தைத் தவிர உணர்ச்சியற்ற 'ரொக்கப்பட்டுவாடா'வைத் தவிர மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே வேறு எந்த உறவும் இல்லாமல் அது செய்துவிட்டது."

"......அது மனிதனின் மேன்மையைப் பரிவர்த்தனை மதிப்பாகப் பாகுபடுத்திவிட்டது......மத சம்பந்தமான பிரமைகளாலும் திரையிட்டு மறைக்கப்பட்டிருந்த சுரண்டலுக்குப் பதிலாக, உடைமை வர்க்கம் அம்மணமான, வெட்கமில்லாத, நேரடியான முரட்டுத்தனமான சுரண்டலை ஏற்படுத்திவிட்டது."

"......அது மருத்துவரையும், வழக்கறிஞரையும், மதகுருவையும், கவிஞரையும், விஞ்ஞானியையும் தன்னிடம் கூலிபெறும் உழைப்பாளிகளாகச் செய்துவிட்டது."

"...பூர்ஷ்வா வர்க்கம் குடும்பத்தின் உள நெகிழ்ச்சித் திரையைக் கிழித்தெறிந்துவிட்டது. குடும்ப உறவை வெறும் பணஉறவாக்கிவிட்டது" என்று காரல் மார்க்சும், ஏங்கல்சும் குறிப்பிட்டுள்ளனர். அதேபோல, சமுதாயத்தில் உள்ள பெண்ணடிமைத்தனத்தை, தனது சுரண்டலுக்கு துணையாகக்கொண்டு லாபமடைய சாதகமாக செயல்படுகிறது என்பதை அனுபவத்தில் பார்க்கிறோம்.

## துன்பத்தின் சுமைதாங்கி!

தொழிலாளி என்ற முறையில் சம்பள பாகுபாட்டு அநீதிக்கும், பெண் என்ற முறையில் சமுதாய ஒடுக்குமுறைகளுக்கும் உழைக்கும் பெண்கள் ஆளாக்கப்பட்டுள்ளனர். "உரலுக்கு ஒருபக்கம் இடி; மத்தளத்துக்கு இரு பக்கமும் இடி" என்பது போல, இருவகையான பிரச்னைகளின் சுமை தாங்கியாக உழைக்கும் பெண்கள் வாழ்கின்றனர். காவியங்களின் தலைவிகளாக சித்தரிக்கப்படும் கண்ணகிக்கும், சகுந்தலைக்கும், சீதைக்கும் ஏற்பட்ட துன்பங்களை ஊழ்வினையின் பெயர் சொல்லி மறைத்தார்கள்—அது கதை!

ஆனால் இன்று உழைக்கும் பெண்கள் அனுபவிக்கின்ற வேதனைகளும் தொல்லைகளும் ஏராளம்! இது உண்மை! இன்றைய கேடுகெட்ட சமுதாய அமைப்பில் வயிற்றுப்பாட்டுக்காக உழைக்கும் பெண்கள் படும் துன்ப துயரங்களை ஊழ்வினையின் திரையிட்டோ, தலைவிதியின் மீது பழியைப்போட்டோ தப்பிக்க முடியாது. இது முதலாளித்துவ சமூக அமைப்பின் தவிர்க்க முடியாத நிகழ்ச்சிப் போக்காகும்.

## மனித யந்திரங்கள்

காலையில் நேரத்தோடு எழுந்து வீட்டு வேலைகளை—சமையல் காரியங்களை கவனித்து, குழந்தை கணவனது தேவைகளை செய்து, பல்வேறு குடும்பத்தொல்லைகளுக்கு ஈடுகொடுத்து, சாப்பிட்டும் சாப்பிடாமலும் அவசர அவசரமாக வேலை செய்யும் இடத்திற்குச் சென்று, மணிக்கணக்கில் பணியாற்றி வீடு திரும்பி 'அப்பாடா' என அலுப்புடன் உட்கார நேரமின்றி தொடர்ந்து குடும்ப வேலைகளை கவனிக்கும் மனித யந்திரமாக உருக்குலையும் காட்சிதனை நாள்தோறும் காண்கிறோமல்லவா?

இதுமட்டுமல்ல; பெரும்பாலும் பிரசவ ஓய்வும் பிரசவ சகாய நிதியும் கிடைக்காத நிலையில், வேலைக்கு வராத நாட்களுக்கு சம்பளமில்லாமையும், வேலை இழப்பும் ஏற்படுவதால் இதை தவிர்க்க, ஓய்வு கொள்ளும் நாட்களை குறைத்துக்கொண்டு வயிற்றுச்சுமையுடன் முடிவாமல் வேலை செய்வதைப் பார்க்கிறோம். சில பெண்களுக்கு வேலை ஸ்தலத்திலேயே பிரசவ வேதனை ஏற்பட்டு பிரசவமும் ஆவதுண்டு. இதுபோலவே, பிரசவத்துக்குப் பின்னரும் போதிய ஓய்வெடுக்காமல் வேலைக்குச் செல்வதால், உடல் நிலை நிரந்தரமாகவே பாதித்து, பல்வேறு நோய் நொடிகளுக்கும் ஆளாகும் பரிதாப நிலையும் ஏற்படுகிறது.

நான் இப்படி குறிப்பிடும்போது, 8 மணி நேர வேலை, இரவில் பெண்கள் வேலை செய்வதிலிருந்து விதிவிலக்கு, பிரசவ லீவு, பிரசவ சகாய நிதி, போன்ற பாதுகாப்பு சட்டங்கள் இருக்கிறதே என சுட்டிக்காட்டுவார்கள். ஆனால், பெரும்பகுதி பெண்கள் பணியாற்றும் தொழில்கள் இத்தகைய சட்ட வரம்பிற்கு புறம்பானவைகளாகும். உதாரணத்துக்கு, பீடித்தொழில் எடுத்து எடுத்துக்கொள்வோம்: சுற்றி முடித்த பீடிக்கு ரீல் (லேபிள்) ஒட்டுவதில் பல்லாயிரக்கணக்கான பெண்கள் ஈடுபட்டுள்ளனர், மாலை நேரத்தில்தான் இந்த வேலைக்கான பீடி கிடைக்கும். ஆயிரம் பீடிக்கு ரீல் ஒட்ட திருச்சியில் 30 காசுகள் கூலி. இரவு முழுவதும் வேலை செய்தால் சுமார் 5000 பீடிகளுக்கு ஒட்டலாம். $1\frac{1}{2}$ ரூபாய் சம்பாதிக்க இரவு கண்விழிக்க வேண்டும். இவர்களுக்கு எந்தவிதமான சட்டப்பாதுகாப்பும் வசதியும் கிடையாது. இதுபோன்றே கைத்தறி தொழிலில் ஈடுபட்ட பெண்களுக்கும் எந்த சட்டங்களும் உதவுவதில்லை. இப்படி பல தொழில்களில் இதே நிலைமைதான் உள்ளது.

பீடி சட்டவரம்பிற்குட்பட்ட தொழில்களிலும் பலம் வாய்ந்த தொழிற்சங்கங்கள் உள்ள இடங்களைத் தவிர, மற்ற இடங்களில் அது வெறும் காகித சட்டங்களாகவே இருக்கிறது! சக்திமிக்க தொழிற்சங்க இயக்கத்தின் நிர்ப்பந்தத்தால் சட்டத்தை அமுலாக்கியே தீர வேண்டுமென்ற நிலை ஏற்பட்டால், இதனால் ஏற்படும் செலவுகளை மிச்சப்படுத்த, பல தொழிலதிபர்கள், ஏற்கனவே அமர்த்தப்பட்டுள்ள பெண் தொழிலாளிகளை பலவிதமான சாக்குப்போக்குகளைக்கூறி 'ஆட்குறைப்பு' செய்கின்றனர். இயற்கையின் விளைவாக ஏற்படும் காலிஸ்தானங்களில் பெண்களை அமர்த்துவதில்லை. தமிழக பஞ்சாலைகளில் இவற்றை நிதர்சனமாகப் பார்க்க முடியும். புதிதாக மில்லைத்திறக்கும் தொழிலதிபர்கள் பெண்களை அறவே வேலைக்கு அமர்த்துவதில்லை.

## தாய்மை தண்டனைக்குரிய குற்றமாகும்!

மனிதனை மனிதன் சுரண்டும் இன்றைய சமுதாய அமைப்பில், தாய்மை என்பது தண்டனைக்குரிய குற்றமாகும் தாய்மை பெறுவதென்பது வேலை கோரும் ஒரு பிரஜைக்கு தகுதியின்மையைக் குறிப்பதாகும் சமுதாயத்தில் உள்ள பெண்ணடிமை நிலையைப் பயன்படுத்தி, அவர்களது உழைப்பை மலிவான விலைக்குப் பெறும் நோக்கத்தான் உடைமை வர்க்கம் தாய் குலத்தைப் பார்க்கிறது. தாய்மை என்ற தடைகள் ஏற்பட்டால் வேலை வாய்ப்புகளே

...வைக்கப்பட்டு வைக்கப்படுகிறது. பாரத புண்ணிய பூமியின் பெருமைகளெல்லாம், கங்கையும் காவிரியும்போல புனிதமான 'தாய்மையில் அடங்கியிருப்பதாக் தாய்மையைப்பற்றி புகழ்பாடும்நமது நாட்டில்' தாய்மை தண்டிக்கப்படும் கொடுமையும் அனுமதிக்கப்படுகிறதல்லவா?

தாய் குலத்திற்கு ஏற்பட்டுள்ள இத்தகைய அநீதிகளுக்கெதிராக, சக்திமிக்க தொழிற்சங்க இயக்கமும் அதன் தலைமையில் ஆண்—பெண் என்ற வித்தியாசமின்றி நடத்தப்படும் ஒன்றுபட்ட நேரடி நடவடிக்கையும்தான் உழைக்கும் பெண்களுக்கு பாதுகாப்பு அளிக்கமுடியும் என்பது தெளிவு.

உழைக்கும் பெண்களின் பிரத்தியேகமான கோரிக்கைகளுக்காகப் போராடுவதில் பிரதான கவனம் செலுத்தாமல், சுரண்டலை எதிர்த்து தொழிற்சங்க இயக்கம் நடத்தும் போராட்டம் முன்னேற முடியாது. இதுபோன்றே, தொழிற்சங்கங்களில் பெண் தொழிற்சங்கங்களில் பெண் தொழிலாளர்களும், ஊழியர்களும் ஆயிரக்கணக்கில் உறுப்பினர்களாகச் சேருவதும், தொழிற்சங்க நடவடிக்கைகளில் தீவிரமாகப் பங்கு கொள்வதும் தொழிற்சங்கம் இல்லாத இடங்களில் தொழிற்சங்கம் அமைக்க முன் முயற்சி எடுப்பதும் உழைக்கும் பெண்களின் தலையாய கடமையாகும்.

தொழிற்சங்க இயக்கத்தின் மூலம் கிடைக்கும் சில சலுகைகளால் உழைக்கும் பெண்கள் மீது திணிக்கப்பட்டுள்ள அநீதிகளிலிருந்து தற்காலிக நிவாரணம்தான் கிடைக்குமே தவிர பூரண விடுதலை கிடைக்காது.

## உழைக்கும் பெண்கள் பற்றி லெனின்!

உழைக்கும் பெண்களின் இந்த நிலைக்கான இந்த காரணத்தை விளக்கி, 1913-ம் ஆண்டு ஏப்ரல் 27-ம் தேதியில் ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் பத்திரிகையான 'பிராவ்தா''வில்புரட்சி மாமேதை லெனின் எழுதியதாவது:

''வறுமை ஒடுக்குதல் சம்பந்தமான நிகழ்ச்சிகள் சமுதாயத்தில் ஏராளம் உண்டு. இவற்றைக் கண்ணில் படாமல் ஒளியவைக்கும் இருப்பிடமாக நவீன முதலாளித்துவ சமுதாயம் அமைந்துள்ளது.

அங்குமிங்குமாக, பரவலாக, சிதறிக்கிடக்கும் நடுத்தர வர்க்க மக்கள், கிராம கைத்தொழில் செய்பவர்கள் பாக்டரி தொழிலாளர்கள், குமாஸ்தாக்கள், அரசு கடை நிலை சிப்பந்திகள் போன்ற பகுதியினரின் குடும்பங்கள் விவரிக்க இயலாத ஏழ்மைக்கு ஆளாகியுள்ளனர். வருவாய் சிறிது அதிகரிக்கும் சந்தர்ப்பங்களில்கூட, அவர்களால் குடும்பத்தேவைகளை சமாளிக்க முடிவதில்லை. இப்படிப்பட்ட குடும்பங்களில் உள்ள லட்சக்கணக்கான பெண்கள் வீட்டு அடிமைகளாக வாழ்கின்றனர் — இந்நிலையில் வாழ்க்கையை எப்படியோ ஓட்டிக்கொண்டிருக்கின்றனர் என்பதுதான் பொருத்தமாக இருக்கும். இந்தப் பெண்மணிகள் குறைந்த வருவாயைக் கொண்டு, குடும்பத்தின் உணவு, இந்தப் பெண்மணிகள் எல்லாவிதமான செலவுகளிலும் சிக்கனத்தை கடைப்பிடிப்பார்கள். ஆனால், அவர்கள் சிக்கனம் பாராமல் தாராளமாக செலவு செய்யும் ஒரு பொருள் உண்டு, அதுதான் அவர்களது சொந்த உழைப்பு!

தங்களுக்கும் தங்கள் குடும்பத்திற்கும் பற்றாக்குறையை ஈடுகட்ட ஒரு அதிகப்படியான ரொட்டித்துண்டை சம்பாதிக்க எவ்வளவு அற்பமான குறைந்த கூலியாக இருப்பினும் அதையும் பெற்றுக்கொண்டு வேலை செய்யத் தயாராக உள்ள இப்படிப்பட்ட பெண்களிடையேயிருந்துதான் கூலி வேலைக்கு ஆள் திரட்ட முதலாளிகள் ஆவலாக உள்ளனர்'' என்கிறார் மாமேதை லெனின்.

## சோஷலிஸ அமைப்பிலேயே விடிவு கிடைக்கும்

லாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டும் சுரண்டலை அடிப்படையாகக்கொண்டும் அமைந்துள்ள முதலாளித்துவ சமுதாய அமைப்புதான் உழைக்கும் பெண்களின் இன்றைய நிலைக்கு காரணமென்றும் இந்த அமைப்பினைத் தகர்த்தெறிந்து புத்தம் புதிய சுதந்திர இன்பம் கொஞ்சும் சோஷலிஸ சமுதாய அமைப்பை உருவாக்குவதின் மூலமே பெண்களுக்கு அடிமைத்தனத்திலிருந்து பூரண விடுதலை கிடைக்குமென்றும் அறுதியிட்டுக் கூறுகிறார் தோழர் லெனின். சுமார் அரை நூற்றாண்டுகளுக்கு முன் லெனின் கூறியது நமது நாட்டு உழைக்கும் பெண்களின் நிலைக்கு எத்துணை பொருத்தமாக உள்ளது!

## மங்கையர் குலத்திற்கு மங்காப்புகழ்!

தோழர் லெனின் சொல்லியதோடு நில்லாமல் செயலிலும் செய்துகாட்டி மங்கையர் குலத்திற்கு மங்காப்புகழினை தேடித்தந்தார். சோஷலிச நாடுகளில் பெண்ணடிமைத்தனம் பூரணமாக ஒழிக்கப்பட்டுள்ளது. பெண்கள் சகல துறையிலும் சமத்துவமாக வாழ முடிகிறது. பெண்கள் அனைவருக்கும் வேலைவாய்ப்பும், சம கூலியும், அரசியல் சட்டப்படியும், நடைமுறையிலும் உத்திரவாதம் செய்யப்பட்டுள்ளது. எல்லாத் தொழில்களிலும் வேலை நேரம் நிர்ணயிக்கப்பட்டு பிரசவ லீவும், பிரசவ சகாய நிதியும் உறுதி செய்யப்பட்டுள்ளது. பூரணமான சமத்துவத்தை அனுபவிக்கும் பொருட்டு அடுப்பங்கரையில் அடைத்துக் கிடப்பதிலிருந்தும் விடுதலை கிடைத்துள்ளது. விரைவில் சிரமமின்றி சமையலை முடிக்க வீடுகளில் வசதியான மின்சார அமைப்புகளும், வேலைபார்க்கும் தொழிற்சாலைகளில் உயர்தர சிற்றுண்டி விடுதிகளும் நிறுவப்பட்டுள்ளன. எல்லாத் தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் தேவையான நர்சுகள் ஊழியர்களுடன் குழந்தை பராமரிப்பு நிலையங்கள் நிறுவப்பட்டு குழந்தைகளை போஷாக்குடன் பராமரிக்க சிறப்பான ஏற்பாடு உண்டு மாலை வேலையிலே மனைவியும் கணவனும் பெற்ற செல்வங்களையும் அழைத்துக் கொண்டு இல்லம் நோக்கிச் செல்லும் இன்பம் இருக்கிறதே அவற்றை வார்த்தைகளிலே வடித்துத் தர இயலாது!

## மே தின உறுதிமொழி!

''பூர்ஷ்வா வர்க்கம் தனக்கே அழிவைத் தேடும் ஆயுதங்களை வார்த்தெடுத்திருப்பது மட்டுமல்ல அந்த ஆயுதங்களை உபயோகிக்கவிருக்கும் மனிதர்களை —நவீன தொழிலாளி வர்க்கத்தையும்— சிருஷ்டித்திருக்கிறது''

......அதன் வீழ்ச்சி, பாட்டாளி வர்க்கத்தின் வெற்றி ஆகிய இரண்டுமே தவிர்க்க முடியாதவையாகும்'' (கம்யூனிஸ்டு அறிக்கை)

உழைக்கும் வர்க்கத்துக்கு ஒளி நிறைந்த எதிர்காலம் நிச்சயமாக உண்டு ஆனால், அது தானாக வந்து நம் வீட்டுக் கதவைத்தட்டாது. ஒன்றுபட்ட சக்தி வாய்ந்த புரட்சியின் மூலமே நாம் அதை இழுத்து வரவேண்டும்.

இந்த சீரிய பணியிலே நம்மை முழுமையாக அர்ப்பணிக்க, உழைப்பாளிகளின் ஒப்பற்ற நாளான மே தினத்திலே உறுதி கொள்வோமாக!

# முதலாளித்துவ......

[48-ஆம் பக்கத் தொடர்ச்சி]

என்ற மத்திய கமிட்டியின் அறிக்கை கூறுவதாவது:—

''மக்களுக்கு பெரிய அளவில் நிவாரணம் அளிக்க முடியுமென்ற பேராசையும், அல்லது இன்றைய சூழ்நிலையில் எதையும் செய்ய முடியாதென்ற சோர்வும் ஏற்படாமல், நமது மனப்பூர்வமான நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் மக்களுக்கு புரியவைப்பதற்கு கட்சியின் பிரதிநிதிகள் என்ற முறையில் நமது அமைச்சர்கள் இடைவிடாமல் முயற்சிக்க வேண்டும். இதை செய்வதில் ஏற்படக்கூடிய எந்த தோல்வியும் கட்சியின் கொள்கையைப்பற்றி மக்களிடம் அவநம்பிக்கையை ஏற்படுத்தும். இதனால் மக்களை திரட்டி உஷார்ப்படுத்தும வேலை கஷ்டமாகிவிடும். அது மட்டுமல்ல, கூட்டணி கட்சிகளின் ஊசலாட்டத்தை தடுப்பதும் கஷ்டமாகிவிடும். இந்த குறைபாடுகளை களைந்தெறியாவிட்டால் நமது வேலை பாதிக்கும்''

சுருக்கமாகக் கூறினால், மக்களுக்கு விரிவான முறையில் நிவாரணமளிப்பதற்கு தேவையான அதிகாரமுள்ள அரசாங்கள் என்பதற்கு பதிலாக போராடும் மக்களின் கருவிகள் என்ற முறையில்தான் இன்றைய ஐக்கிய முன்னணி அரசாங்களை பார்க்க வேண்டும். தெளிவாக கூறினால், மக்கள் ஜனநாயகத்தையும் பிறகு சோஷலிசத்தையும் அமைப்பதற்கான போராட்டத்தில் தொழிலாளி வர்க்கத்திற்கு ஆதிகமான நேச சக்திகளையும் மக்களையும் திரட்டுவதற்கான போராட்டக் கருவிகள் என்ற முறையில் மட்டும்தான் இந்த அமைச்சரவைகளில் நாம் பங்கு கொள்ளவேண்டும்.''

1946-ம் வருடத்திலும் 1948-ம் வருடத்திலும் நடைபெற்ற தேர்தல்களில் தம் கட்சிக்கு ஒரு இடம்கூட கிடைக்காமலிருந்த போதிலும் 1952—57 காலகட்டத்திலும் 1960—64 கால கட்டத்திலும் எதிர்க்கட்சியாக இருக்கும்போதும் 1957 முதல் 1959 வரையும், 1967 முதல் 1969 வரையும் ஆளும் கட்சியாக இருக்கும்போதும் தேர்தல்களையும் சட்டமன்றங்களையும் போராட்ட கருவியாகத்தான் கம்யூனிஸ்ட்கள் பயன்படுத்தினர். புரட்சிகரமான நாடாளுமன்ற நடவடிக்கைகளைப் பற்றி மார்க்சும், ஏங்கல்சும், லெனினும் கூறியுள்ள தத்துவம் இதுவே.

1964-ம் வருடம்வரை வலது கம்யூனிஸ்டுகளும் இதில் பங்குகொண்டு இருந்தார்கள். கேரளத்தில் இன்றைய வலது கம்யூனிஸ்ட் தலைவர்களில் பலரும் 1948-ல் திருவாங்கூரில் நடைபெற்ற தேர்தலில் வேட்பாளர்களாக இருந்தார்கள். வெற்றிபெறுவதற்கான எவ்வித நம்பிக்கையும் இல்லாமல்தான் அவர்கள் அன்றைய வேட்பாளர்களாக போட்டியிட்டனர்.

தேர்தலில் பெரும்பான்மை இடங்களில் வெற்றிபெற்று அதிகாரத்திற்கு வரமுடியுமா என்ற கேள்வி ஒருபுறமிருக்கட்டும் சட்டமன்றத்திற்குள் எதிர்க்கட்சி என்ற முறையில செயல்படுவதற்கு வாய்ப்புக்கூட கிடைக்குமென்று அன்று அவர்கள் எதிர்பார்த்திருக்க முடியாது. ஆனாலும் இன்றைக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போராடுவதைபோல் அன்றைக்கு அவர்கள் போராடினர்.

அந்த தேர்தலில் ஒரு இடம்கூட கிடைக்காமல போனாலும் அடுத்து 1952ல் நடைபெற்ற தேர்தலில் சக்திவாய்ந்த எதிர்க்கட்சியாக வர முடிந்தது. 1957 தேர்தலில் ஆளும் கட்சி என்ற நிலை ஏற்பட்டது.

## வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு அளிக்கும் பதில்

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் பிரபல தலைவரான எம். என். கோவிந்தன் நாயர் ஒரு கேள்வி கேட்டிருக்கிறார். ''மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியால் மூன்றாவது அணியை எப்படி உருவாக்க முடியும்? அவர்களுக்கு எத்தனை இடங்கள் கிடைக்கும்? ஒரு சில இடங்களை மட்டும் கிடைக்கக்கூடிய அவர்களின் கட்சியால் மூன்றாவது அணியை எப்படி உருவாக்க முடியும் என்பதே அந்தக் கேள்வி.

இடங்கள் எத்தனை கிடைக்கும் என்ற இவர்களின் கேள்விக்கு இந்தியாவிலுள்ள வாக்காளர்கள் பதிலளித்து விட்டார்கள்.

இந்திரா காங்கிரசும் தி.மு.க.வும் கருணைகாட்டி பிச்சையளித்த இடங்கள் உட்பட 23 இடங்கள் வலது கம்யூனிஸ்டுகளுக்கு கிடைத்துள்ளது அதே நேரத்தில, இண்டிகேட் அணியையும் சிண்டிகேட் அணியையும் எதிர்த்து போராடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு 25 இடங்கள் கிடைத்துள்ளன. சாதகமான சூழ்நிலையும் கூட்டணிகளும் வலதுசாரி கட்சிக்கு இருந்தபோதிலும் அவர்களுக்கு கிடைத்த இடங்களும் வோட்டு சதவீதம் குறைந்தன. ஆனால் இரண்டு அணிகளையும் எதிர்த்து போராடிய எங்கள் கட்சிக்கு இடங்களும் வோட்டு சதவீதமும் கூடின. 1948-ல் திருவிதாங்கூர் தேர்தலில் ஒன்றுபட்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சிக்கு கிடைத்த வெற்றியைவிட இது சிறந்த வெற்றிதான் என்பதை வலது கம்யூனிஸ்டுகள் ஒத்துக்கொள்வார்களா?

வாதத்திற்காக வேண்டுமானால் ஒரு இடமும் கிடைக்கவில்லையென்றே வைத்துக்கொண்டாலும் அதனால் புரட்சிகரமான நாடாளுமன்ற நடவடிக்கைகளை பற்றிய மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் தத்துவம் தவறாகிவிடுமா? தேர்தலில் இடங்கள் கிடைக்குமா கிடைக்காதா என்பதை பார்த்துதானா மார்க்சும், ஏங்கல்சும், லெனினும் தேர்தலில் பங்கெடுப்பது சம்பந்தமான கொள்கையை உருவாக்கினர்? வலது கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் எங்களைப்போல் கம்யூனிஸ்டுகளாக இருந்த காலத்தில் அன்றைய திருவாங்கூர்—கொச்சி சட்டமன்றத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே ஒரு கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் சட்டமன்றத்தில் புரட்சிகரமான முறையில் செயல்பட்டதை வலது கம்யூனிஸ்டுகள் மறந்துவிட்டார்களா? பல வருட காலம் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏகபிரதிநிதியாக பணியாற்றிய வில்லியம் காலாக்சரின் தைரியமான நாடாளுமன்ற நடவடிக்கைகளை வழி காட்டியாக மேற்கொள்ள வேண்டுமென்று அன்றைக்கு ஒன்றாகவிருந்த கம்யூனிஸ்ட் கட்சி கூட்டங்களில் பேசியதையும் வலது கம்யூனிஸ்டுகள் மறந்துவிட்டார்களா?

ஒரு காலத்தில் கம்யூனிஸ்டுகளாக இருந்தவர்கள் பிறகு சாதாரண முதலாளித்துவ அரசியல் கட்சி தலைவர்களாக வீழ்ச்சியடைந்தால் சென்ற கால நிகழ்ச்சிகளை மறந்துவிடுவார்கள். யேசுகிருஸ்துவை காட்டிகொடுத்து 30 வெள்ளிக் காசுகளை வாங்கி கீசையில் போட்டுக்கொண்ட யூதாஸைப்போல் காங்கிரசல்லாத ஜனநாயக கூட்டணிக்கு துரோகம்செய்து சில மந்திரி பதவிகளும் சில நாடாளுமன்ற இடங்களையும் பெற்ற வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு முதலாளித்துவ நாடாளுமன்ற தத்துவத்துக்கும் புரட்சிகரமான நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்குள்ள வேறுபாடுகள் மறந்துபோவதில் ஆச்சரியமில்லை.

ஆனால் ஆளும் வர்க்கங்களோடு

சேர்ந்து, புரட்சிகர இயக்கங்களுக்கு துரோகம்செய்ய தயாரில்லாத மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளால் இரண்டிற்குமுள்ள வேறுபாட்டை மறக்க முடியாது. அவர்கள் முதலாளித்துவ நாடாளுமன்ற அமைப்பை கடுமையாக எதிர்க்கும் அதே நேரத்தில் ஏ. கே. கோபாலன் போன்ற அனுபவம் உள்ள புரட்சியாளர்களை நாடாளுமன்றத்திற்கு அனுப்பவும் செய்வர். முதலாளித்துவ நாடாளுமன்றத்திற்குள் செல்லும் ஒவ்வொரு புரட்சியாளனுக்கும் தான் நுழையுமிடம் மிகவும பயங்கரமான புலி கூடுதான் என்பது தெரியும். அதற்குள் ராட்சத பேய்களுக்கெதிராக நடக்கக்கூடிய போராட்டம் நாடு பூராவும் பாடுபடக்கூடிய சாதாரண மக்கள் நடத்தக்கூடிய புரட்சிகர போராட்டங்களின் பிரிக்கமுடியாத பகுதிதான் என்பது தெரியும். இந்த முறையில் நடைபெறும் போராட்டத்தில் முக்கியமான ஓர் இடம் என்ற முறையில் நாடாளுமன்றத்திலும் சட்டமன்றங்களிலும் அவர்கள் போராடுவார்கள். இதிலிருந்து மார்க்சிஸ்ட் கட்சியை பின்வாங்க வைப்பதற்கு வலது கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களும் அல்லது அவர்களின் கூட்டாளிகளும் வீண்முயற்சி செய்யவேண்டியதில்லை. ★

தமிழாக்கம் —முரளீதரன்

---

## நடுவழி என்பது இல்லை

தொழிலாளி இயக்கத்தில், தானாகவே போராட்டம்தோன்றும் என்ற வழியைப் பின்பற்றுவது, கட்சியின் தலைமைபாத்திரம்உணர்வுபூர்வமாக வளர்க்கப் பெறுவதைக் குறைத்து மதிப்பிடுவதாகும். இவ்வாறு செய்வது, நாம் விரும்பியோ, விரும்பாமலோ தொழிலாளர்களிடம் பூர்ஷ்வா சித்தாந்தத்தைப் பலம் படுத்தத்தான் செய்யும்............ எனவே நம் முன்னால் இரண்டே வழிகள் தான் உள்ளன; ஒன்று, பூர்ஷ்வா சித்தாந்தத்தை நீடிக்கச் செய்வது அல்லது சோசலிசச் சித்தாந்தத்தை வளர்ப்பது.

இது இரண்டுக்கும் இடையே நடுவழி என்று ஒன்று இல்லவே இல்லை ......எனவே, சோசலிஸ்டு சித்தாந்தத்தை ஒவ்வொரு வழியிலும் தொழிலாளரிடத்தில் பரப்பும் அவசியத்தைக் குறைத்து மதிப்பிடுவது, இந்தக் கடமையை நிறைவேற்றுவதனின்றும் ஒருசிறு அளவேனும் பின்தங்குவோமானால், அதன் மூலம்நாம் பூர்ஷ்வா சித்தாந்தத்தைத் தான் பலப்படுத்தியவர்கள் ஆவோம்.

—வி. ஐ. லெனின்,
'இனி என்ன செய்யவேண்டும்'
என்ற நூலில்

---

# மேதினச் சூளுரை!



— பொருள் முதல் வாதன்

மேதினி முழுதும் மேவிய தினமே, மேதினமே ! (1)
மேதகு சிக்காக் கோநகர் பெற்ற மேநாளே !
நீதிகள் கேட்ட நேர்தொழி லாளர் நெஞ்சினிலே
நீசர்கள் குண்டு வீசிடச் சிவந்த செந்நாளே !

உலகினில் எங்கும் உரிமையின் சங்கம் முழங்கிடவே
உழைப்பவர் வர்க்க உணர்வினை வளர்த்த ஒளிநாளே !
பலவழி நடந்து இனமொழி கடந்த பாட்டாளிப்
படைகளின் உறவு பலப்பட வந்த புகழ்நாளே ! (2)

ஆண்டுகள் தோறும் அவனியில் பவனி வருகின்றாய் !
ஆனந்த கீதம் அழுகுரல் ஓலம் கேட்கின்றாய் !
தாண்டவம் ஆடும் உடைமையின் பூதம் சாகவில்லை !
சரித்திர ஏட்டில் தரித்திரப் பாட்டுப் போகவில்லை ! (3)

இன்னமும் ரத்த வெறியர்கள் உலகில் இருக்கின்றார் !
இளைத்தவர் உரிமை இழந்தவர் வாழ்வைப் பறிக்கின்றார் !
சிந்திய ரத்தம் சிதறிய கண்ணீர் தீரவில்லை !
செந்தமிழ் உழவர் தீப்பட்ட புண்கள் ஆறவில்லை ! (4)

சிக்காக் கோவில் மக்களைச் சுட்ட துப்பாக்கி,
தினமும் படுகொலை தொடர்ந்துந டத்திச் செல்கிறதே !
பக்காத்தி ருடர்கள் ஆசிய மண்ணைப் பாழ்படுத்தும்
பாதகச் செயலை மோதிமி திக்கத் தாம தமேன் ? (5)

பாட்டாளி மக்கள் ஒற்றுமை ஒன்றே பாரினிலே
பகைவர்துப் பாக்கியை நொறுக்கிட வல்ல பீரங்கியாம் !
கூட்டாகச் சேர்ந்து கோடிக்க ணக்காய்க் கூடிடுவோம் !
கொடியவர் கோட்டை கொத்தளம் நொறுக்கிச் சாடிடுவோம் ! (6)

# வீரமிக்க பாரிஸ் பெண்கள்!

—தோழியர் லீலா சுந்தரய்யா

உழைத்து, உழைத்து, உரமேறிய, உருக்குப்போன்ற அந்த மக்களுடைய, உரிமை வேட்கை, அவர்களுடைய சருமத்தைக்கூட, வெண்கலமாக்கியது. அவர்களுடைய குழந்தைகள் வைக்கோற் கூளங்களில், சயனித்திருக்க, பிரெஞ்சு நகரத்தின் அந்தப்பழமையான சேரிக்குடிசைகள்தான், அவர்களின் அரண்மனைகளாகத் திகழ்ந்தன.

அதே நகரத்தின் மறு கோடியில், அழகிய ஆடலழகிகள், சித்திர வேலைப்பாடமைந்த பட்டாடைகளணிந்து அந்தச் சூழ்நிலை தங்களுக்கு அளித்த ஆண்களோடு அழகு நடனம் ஆடிக்களித்தார்கள்.

இரண்டு தீர்க்கமாகப் பிரிக்கப்பட்ட உலகம்—ஒன்று ஏழை எளியோரைக் கொண்டது: மற்றது வசதி மிக்க பணமுடையவர்களைக் கொண்டது. இந்த நகரத்தில் செங்கலாலும், சுண்ணாம்பாலும் ஆக்கப்பட்ட சுவர்கள். இந்த இருவேறு உலகங்களைப் பிரித்தெடுத்துக் காட்டியது.

## தாங்கமுடியாத வாழ்க்கைத் தொல்லை

அங்கிருந்த உழைப்பாளிகளின் நிலையே, மனிதன் மனிதனாக வாழக்கூட முடியாத நிலை. இதில் பெண்கள்தான் அதிகம் சுரண்டப்பட்டார்கள்.

உலகப்புகழ் பெற்ற பின்னல்வேலைகளைச் செய்யும் பெண்களும், தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண்களும்தான் அங்கு இருந்தார்கள் ஆனால், ஒரு நாளைக்கு பதினொரு மணியிலிருந்து பதிமூன்று மணி நேரம் வேலை செய்யும் அந்தப் பெண்களுக்குக் கிடைக்கும் தினக்கூலி பதினைந்து (சென்டைம்ஸ்)லிருந்து, ஐந்து பிராங்குகள்தான்.

தனியாய் வாழ்ந்த பெண்கள், குடியிருக்க பணவசதியில்லாமல், ஐந்தடிக்கு மூன்றடிப் பொந்துகளில் தங்களை அடைத்துக் கொண்டார்கள். நோயுற்ற நேரங்களில் மருந்து வாங்க வசதியில்லாதிருந்தார்கள். தங்கள் வருமானத்தில் தனித்து வாழ முடியாத பெண்கள், தங்களுக்குத் துணையாக, ஆண்களை முறையோடும், முறையற்றும் சேர்த்துக் கொண்டும் அவர்கள் நிலை மாறவில்லை. விபச்சாரம் என்பது, தன் வருவாயைப் பெருக்கும், ஒரு சிறு தொழிலாக தோன்றியது.

உழைக்கும் பெண்களுக்கு மட்டும், தாங்க முடியாத இந்த நிலை ஏற்படவில்லை. ஒரு பெண் துணை இல்லாமல், கணவனோ—காதலனோ இல்லாமல், பாதுகாப்பாக இருக்க முடியாது என்பதுதான் நிலை. அவளுடைய கல்வியறிவு, கீழ்த்தரமானதாக அல்லது, அறவே இல்லாததாக இருந்தது. கந்தலாடை புனைந்து, சோற்றுக்குத் தாளமடிக்கும் குழந்தைகளில் ஐந்துக்கு ஒருவர்கூட பள்ளிக்குச் செல்ல முடியவில்லை.

கொஞ்சம் கிழியாத உடை அணிந்த பெண்கள், கல்வி கற்றுக் கொடுப்பவர்களாகக் கருதப்பட்டார்கள். அவர்களுடைய வருட வருமானம் நூறிலிருந்து நானூறு பிராங்குகள், மற்ற தொழில்கள் எல்லாமே, பெண்களுக்கு, இல்லாமல் மூடப்பட்டுவிட்டன.

எல்லாப் பெண்களுமே, இந்த நிலையை ஏற்றுக்கொண்டு, அடங்கிவிடவில்லை "ஜென்னி—ஹெரிகார்ட்", ஜனநாயக வாதியான—எச்சரித்தும் '1789-ம் ஆண்டு நடந்த புரட்சியினால், பெண்கள் பங்கு பெறுததற்குக் காரணம், அந்தப்புரட்சியின், "மனித உரிமைப்பிரகடனத்தில் பெண்களுக்கு எதுவுமே இல்லை' என்பதுதான் என்றார். சரித்திரம், 1848-ம் ஆண்டு மறுபடியும் திரும்பியது. "நான் உங்களுக்கு சொல்கிறேன் பெண்கள் உங்களோடு கைகோர்த்து, நடக்காவிட்டால், நீங்கள் நடத்தும் எந்தப்போராட்டமும் பயனளிக்காது. ஆண் ஒரு புறமும், பெண் எதிர்ப்புறமும் இருந்தால், மனிதத்தன்மையே அழிந்துவிடும், என்ற உண்மையைத் தெரிந்து கொள்ளாத குருடராயிருக்கிறீர்கள்" என்றார்.

1868-ம் ஆண்டு சங்கம் சேர்வதற்கான உரிமை கிடைத்ததும் தொழிலாளி வர்க்கம் மாநாடுகள் நடத்தியது. "பெண்களுக்கு வேலை வாய்ப்பு" என்ற கோரிக்கை எழுப்பப்பட்டது. இதனால், பெண்களுக்குக் கிடைத்துவந்த குறைந்த கூலியும் குறைக்கப்பட்டது. அதன் பலனை, பெண்கள், விபச்சாரத்தையோ, தற்கொலையையோ நாடவேண்டியதாயிற்று. மரியாதரிசம் பாக்மில்க் போன்றவர்கள், பெண்களுக்கு அரசியல் உரிமை வேண்டும் என்று பேச ஆரம்பித்தனர்.

இந்த இயக்கம், அத்திரியியோ, மரிய மாடம், ஜூல்ஸ் போன்ற பிற்காலத்தவர்களை இயக்கத்திற்குக் கொண்டுவந்தது. மொத்தமான, அரசியல் சூழ்நிலையிலிருந்து பிரிக்க முடியாத இயக்கமான பெண்களுக்குச் சம உரிமை என்பது புலப்பட ஆரம்பித்தது.

## அழுக ஆரம்பித்த பிரெஞ்சு சாம்ராஜ்யம்

அழுக ஆரம்பித்த பிரெஞ்சு சாம்ராஜ்யத்தில், தொழிலாளர்களும், விவசாயிகளும், தாங்க முடியாத துன்பங்களுக்கு ஆளானார்கள். வேலை நிறுத்தம் அடிக்கடி தோன்ற ஆரம்பித்தது. கொடுமையான அடக்குமுறையாலும், கூட்டங்களும் ஆர்ப்பாட்டங்களும், வேலை நிறுத்தங்களும் வெகுஜன போராட்டமாக மாறுவதைத் தடுக்கமுடியவில்லை.

1870-ம் ஆண்டு ஜனவரி மாதம், ஆண்களும் பெண்களுமாக இரண்டு லக்ஷத்திற்கும் மேற்பட்டவர்கள், பாரீஸ் வீதியில் ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

"எங்கும் பெண்கள். நல்ல தருணம். எப்போது பெண் கொதிப்படைகிறாளோ எப்போது குடும்பப் பெண் தன் கணவனைப் போராட்டத்திற்கு அனுப்புகிறாளோ எப்

போது அவள் தன் போர்க் கொடியை சமயலறையிலும், தெரு வீதியிலும் உயர்த்துகிறாளோ—அப்போது புரட்சிகரமான ஒரு தேசத்தின்மீது சூரியன் உதிப்பான்'' என்று ஜூல்ஸ்வாலிஸ் குறிப்பிட்டார்.

மக்கள் கவனத்தைத் திருப்ப நெப்போலியன் ''போனபாட்டி'' பிரஷ்யாவின்மீது யுத்தப் பிரகடனம் செய்தார். ஆனால், பிரஷ்யாவின் பிஸ்மார்க் இதற்காக பல ஆண்டுகளாகக் காத்திருந்தார். தோல்விக்கு மேல் தோல்வி கண்ட பிரெஞ்சு சேனை பின் வாங்கியது. அமைதிக்காக ஆர்ப்பாட்டம் செய்த தொழிலாளர்களும், மக்களும் அரசாங்கத்தைக் தகர்த்தெறியத் தீர்மானித்தார்கள். ஆயுதக் கிடங்கிலிருந்து, ஆயுதங்களை எடுக்க முயன்ற நால்வர், மரண தண்டனை அளிக்கப்பட்டார்கள். ஆனால் பெண்கள் ஆயிரக்கணக்கான கையெழுத்துக்களைக் கொண்ட ஒரு மனுவைத் தயாரித்து, கவர்னரைச் சந்தித்தார்கள். தங்களுடைய கோரிக்கை ஏற்கப்பட்டாலொழிய கலைந்து செல்வதில்லை என்றார்கள். கவர்னர் கடைசியில் வாக்களித்தார். இந்தப் பெயர் தெரியாத பெண்கள், மிகத் துணிவாகப் போராடி, புரட்சியாளர்களின் சாவைத் தடுத்து நிறுத்தினர். இது நடந்தது செப்டம்பர் 2-ம் நாள். இரண்டு நாட்களுக்குப் பிறகு, அரசு தூக்கியெறியப்பட்டது. பூர்ஷ்வாக்கள் வெற்றி கொண்டனர்.

புதிய குடியரசு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. 1871-ம் ஆண்டு பிப்ரவரி 8-ம் நாள் நடந்த சட்டசபைத் தேர்தலில் இரண்டுபங்கு, அரசகுடும்பத்தார்களும், மீதி ஒரு பங்கில், பூர்ஷ்வா ஜனநாயகவாதிகள், முற்போக்கு எண்ணங்கொண்டவர் என்று தம்பட்டம் அடித்துக்கொள்ளும் குட்டி பூர்ஷ்வாக்களும் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தொழிலாளர்களை மயக்கம் கொள்ளச் செய்வதாக அது முடிந்தது.

எல்லைச் சுவரை ஜெர்மன் படைகள் முட்டிக் கொண்டிருக்கும்போது பாரீஸ், 25 பேர்களைக்கொண்ட தேசியப் பாதுகாப்புப் படைக் கமிட்டியால் நிர்வகிக்கப்பட்டது. செப்டம்பர் 17-ம் தேதி, ஜெர்மன் சேனை பாரீஸ் நகரத்தை முற்றுகையிட்டு ஏனைய பிரஞ்சு பிரதேசத்திலிருந்து வெட்டிவிட்டது. நகரத்தில் குழந்தைகளுக்குப் பாலில்லை; உணவில்லை; குளிரைப் போக்கிக் கொள்ள எரிபொருள் இல்லை.

நதலி லோமல், லூயிஸ் மைக்கேல் போன்றவர்கள் இந்தச் சமயத்தில், நூற்றுக் கணக்கானவர்கள் பசியாற்றிட, ''சமூக சமயலறை'' (சூப் கிச்சன்) களை ஏற்படுத்தினார்கள். எங்கும் வேலை இல்லை. தேசிய காவலர் சேனையைச் சேர்ந்த வீரர்கள், ஒரு நாளைக்கு ஒன்றரை பிராங்குகள் சம்பளம் பெற்றார்கள். அவர்கள் மனைவி எழுபத்தைந்து சென்டைம்ஸ் பெற்று, அதனால் எதுவும் வாங்க முடியாமல் தவித்தார்கள். பெண்களுக்கு வேலையே இல்லாததால், வீரர்களின் யுத்தக் கருவியைச் சரி பார்ப்பதில் முனைந்தார்கள். இத்தகைய வேலைகூட சீக்கிரத்தில் நிறுத்தப்பட்டது. மருத்துவ நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டு பல பெண்கள் நர்சுகளாக ஏற்கப்பட்டார்கள்.

முன்னணி, பின்னணிப்படை எது என்று இல்லாத இந்த யுத்தத்தில், எதிரிகள் நகரத் தலைவாயிலைத் தாக்கும்போது, எல்லாப் பெண்களும் தங்கள் ஆடவருடன் கோட்டை மதிலில் துப்பாக்கி ஏந்தி நின்றார்கள். மருத்துவப் பணியிலும், உணவு அளிப்பதிலும் சேவைசெய்து பொதுவான இந்தச் சண்டையில் தங்கள் ஆடவர்களோடு தோள் கொடுத்து நின்றனர்.

சீக்கிரத்திலேயே வர்க்க பேதமற்ற பெண்களைக்கொண்ட ஒரு படை தயாராக வேண்டும் என்று சுவரொட்டிகள் ஒட்டப்பட்டன. ''இந்தக் காட்டுமிராண்டித் தனமான ஆக்கிரமிப்பு யுத்தத்தில் பாரீஸ் நகரை லட்சக் கணக்கான பிரஜைகள் காக்கப் போராடும் போது, ஆயிரத்திற்கும் மேற்பட்ட பெண்களும் இதில் பங்கெடுத்துக் கொண்டனர் என்பதை ஐரோப்பாக் கண்டம் பூராவும் அறிந்து கொள்ளட்டும்'' என்று சுவரொட்டிகளில் எழுதினர். ஆயிரக்கணக்கான பெண்கள் துடித்தெழுந்து வந்தும் அரசாங்கம் அவர்கள் கோரிக்கையை நிராகரித்தது.

பாதுகாப்புக் கமிட்டியில், பெண்களுக்கும் பங்கு கொடுக்கப்பட்டு, அரசியல் வாழ்வில்— முக்கிய உணவுப் பண்டங்களை விநியோகிப்பதிலும், அரசு யந்திரத்தை நடத்துவதிலும் பங்கேற்க முற்பட்டனர். அவர்கள் ரொட்டிக்காக பட்டினி ஊர்வலங்களும், துப்பாக்கிக்காக ஆர்பாட்டங்களும் நடத்தினர்.

## தீரமிக்க பெண்களின் படை

ஆனால் சீக்கிரத்தில் பாரீஸ் மக்கள்-குறிப்பாக பெண்கள், அரசாங்கம் கொஞ்சம் கொஞ்சமாக, ''பிஸ்மார்க்'' இன் பக்கம் சாய்வதை உணரத் தொடங்கினர். அரசாங்கம் நடந்து கொண்டிருக்கும் இடமான ''ஹோட்டலீ-த-வில்லி'' என்ற இடத்திற்கு, உணவுப் பங்கீடு முறையை எதிர்த்து, பெண்கள் ஆயுதந் தரித்த தங்கள் ஆடவருடன் ஊர்வலம் போவது என்று முடிவு செய்தார்கள்.

அந்த ஊர்வலத்திலிருந்து, ஒரு தூதுகோஷ்டியை துணை மேயர் பார்க்கச் சம்மதித்தார். ஆனால், அவர் பதட்டப்பட்டு தன் நிலை தடுமாறியபோது, அவருடைய பாதுகாப்பாளர்கள், கோபித்துக்கொண்டிருக்கும் மக்கள் மீது சுட்டார்கள். மக்களோடு மக்களாக வந்திருந்த தேசிய பாதுகாவல் படை திருப்பிச் சுட்டது.

இந்தத் தூதுக்குழு தோல்வியடைந்தது. ஆனால் பயந்துபோன அரசு, பெண்களின் எல்லா நிறுவனங்களையும் மூடிவிட உத்திரவிட்டது. பத்திரிகைகள் தடை செய்யப்பட்டு, பலர் கைது செய்யப்பட வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டன. ''தியரின்'' அரசாங்கம், பிப்ரவரி 26-ம் தேதி பாரீசை விட்டுக் கொடுக்கும் சரணாகதி ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது.

எதிர்த்து எழும் பாரீஸ் மக்களைச் சரணடையச் செய்ய, தியர் தன்னுடைய ஜெனரல், ''வினாய்'' விட்டு தேசிய காவல் படையிடம் இருக்கும் இருநூற்று ஐம்பது பீரங்கிகளைப் பிடுங்கச் சொன்னார். இந்தப் பீரங்கிகள், மக்கள் தாங்கள் வசூலித்த நிதியிலிருந்து வாங்கியவை. அவர்கள் அதைத் திருப்பிக்கொடுக்க மறுத்தார்கள்

பெண்களும் குழந்தைகளும், பீரங்கி வைத்திருக்கும் இடத்திற்குச் சென்றனர். காவற்படையுடன் சேர்ந்து, உயரமான ''மௌண்ட்மார்டியின்'' மீது நிறுத்தி காவல் புரிந்தனர்.

## ஜெனரலைக் கைது செய்தனர்!

தியரின் ஆட்கள் வந்ததின் அடையாளமாக, மாதா கோவில் மணி அடிக்கத் தொடங்கியது. ஆண், பெண், குழந்தைகள் அடங்கிய சகல பகுதி மக்களும்

"மௌண்ட் மார்டியை" நோக்கி ஓடினார்கள்.

அவர்கள் அத்தனை பேருமே திடீரென்று மேலே உயர்த்திவிட்டார்கள் போல் தோன்றியது குழந்தைகளைத் தேடி, கிழவர்களும் வந்துவிட்டனர்.

இந்த ஜனப்பகுதி, தியரின் ஆட்களுக்கும், பீரங்கியைப் பாதுகாக்கும் காவற் படைக்கும் இடையில் மிகப் பெரிய அரணாக இருந்தது.

தியரின் ஆட்களுக்கு சுட உத்திரவிட்டபோது, பெண்கள் கேட்டார்கள், "நீங்கள் எங்கள் மீதா சுடப் போகிறீர்கள்? எங்கள் சகோதரர்கள் மீதா? எங்கள் கணவன்மார்கள் மீதா? எங்கள் குழந்தைகள் மீதா?" என்று.

கூட்டத்திலிருந்து "கலகம் செய்யுங்கள்" என்று ஒரு குரல் வந்தது. வீரர்கள் குழப்பமடைந்தனர். அவர்கள் தெளிவுற்றபோது மக்களோடு சேர்ந்து அந்த இடத்திலேயே தங்கள் ஜெனரலைக் கைது செய்தனர்.

## தொழிலாளி வர்க்க ஆட்சி ஏற்பட்டது!

நகரத்தின் பல பகுதிகளில், தியரின் வீரர்களைப் பெண்கள் சந்தித்து அவர்களைத் தங்கள் சகோதர, தேசிய காவற்படைக்குத் திருப்பினர்.

தேசிய காவற்படை தலைமை வகிக்க, மக்கள் நகர மத்திக்கு நடந்தனர். பிற பகுதியிலிருந்தும் தொழிலாளர்கள் சேர்ந்துகொண்டனர். மாலைக்குள் கேந்திரப் பகுதிகள், அரசாங்க அலுவலகங்கள் அத்தனையும் தேசிய காவற்படை வசமாயின. அதன் கட்டளைப்படி, செங்கொடி ஏற்றப்பட்டது.

ஆம், 1871-ம் ஆண்டு, மார்ச்சு 18-ம் நாள் உலகத்தின் முதல் தொழிலாளி வர்க்க, சர்வாதிகார ஆட்சி ஏற்பட்டது.

தியரின் அரசாங்கம் "வார்சலேஸ்"க்கு ஓடியது. பத்து நாட்களுக்குப் பிறகு, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட "கம்யூன்" அரசாங்கக் கட்டிடமான ஹோட்டல்—த—வில்லிக்குச் சென்றது. பெருந்திரளான ஆண்களும், பெண்களும் இந்தப் புதிய அரசை, சக்தியை, நம்பிக்கை என்ற மக்கள் சக்தியை வாழ்த்தி வரவேற்றனர்.

முதன்முறையாக பெண் சுதந்திரத்தைப் பற்றியும், சமத்துவத்தைப் பற்றியும், சில பிரகடனங்களைச் செய்ததால், ஏராளமான பெண்கள் "கம்யூனு"க்குப் பின்னால் அணி திரண்டனர். ஆனாலும் கம்யூனால், அதற்குமேல் எதுவும் செய்ய முடியவில்லை. தன்னைப் பாதுகாத்துக்கொள்ளவே பெரும் போராட்டங்களை நடத்த வேண்டிய நிலையில் அது இருந்தது.

## இரத்த ஆறு ஓடியது!

"நாம் வெற்றி பெறவேண்டும். நம் அன்புக்குப் பாத்திரமானவர்கள், அத்தனைபேரையும் சாக்க, நாம் போராடவேண்டும். இந்தப் போராட்டம் மனித சக்தியின்—மக்கள் சக்தியின்-வெற்றியில்தான் முடியும். தோல்வியால் பாதிக்கப்படுபவர்கள் — ஏனென்றால் நமக்கோ, நமது எதிரிக்கோ கருணை என்பதைக் காட்டப் போவதில்லை. நம்மிடம், துப்பாக்கி இல்லாவிட்டாலும் பாவாயில்லை. பெரிய பாறைகளைத் தூக்கி எறிந்து, இந்தத் துரோகிகளை நசுக்குவோம் என்று பெண்கள் தொழிற்சங்கம் அறைகூவல் விடுத்தது.

மேமாதம் இருபத்து ஒன்றாம்தேதி "வார்ஸலேஸி"லிருந்து துருப்புகள் பாரீசுக்குள் நுழைந்தது. பத்து நாட்கள், இரத்தம் ஆறாக ஓடியது. மக்கள் துணிகரமாக ஒவ்வொரு அடியிலும் போராடினார்கள். தெருக்கள் பூராவும் தடுப்பு அரண்கள். எங்கு பார்த்தாலும், பெண்களும் சிறுவர்களும் போரில் பங்குகொண்டனர். பெண்கள் சாக்குகளைத் தைத்து, மண் நிரப்பி அரண் அமைத்தனர். சிலர், மண்வெட்டி (பிக்காக்ஸ்) களைக் கொண்டு குழி தோண்டினர். அரை நாளில் அறுபது அடிக்கு நீளமாய் அரண் அமைத்தனர். ஒரு புதிய பெண்கள் பட்டாளமே அமைக்கப்பட்டது யார் இந்த வீரமிக்க பெண்கள்?

அவர்களில், ஒயின் விற்கும் பெண் இருந்தாள்; பால் விற்கும் பெண்; ரொட்டி சுடுபவள், நர்சுகள்; முடி அலங்காரம் செய்வோர், துணி வெளுப்பவர்கள், ஒரு வங்கி ஊழியரின் மனைவி - இப்படி சகல பகுதிகளிலிருந்தும் பெண்கள் அணி திரண்டிருந்தனர்.

## பயங்கர அடக்குமுறை

சண்டையில் மக்கள் படையின் பிடி தளர ஆரம்பித்தது. கொடூரமான அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது. மரணத் தறுவாயில் குற்றுயிராயிருக்கும் பெண்கூட, ஆடைகளையப் பெற்று, அவமானப் படுத்தப்பட்டாள். கூட்டமாக அவர்களை நிறுத்தி, குருட்டாம் போக்கில் சுட்டார்கள். அவர்களில் சிலரை அழைத்து, மண்வெட்டியைக் கொடுத்து, அவர்களுக்கே புதைகுழி தோண்டச் செய்தார்கள். காவலாளிகள் பெண்களை அடித்து நொறுக்கினார்கள். பெரும்பாலும் அவர்கள் மார்பகத்தில் தான் அடித்தனர். சில பெண்கள் குறைப் பிரசவமுற்றனர். பலருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

கீர்த்திமிக்க இந்தப் பெண்களின் தலைவியான லூயிஸ் மிச்சல் குற்றம் சாற்றப்பட்டு, நீதிமன்றத்தில் நின்றபோது கூறினாள்: "நான் இந்தப் புரட்சியின் சொந்தக்காரி. நான் இதனால் ஏற்பட்ட சகல விளைவுகளுக்கும் பொறுப்பாளவள்" என்று. அவளுக்குப் பத்தாண்டுகள் தண்டனை வழங்கினர்.

இந்தப் பெண்களில் பெரும்பகுதி தொழிலாளி வர்க்கத்திலிருந்து வந்தவர்கள். ஆனாலும், மேல் தட்டு வர்க்கத்திலிருந்து வந்து சமதர்மக் கொள்கையை ஏற்றுக் கொண்டு, துணிவுடன் பணியாற்றியவர்களும் உண்டு. சர்வ பரித்தியாகத்திற்கும் துணிந்து, ஏழை, கம்யூனுக்குப் பின்பலமாய் நின்று, ஒரு புதிய சமுதாயத்தை - சமத்துவமும் சுதந்திரமும் சமநீதியும் கொண்ட புதிய சமுதாயத்தை — ஏற்படுத்த முன்னின்று உழைத்த, அந்த தீரமிக்க பெண்களுக்குப் புகழ்மாலை எத்தனை சூட்டினாலும் தகும்.

❋

> "புரட்சிகரமான சித்தாந்தம் என்பது இல்லாமல், புரட்சிகரமான இயக்கம் வளர்வது என்பது சாத்தியமல்ல. மிகச் சிறந்த தத்துவத்தைத் தன் வழிகாட்டியாகக் கொள்ளாத ஒரு கட்சி, தொழிலாளி வர்க்கத்தின் முன்னணிப்படையாகத் திகழ முடியாது."
>
> — வி. ஐ. லெனின்
> 'இனி என்ன செய்யவேண்டும்'
> என்ற நூலில்

# அற்புதக் கரங்கள்!

தணிகைச் செல்வன்

குரங்குத் தோலைக் கழற்றிப் போட்டு மனிதன் தோன்றினன் — அவன்
கூனல் முதுகை நிமிர்த்தி மெல்லக் காலை ஊன்றினன்!
இறங்கிவந்து மரத்தினின்றும் இரையைத் தேடினன் — தன்
இரையைக் கொல்ல கல்லெடுத்து விலங்கைச் சாடினன்
மரங்களிலும் மலைகளிலும் ஒன்று கூடினன் — தப்பி
வாழ மேலும் மேலும் புதிய கருவி நாடினன்
கரங்களினல் விளைந்ததுதான் மானிடன் குலம் — அவன்
கருவிகளே சமூகத்தின் உறவுகளாகும்! (1)

கருவிமாற சமூகத்தின் உறவு மாறிடும் — அந்தக்
காரணத்தால் வர்க்கங்களின் உறவு மோதிடும்
உறவு மோத சரித்திரத்தின் உருவம் மாறிடும் — அதன்
உருவம் மாற அரசினேடு பிறவும் மாறிடும்
கருவி முதல் அரசு வரை மனிதக் கைகளால் — மாறக்
காணுகிறேம் அவைகள் என்ன மாயக் கைகளா?
தெரிய வேண்டும் இதனுடைய ரகசியம் என்று — நான்
திறந்து வந்தேன் வரலாற்றின் கல்லறை யினின்று! (2)

மலைநிகர்த்த தோளுடைய மனிதனைக் கண்டேன் — அந்த
மனித மகன் கைபிடித்துப் பேசிடச் சென்றேன்:
"சிலைநிகர்த்த வலிவுமிக்க வெற்றிச் செல்வனே — உனது
திருக்கரங்கள் பெற்றிருக்கும் மாயந்தான் என்னே?
உலக முதல் உயிர்க் குலங்கள் தோன்றிய நாளாய் — உன்
ஒப்பரிய வளர்ச்சியினைக் கண்டேன் ஆவலாய்
கலைகள் முதல் தொழில்கள் வரை உனது கரத்தினல் — வளரக்
கருப் பொருளாய் இருப்பதெலாம் எதன் திறத்தினல்? (3)

"பாருங்கள் என் கைகள்தரும் அற்புதக் காட்சி" — என்று
படரும் கையை நீட்டினன் ஓர் பயங்கரக் காட்டில்!
சீறும் நாகம் புரளுகின்ற முள்ளுக் காடுகள் — அவன்
செங்கரங்கள் பட்டதுமே நெல்லுக் கழனிகள்!
ஆறுகளின் மடியினிலே கைகளை வைத்தான் — அங்கு
அணைகள் நூறு கட்டிப் பாலை வனத்தை நனைத்தான்!
வாரிதியின் அலைகளுக்குள் கையை நீட்டினன் — கடலில்
வாரிவந்து முத்துப் பவழம் கொட்டிக் காட்டினன்! (4)

பொட்டல் வெளி மைதானத்தில் விரல்களை வைத்தான் — ஒரு
புதிய நகர் உதயமாகும் அழகைச்சு வைத்தான்!
கொட்டி வைத்த பஞ்சுப் பொதி தன்னை எடுத்தான் — ஒரு
கோடி மலர் போல வண்ண ஆடை விரித்தான்!

எட்டுத் திக்கும் கைகளாலே பாதை வெட்டினன் — உலகின்
எல்லை விட்டு வானத்திலே பறந்து காட்டினன் !
பட்டு மேனியாளருக்கு வைரங்களாலே — வெட்டிப்
பரிசளித்தான் அழுக்கடைந்த கைகளினலே ! (5)

பூதம் போன்ற யந்திரங்கள் பூட்டும் கையினல் — நித்தம்
புத்தம் புதுப் பொருள் குவித்தான் ஆலைப் புகையினில்
“ சாதம் முதல் ராக்கெட் வரை சமைத்த கரங்களே ! — இந்தத்
தரணியென்ற குழந்தையினைச் சனித்த கைகளே !
நாதியின்றி நீங்கள் மட்டும் நரம்பும் தோலுமாய்க் — கிடக்க
நாட்டில் சிலர் வாழ்வதென்ன நீண்ட காலமாய் ?
சாதனைகள் புரியும் உங்கள் வெற்றிக் கரங்கள் — ஏழைச்
சாதி என்னும் கறை துடைக்க என்ன தடங்கல் ? ” (6)

## மனிதன் பேசினன் :-

“ தொட்டதெல்லாம் உயிர் பெற்றிடும் காட்சியைக் கண்டீர் — எமது
தோள்கள் பெற்ற சக்தியினை நேரினில் கண்டீர் !
மட்டிலாத இந்தச் சக்தி மாய சக்தியா ? என்று
மயங்க வேண்டாம் ! இதன் பெயரே உழைப்புச் சக்தியாம் !
விற்க வந்தோம் இதனை நாங்கள் உலகச் சந்தையில் - இதை
விலைகுறைத்து வாங்கிக் கொண்டார் மலிவுச் சந்தையில் !
அற்பச் சோறு, உயிரைக் காக்கப் பெற்றுக் கொள்கிறோம் - கையின்
அற்புதத்தை அவர்களுக்கு விற்றுச் செல்கிறோம் ! (7)

“ உழைப்புச் சக்தி முழுவிலையும் எங்களுக்கென்றே - நாங்கள்
உரிமையாக்கி விடுதலையைப் பெற்றிடவென்றே
விழிப்புணர்ச்சி ஊட்டியது மார்க்சியமாகும் ! - அதை
விதைத்தறுத்து வென்ற கொள்கை லெனினியமாகும் !
இழுத்துப் பூட்டி மூலதனச் சிறையினில் வைத்து - எங்கள்
இரு கரத்தைக் கூலியெனும் தளையில் பிணைத்து
கழுத்து மேலே நிற்பவர்கள் கதறிக் கூவிட - எங்கள்
கைவிலங்குச் சங்கிலிகள் சிதறித் தூளிட (8)

“ துடித் தெழுந்தால் உழைத்துழைத்துச் சாகும் வர்க்கமே ! - இனிச்
சுரண்டலுக்கு எமது கைகள் முடிவு கட்டுமே !
அடிதொழுது கிடந்ததெல்லாம் அந்தக் காலமே ! - இனி
அடிமைகளே ஆண்டிடுவர் இந்த ஞாலமே !
கொடி சிவக்கக் கை சிவக்கக் குமுறி நின்றோமே ! - அன்று
குண்டுபட்டுக் கொள்கையெலாம் சிவந்த தினம் மே !
இடி இடிக்கத் துவங்கிய நாள் அன்றைய நாள் மே ! - அந்த
எங்குக் கைகள் சரித்திரத்தைத் தொடர்ந்து எழுதுமே ! ” (9)

# பாரிஸ் கம்யூன் படிப்பினைகள்!





பிரெஞ்சு சோஷலிஸ்டுகள் செய்த மாபெரும் தவறு தேசபக்தியையும் சோஷலிசத்தையும்—இந்த இரண்டின் ஒன்றுக்கொன்று நேர்மாறான பணிகளையும் ஒன்றாக இணைத்ததுதான்.

1870-செப்டம்பரில் வெளியிடப்பட்ட கம்யூனிஸ்ட் அறிக்கையில் தவறான தேசிய எண்ணங்களினால் பிரெஞ்சுப் பாட்டாளி வர்க்கம் தவறாக வழிகாட்டப்படுவதற்கு எதிராக மார்க்ஸ் எச்சரிக்கை விடுத்திருந்தார். இம்மாபெரும் புரட்சிக்குப் பின் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன, வர்க்க விரோதங்கள் கூர்மையடைந்துள்ளன. அப்போது ஐரோப்பிய பிற்போக்குசக்திகளுக்கு எதிரான போராட்டம் புரட்சிகர தேசம் முழுவதையும் ஒன்றுபடுத்தியிருக்கும்போது, இப்போது தொழிலாள வர்க்கம் தன்னுடைய நலன்களை தனக்கு விரோதமான மற்ற வர்க்கங்களின் நலன்களுடன் இணைக்க முடியாத நிலைமையுள்ளது. தொழிலாளி வர்க்கத்தின் பணி முதலாளி வர்க்க நுகத்தடியிலிருந்து தொழிலாளர்களின் சோஷலிஸ்ட் விடுதலைக்காகப் போராடும் பணியேயாகும்.

## அதிகார வர்க்கம் ஒழிக்கப்பட்டது!

முதலாளித்துவ 'தேச பக்தி'யின் உண்மை சொரூபம் வெளிப்பட அதிககாலம் பிடிக்கவில்லை. புருஸ்ஸியர்களுடன் அவமானகரமான சமாதான ஒப்பந்தம் செய்து கொண்ட பின், வெர்ஸைல்ஸ் அரசாங்கம் அதன் அடுத்த வேலையைச் செய்யத் தொடங்கியது — தன்னை அச்சுறுத்திய ஆயுதங்களை பாரிஸ் தொழிலாளி வர்க்கத்தின் கைகளிலிருந்து பறிப்பதற்கு அது தாக்குதல் தொடுத்தது. கம்யூனையும் உள்நாட்டு யுத்தத்தையும் பிரகடனம் செய்து தொழிலாளர்கள் இதற்குப் பதில் கூறினர்.

சோஷலிஸ்ட் தொழிலாளி வர்க்கம் பிளவுபட்டிருந்தாலும் ஒருமைப்பாட்டுக்கு கம்யூன் ஒரு சீரிய உதாரணமாகும். முதலாளி வர்க்கமே இவ்வாறு பிரகடனம் செய்ய முடியும். இதன்மூலம் தொழிலாளி வர்க்கம் ஜனநாயகக் கடமைகளை நிறைவேற்ற முடிந்தது. அதிகாரத்தைக் கைப்பற்றிய தொழிலாளி வர்க்கம் சிக்கலான சட்டம் எதுவுமின்றி நேரிடையான முறையில் சமூக அமைப்பை ஜனநாயகமானதாக்கும் நடவடிக்கையை நிறைவேற்றிற்று. அதிகார வர்க்கத்தை ஒழித்துக்கட்டி எல்லா உத்தியோகங்களையும் தேர்ந்தெடுக்கப்படக் கூடியதாக்கிற்று.

## தவறான வழிகள்

ஆனால் இந்தச் சீரிய வெற்றியின் பலன்களை இரு தவறுகள் அழித்தன. தொழிலாளி வர்க்கம் பாதி வழியில் நின்றது. 'சுரண்டுபவர்களை ஒழித்துக்கட்டும்' பணியை மேற்கொள்வதற்குப் பதில் பொதுவான தேசியப் பணியில் ஒன்றுபட்டு நாட்டில் மேலான நீதியை நிலைநாட்டும் கனவில் அது தவறான வழியில் சென்றது. பாங்குகள் போன்ற நிறுவனங்கள் எடுத்துக்கொள்ளப்படவில்லை. 'நியாயமான பரிவர்த்தனை' பற்றிய பிரவ்தானிஸ்ட் கொள்கைகள் இன்னமும் சோஷலிஸ்டுகளிடையே நிலவின. இரண்டாவது தவறு, தொழிலாளி வர்க்கம் மிதமிஞ்சிய பெருந்தன்மை காட்டியதாகும். தன்னுடைய எதிரிகளை அழிப்பதற்குப் பதில் அது தார்மீக 'செல்வாக்கை' அவர்கள் மீது செலுத்த முயன்றது. உள்நாட்டு யுத்தத்தில் நேரடி இராணுவ நடவடிக்கையின் முக்கியத்துவத்தை அது குறைத்து மதிப்பிட்டது. வெர்ஸைல்சுக்கு எதிரான உறுதியான தாக்குதல் பாரிசில் அதன் வெற்றியைக் கொண்டுவந்திருக்கும். அந்தத் தாக்குதலைத் தாமதப்படுத்தியது. வெர்ஸைல்ஸ் அரசாங்கத்துக்கு அரிய சக்திகளைத் திரட்டுவதற்கும், ரத்தம் பெருக்கெடுத்த மே வாரத்துக்கு தயாரிப்புச் செய்வதற்கும் அவகாசம் அளித்தது.

## படிப்பினைகள்

இந்தத் தவறுகள் இருந்தபோதிலும் கம்யூன் 19-வது நூற்றாண்டின் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் சிறப்பான எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. கம்யூனின் வரலாற்று முக்கியத்துவத்துக்கு மார்க்ஸ் பெருமதிப்பு அளித்துள்ளார். பாரிஸ் தொழிலாளி வர்க்கத்திடமிருந்து வெர்ஸைல்ஸ் கும்பல் துரோகத்தனமாக ஆயுதங்களைப்பறிக்க முற்பட்டபோது தொழிலாளர்கள் எதிர்ப்புக் காட்டாமல் நிராயுதபாணி ஆவதற்கு அனுமதித்திருந்தால், அந்தப் பலவீனத்தினால் ஏற்பட்டிருக்கும் நாசகரமான விளைவு தொழிலாளி வர்க்கம் ஆயுதங்களை வைத்துக் கொள்ளுவதற்காகப் போராடி அடைந்திருக்கும் சேதத்தைவிட அதிகமாக இருந்திருக்கும்.

கம்யூனின் தியாகங்கள் மகத்தானவை. தொழிலாளி வர்க்கத்தின் பொதுப் போராட்டத்துக்கு அது முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஐரோப்பா முழுவதிலும் அது சோஷலிஸ்ட் இயக்கத்தைத் தூண்டிவிட்டது. உள்நாட்டு யுத்தத்தின் பலத்தை அது வெளிப்படுத்திற்று. தேசபக்திப் பிரமைகளை அது போக்கிற்று. பொதுவான தேசிய நோக்கங்களுக்காக முதலாளி வர்க்கத்தின் முயற்சிகள் பற்றிய கோமாளித்தனமான நம்பிக்கைகளை அது தகர்த்தெறிந்தது. சோஷலிஸ்ட் புரட்சியின் பணிகளை திட்டவட்டமாக வைக்குமாறு ஐரோப்பிய தொழிலாளி வர்க்கத்துக்கு கம்யூன் போதித்தது.

தொழிலாளி வர்க்கம் கற்ற படிப்பினை மறக்கப்படமாட்டாது. ரஷ்யாவில் (1905) டிசம்பர் எழுச்சியில் பயன்படுத்திக்கொண்டதைப்போல தொழிலாளி வர்க்கம் இந்தப் படிப்பினையைப் பயன்படுத்திக்கொள்ளும்.

—லெனின்

('கம்யூன் படிப்பினைகள்' என்ற கட்டுரையில் எழுதியது)

# ஆப்பிரிக்க நாடுகளின் விடுதலை இயக்கம்!

★ —மைதிலி சிவராமன் ★

மே தினத்தைக் கொண்டாடும் இன்று—கோடிக்கணக்கான மக்கள், உலகம் பூராவிலும் தங்கள் தேசிய விடுதலைக்காக போராடிக் கொண்டு வருகிறார்கள்.

மிகவும் தீரமான படலத்தை, இந்த விடுதலை இயக்கத்தில்,வியட்னா மிய மக்கள் எழுதிக் கொண்டு வருகிறார்கள். நமக்கு மிகவும் அண்மையிலுள்ள, ''வங்க தேச' மக்கள், தங்களுடைய எதிர்ப்பை, ராணுவ ஆட்சிக்கு தெரிவித்து போராடி வருகிறார்கள்.

தொலைவில், ஆப்பிரிக்க கண்டத்தில், பல போராட்டங்களும், கைகலப்பும் நடந்து கொண்டு வருகின்றன.

அங்கும், ஆசிய மக்களைப் போலவே—ஆப்பிரிக்கர்களும், தங்களை அடக்கி ஆளும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து போரிடுகிறார்கள். இந்தப் போராட்டம், போர்த்துக்கீசிய ஆதிக்கத்திலுள்ள மொஸாம்பிக், அங்கோலா, மற்றும் கினியா-பிசுநமீபியா, ஜிம்பவே போன்றநாடுகளில், நடந்து வருகிறது. இந்த ஆதிக்கத்தை நிரந்தரமாக்க விரும்புபவர்கள், போர்த்துகீசிய, தென் ஆப்பிரிக்க, மற்றும் தென் ரொடீசிய அரசுகளாகும். அவர்களுக்கு ஆதாரமாகவும், தாங்கும்தூணாகவும் இருப்பது, அமெரிக்க ஏகாதிபத்தியம்.

## ஆப்பிரிக்காவில் போர்ச்சுகல்

பதினைந்தாம் நூற்றாண்டில் போர்த்துகீசிய ஆதிக்கம் ஆரம்பமாகியது. பாசிச அடக்குமுறையில் தன்னுடைய மக்களை அடக்கி வைத்திருக்கும்-ஐரோப்பாவிலேயே வறுமையில் சிக்கியிருக்கும்-போர்த்துக்கீசிய சர்வாதிகாரம், அரசு இந்த நாடுகளை அடிமைகளாகவைத்திருக்க தன்னுடைய வருட செலவில் 40 சதம் செலவழித்து, ஒரு பெரிய போரையே நடத்துகிறது.

ஆப்பிரிக்காவின் தென்மேற்கில் இருக்கும் அங்கோலா, 60 லட்சம் ஏழை மக்களைக் கொண்ட ஆப்பிரிக்காவின் வளமிக்க நாடுகளில் ஒன்று. அங்கோலாவின் முன்னேற்ற விடுதலை இயக்கத்தை (Mpla) தலைமை தாங்கும் தோழர் அகஸ்டினோ நெடே, 1961 ஆம் ஆண்டு, ஆயிரத்திற்கும் மேற்பட்ட விடுதலை தலை வீரர்களை விடுவிக்க நடத்திய கைகலப்பின் மூலம், ஆயுதம் தாங்கிய போராட்டத்தை ஆரம்பித்தார்.

அங்கோலாவின் மூன்றில் ஒரு பகுதி, 1968-க்குள் விடுபட்டு, மீதமுள்ள 15 மாவட்டங்களில், 10 மாவட்டங்களில் போராட்டம் நடந்துவருகிறது. நகரங்கள், கடைசி கட்டத்தில் விடுவிக்கப்படும். ஆனால் போர்த்துகீசிய அரசும், அவர்களின் எசமானர்களும், சோம்பியிருக்க வில்லை. அவர்கள் போட்டி விடுதலை இயக்கங்களை ஆரம்பித்து, வால் பிடிக்கும் காங்கோ-கின்சாசா, நாட்டிக்போட்டி அரசாங்கத்தை ஆரம்பித்திருக்கிறார்கள்... வேறு எந்த உதவியும் யாரிடமும் எதிர்பாராமல், தங்கள் உள்ள உறுதியைத் துணையாகக் கொண்டு கொரில்லாப் புரட்சியாளர்கள், தங்கள் போராட்டத்தைத் தொடர்ந்து வருகிறார்கள்.

கினியா-பின்ஸே (போர்த்துகீசிய கினியா) இது 5 லட்சம் மக்களைக் கொண்ட ஆப்பிரிக்காவின் வடமேற்கில் உள்ள நாடு. 1959 வரை, கினியா மக்கள், லிஸ்பனுக்கு சுதந்திரத்திற்காக மனுச்செய்து கொண்டிருந்தார்கள்.

1959-ம் ஆண்டு, ஆகஸ்டு 3-ம் நாள் பின்ஸீ துறைமுக தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி வேலை நிறுத்தம் செய்தார்கள். ஆனால், போர்த்துகீசிய போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்து, 50 தொழிலாளர்களைச் சுட்டு வீழ்த்தியது, நூற்றுக்கும் அதிகமானவரை காயப்படுத்தியது. இது, சுதந்திர போராட்ட வீரர்களின் எண்ணத்திலே, போராட்டம் என்றால் என்ன என்பதில், புதிய கணிப்பை, புதிய தெளிவை உண்டாக்கியது.

அமைதி வழி, லிஸ்பனுக்கு புரியாத ஒன்று, அவர்களுக்குப் புரியக் கூடிய முறையில், அவர்களிடம் பேச வேண்டும் என்பதை அறிந்து கொண்டார்கள். புதிய கொரில்லா யுத்தத்திற்கான இயக்கம் ஆரம்பமாகியது. கினியா, வெர்டிமுனை சுதந்திரக் கட்சி, (Paigc) தனிப் பெரும் தலைவர், தோழர் அமில்கர் கேபரல் தலைமையில், இயங்க ஆரம்பித்தது.

1956-ம் ஆண்டு இந்த இயக்கம் ஆரம்பிக்கப்பட்ட போது, நகர்புறங்களில், வெகுஜன ஆர்ப்பாட்டங்கள் வேலை நிறுத்தங்கள் முதலியவற்றை நடத்தியது. பின்னல், இது கிராமப்புறங்களுக்குச் சென்று' கொரில்லா இயக்கத்தை ஆரம்பித்தது. ஒளிவு மறைவான வேலைகள் நகரங்களில் நடைபெற்று வந்தது. போர்த்துகீசிய அரசு ரகசிய போலீசை அமைத்து கொடூரமான அடக்கு முறையைக் கட்டவிழ்த்தது. போர் முனையில், சித்திரவதைப் பட்டும், நூற்றுக்கணக்கான கினிய மக்கள் மடிந்தனர்.

காப்ரல், மூன்றில் இரண்டு பகுதியை, விடுவித்தார். விடுவிக்கப்பட்ட பகுதிகள், ஆதிக்க வெறியர்களால் தாக்கப்பட்டுக் கொண்டிருந்தும், சுதந்திர வாழ்க்கையை மேற்கொண்டு வருகிறது.

அரசின் அதிகாரங்கள், நகரத்தில் மட்டும் செல்லும். அங்கிருந்து விடுவிக்கப்பட்ட பகுதியில், ''நாடோ'' வின் தலைமையால் அளிக்கப்பட்ட கொடிய நாபம் குண்டுகளையும், விஷ வாயுக்களையும், பொழிந்து கொண்டிருக்கிறது.

கினியாவின் விடுதலை இயக்கம், போர்த்துகீசியருக்கு எதிராக எடுக்கப்பட்ட ராணுவ நடவடிக்கை இல்லை.

சிரிய அரசியல் உணவும், ஜனநாயகத்திற்காக உள்நாட்டு, வெளி

நாட்டு ஆதிக்கத்தை எதிர்த்து போராடும் உணர்வும், ஊடுருவி நிற்கும், ஒரு இயக்கம் அது.

பத்திரிகை நிருபர், பாஸில் டேவிட்சனிடம், 'அரசியல்தயாரிப்புகள்தான் மிகவும் கடினமானதாயிருக்கிறது.' அரசியல் தயாரிப்பு இல்லாமல் நிலையானதாக எதையும் செய்ய முடியாது.

இந்த அரசியல் தயாரிப்புகள், மிகவும் கடினமானதாகவும், சிக்கலானதாகவும் இருந்தும், இதுதான் இந்த தேசிய விடுதலை இயக்கத்தில், மிகவும் முக்கியமானதாக உள்ளது'' என்று கேப்ரல் கூறினர்.

இந்த கடினிய பின்னணியில்தான், போர்த்துகீசிய அரசு, கடுமையான எதிர்ப்பை சந்திக்கிறது. இங்குதான். அது தன்கொடூரமான அடக்குமுறையையும் கட்டவிழ்த்து விட்டிருக்கிறது.

## ஜிம்பாவே

பிரிட்டனல் அடிமைப்படுத்தப்பட்ட மக்களால், ஜிம்பாவே என அழைக்கப்படும் தென் ரொடீஷியா, ஒடுக்கிய வெள்ளை நிற வெறியர்களால், 1965-ம் ஆண்டு சுதந்திர நாடாகப் பிரகடனப் படுத்தப்பட்டது. இரண்டு லட்சம் வெள்ளையர்களால் அந்த மண்ணின் வித்துக்களான, 40 லட்சம் கறுப்பர்களுக்கு, அரசியல், பொருளாதார சுதந்திரம் மறுக்கப்பட்டுவந்தது. ஐக்கிய நாடுகள் சபை, பிரிட்டனை தன பலத்தை உபயோகப்படுத்தி, வெள்ளைக்கலகக்காரர்களைக் கட்டுப்படுத்த கேட்டுக்கொண்டது. ஆனல், சரித்திரத்தில் முதல் முறையாக, பிரிட்டன் திடீரென்று, ''காந்தியவாதி''யாக மாறி ''ஹிம்சை''யை நிராகரித்தது. பாதுகாப்புசபை, தென் ரொடீசியாவுடன், வர்த்தக பகிஷ்கரிப்புக்கு, உத்தரவிட்டது. போர்ச்சுகல், தென் ஆப்பிரிக்க அரசின் உதவியோடு, இதையும் பிரிட்டன் மீறியது.

ஆனல், ஜிம்பாவே மக்கள், ஐக்கிய நாடுகள் சபை தங்களுக்கு நீதியைப் பெற்றுத் தந்துவிடும் என்று நம்பி, சோம்பியிருக்கவில்லை. அவர்கள் ஆயுதம் தாங்கிப் போராட முயன்றனர். இந்தப் போராட்டம் பல தடைகளைக் கண்டாலும், இன்றும் தொடர்கிறது.

## நமீபியா

ஜெர்மனல் ஆதிக்கம் செலுத்தப்பட்ட நமீபியா என்று அழைக்கப்பட்டுவந்த தென்மேற்கு ஆப்பிரிக்கா, உலக நாடுகள் சபையால் பிரிட்டன்மூலம் தென் ஆப்பிரிக்க நாட்டிற்கு உரிமைக் கட்டளையாகக் கிடைத்த பகுதி.

அன்றிலிருந்து, நிறவெறி கொண்ட ''பிரேட்டோரிய'' அரசாங்கம் தன்னுடைய தனிச் சொத்தாக இந்தப் பகுதியை நினைத்துக் கொண்டது. உலகத்தின் இரண்டாவது வைர உற்பத்தியைக் கொண்ட இந்தப் பகுதி இன்னும் 20 ஆண்டுகளில் முழுமையாக ஏகாதிபத்தியங்களால் சுரண்டப்பட்டுவிடும். தென் ஆப்பிரிக்காவின் மிகவும் வளமான வியாபார கேந்திரமாக இது திகழ்கிறது. தென் ஆப்பிரிக்க பாஸிஸ போலீஸ் போன்ற ஒரு போலீஸ் அரசாங்கம் இங்கு நடைபெறுகிறது.

''பிரேட்டோரியா''வின் அடக்குமுறை அனைவருக்கும்தெரிந்தஒன்று. 1970-ம் ஆண்டில், அரசியலுக்காகக் கொல்லப்பட்டவர்கள் தென் ஆப்பிரிக்காவில்தான் அதிகம்.

1966-ம் ஆண்டு ஐக்கிய நாடுகள் சபை, கட்டளை உரிமையை ரத்து செய்து நமீபியாவின் ஆட்சியை ஏற்றுக்கொண்டது. ஆனல், இது வெறும் காகித அளவில்தான். தென் ஆப்பிரிக்க அரசு, தன்னுடைய சட்டங்களை இன்னும் [illegible]க்கியது. ஐ. நா. சபை இதுவரை சுமார் 90 தீர்மானங்களை நிறைவேற்றிவிட்டது—பலன்?

ஐ நா. சபையின் உறுப்பினர்கள் விடுதலை வீரர்களுக்கு வாய் வார்த்தைகளால் புகழ் பாடிக் கொண்டிருக்கும்பொழுது, விடுதலை வீரர்கள் அரக்கத்தனமான ஆதிக்க வெறியர்களுக்கு எதிராகப் போராடி வருகிறார்கள்.

தெ. மே. ஆப்பிரிக்க மக்களின் அமைப்பு (swapo) 1966-ம் ஆண்டு ''ஒவாம்போ'' நாட்டில், தன்னுடைய கொரில்லாப் போர் முறையைத் துவக்கியது. கொரில்லாக்கள் இப்போது காடுகளிலும், மலைகளிலும் நிலப் பகுதிகளிலும் செயல்படுகிறார்கள்.

அவர்கள் எல்லாப் பக்கங்களிலும் தங்கள் விரோதிகளான பிரோட்டோரியா, அங்கோலா, ரொடீசிய அரசுகளால் சூழ்ந்து வளைக்கப்பட்டிருக்கிறார்கள்.

கொரில்லாக்கள் யாராவது பிடிபட்டனர் என்றால் அதற்குப் பொருள் மிகவும் மோசமான, மனிதத் தன்மையற்ற சாவு என்பது தான்.

ஆனல் இதுவும் அவர்களுடைய உள்ள உறுதியை இறுதிவரை போராடுவது என்பதைக் குலைக்கவில்லை.

## வலுமிக்க எதிரி—அமெரிக்க ஏகாதிபத்தியம்

ஆப்பிரிக்க விடுதலை இயக்கத்தின் வலுமிக்க எதிரி, ஆப்பிரிக்க மக்களைத் தலைமுறை தலைமுறையாகச் சூறையாடிவந்த உலக ஏகாதிபத்தியத்தின் தலைவனை அமெரிக்க அரசுதான்.

அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்சு, ஜெர்மனிய நாடுகளின் மொத்த முதலீடு ஆப்பிரிக்காவில் 4 பில்லியன் டாலர்கள். இருபெரும் சாம்ராஜ்யமாக, ராட்சச ஏகபோக உரிமையாக ஆங்கில அமெரிக்க கார்ப்பரேஷனும், தென் ஆப்பிரிக்க தங்கச் சுரங்கக் கம்பெனியும் ஆப்பிரிக்கா முழுவதும் செயல்படுகிறது. ஆங்கில—அமெரிக்க கம்பெனியின் நிர்வாகத்தில், 18 வைரச்சுரங்கம், 17 கோபால்டு சுரங்கம், 5 செம்புச் சுரங்கம், 15 தங்கச் சுரங்கம், 31 முதலீட்டுக் கம்பெனிகள் தவிர ஏராளமான கம்பெனிகள் உள்ளன. தெ. மே. ஆப்பிரிக்காவின் மிகப் பெரிய சுரங்கம், அமெரிக்க மெடல் கிளைமாக்ஸ் கம்பெனி நிர்வாகத்தில் உள்ளது.

அங்கோலாவிலுள்ள எண்ணெய் வளங்கள் பூராவும், அமெரிக்க, பிரிட்டானிய, பெல்ஜிய, ஜெர்மானிய நிர்வாகத்தில் உள்ளது. ஏகபோக ஜெர்மன் முதலாளியான ''குரூப்'' கம்பெனியிடம், இரும்புக் கனிவளம் சிக்கி இருக்கிறது. வைரம் அமெரிக்கரிடமும், செம்பு பிரிட்டிஷ்—ஜப்பானிய முதலாளிகளிடமும் இருக்கிறது.

அமெரிக்க பாங்குகளால், ஏற்படுத்தப்பட்ட 50 மில்லியன் டாலர் கடன் தென் ஆப்பிரிக்காவிற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அமெரிக்க ஏகபோகங்கள், இந்த அரசாங்கங்களை ஆதரிப்பதில் என்ன அதிசயம் இருக்கப்போகிறது? அவர்களில் சிலர் போர்ச்சுகலுக்குத் துணையாக கொரில்லாக்களை அடக்க, ராணுவத்தை தனிப்பட்ட முறையில் வைத்துள்ளார்கள்—

பலனாக "வரிச் சலுகை" அடைய-போர்ச்சுகலோ, 'நாடோ' வின் தன்மை அளித்த ஆயுதங்களை வெளிப்படையாகவே உபயோகிக்கிறது.

இந்த ஏகபோகங்களுக்குத் துணையாக அமெரிக்க அரசு ஐ. நா. சபையில் போர்சுகலுக்கும், தெ. ஆப்பிரிக்க அரசுக்கும் எதிராக எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கையையும் முட்டுக்கட்டை போடுகிறது.

ஐ. நாவின் தாக்கீதுகளை, மீறிய, போர்த்துகல் தென் ஆப்பிரிக்க அரசுகளை, தண்டிக்கும் ஒவ்வொரு நடவடிக்கைகளையும், பிரெஞ்சு, பிரிட்டிஷ் துணையுடன், அமெரிக்க அரசு தடுத்தது.

இந்த ஏகாதிபத்திய வாதிகளின், துணையில்லையானால் வெகு நாட்களுக்கு முன்பே இந்த ஆதிக்க அரசுகள், விடுதலை வீரர்களால் தூக்கி எறியப்பட்டிருக்கும்.

## கால ஓட்டத்தில்— வெறும் காகிதப்புலி

ஆப்பிரிக்க போர் வீரன் போராடுகிறான். தன்னுடைய நம்பிக்கையையும் துணிவையும்— சார்ந்து உலகத்தின் மிகப்பெரிய பட்டிமன்றமான ஐ. நா சபை அவனுக்கு, துரோகம் புரிந்துவிட்டது. அதனுடைய, முடிவில்லாத விவாதங்கள், அவனுடைய கொடூரமான கஷ்டங்களைப் பார்த்து கேலிப் படுத்துவதாக உள்ளது. அவனுக்கு உதவியான, எல்லா வித நடவடிக்கைகளையும். ஏகாதிபத்தியவாதிகள் தடுத்துவிட்டனர்.

ஐ நா. சபையின் போலித்தனத்தை எதிர்த்து வெட்டவெளிச்சமாக்கி தார்மீக நேரடி உதவிகளை, விடுதலை வீரர்களுக்குச் செய்து, அவர்களுக்குப் போர்ப்பயிற்சி அளிக்கும் ஒரே நாடு கியூபா குடியரசு தான்.

உதவிகள், மற்ற சோசலிச நாடுகளிலிருந்தும் வருகிறது. மக்கள் சீனத்திலிருந்து வருவது குறிப்பிடத்தக்க விதத்தில் உள்ளது.

ஆப்பிரிக்காவிற்குள், டான்சானிய, கினியா, ஜாம்பியா, அரசுகள், இந்த இயக்கத்தின் ஆதரவாளர்கள். மாலாவி, லேசாதோ அரசுகள் — ஆப்பிரிக்காவின் "அமெரிக்க மாமாக்கள்." ஏகாதிபத்தியத்தின் கூட்டாளியாக



போராட்டத்தை நசுக்க முயல்கிறது.

ஆப்பிரிக்க விடுதலை வீரனுக்கு இந்த ஆதிக்க வெறியர்கள், அமைதியாக தாமாக தங்கள் தாயகத்தை விட்டு, வெளியேறுவார்கள் என்ற மயக்கம் இல்லை. உலகசக்திகளும் அவனிடம் இரக்கம் கொண்டு, அவனைவிடுவிக்கும் என்ற நம்பிக்கையும் இல்லை. தீராத சுதந்திர தாகமும், சோர்வில்லாத போராட்டமும்தான், அவனுக்கு சுதந்திர உரிமையை பெற்றுத்தரும் என்பதை உணர்ந்து கொண்டான். இன்று கொடூரமான, நாசகார ஆயுதங்கள் அவனை அழிக்கக் காத்திருக்கிறது. இன்று உலகத்தின் மிகவலுவான அரசு அவனை எதிர்த்து நிற்கிறது. இருந்தும், அழிக்க முடியாததாகத் தோன்றும், ஏகாதிபத்தியம் வெற்றுக்காகிதப்புலி' என்ற உணர்வின் பலத்தில், அவன் துணிந்து போகிறான். சுதந்திரத்திற்கும், அடக்குமுறைக்கும் எதிராக நடக்கும் போராட்டத்தில்; மக்களுக்கும்' ஏகாதிபத்யத்திற்கும் இடையே நடக்கும் போராட்டத்தில், வாழ்வுக்கும் சாவுக்கும் இடையே நடக்கும் போராட்டத்தில், வெறும் யந்திரங்கள் அல்ல மனிதன்தான் வெற்றி பெறுவான், என்ற ஞானத்தோடு அவனை சகல, யாகத்திற்கும் தன்னை உட்படுத்திக் கொள்கிறான்.

## இன்றையமுரண்பாடுகளின் மையம்

கடைசியாக, நாம் தொடுக்கும் கேள்வி. மார்க்சீயவாதிகள் இந்தப் போராட்டத்தின் பால், என்ன மனப்பான்மை கொள்ளவேண்டும்? மார்க்ஸ் அவர்களே, ஐர்ஷ், போலந்து, தேசிய இயக்கங்களை ஆதரித்தார்.

"யார், தேசிய அடிமைத்தனத், ஏற்றத்தாழ்வுகளை, எதிர்க்கவில்லையோ, அவர்கள், ஜனநாயகவாதிகள் கூடஇல்லை" என லெனின் கூறினர். ஜாரின் ரஷ்யாவில், அடக்கப்பட்ட சிறுபான்மையினருக்கு, ஆதரவாக அவர் ரஷ்ய இன வெறியை எதிர்த்துப் போராடினர், அவர் குறிப்பிட்டபடி, "ஏகாதிபத்தியத்தில், தனிப்பட்ட தேசிய இனங்களின் உரிமையைவிட, ஏகாதியத்தியத்தால், அடிமையாக்கப்பட்ட, வெகுஜனங்களின் உரிமைதான், முதன்மையானது" லெனினுக்கு, பாட்டாளி வர்க்க சர்வதேசியம் என்பது, அடிமைநாட்டு மக்களின் போராட்டத்திற்கு சகல உதவியும் செய்யாத நிலையில் ஒன்றுமில்லை என்பதுதான்.

"ஆசியாவின் எல்லாப்பகுதிகளிலும், பிரம்மாண்டமான, ஜனநாயக இயக்கம் வளருகிறது. இளம் ஆசியா, கோடிக்கணக்கான அதன் உழைக்கும் மக்கள் நாகரீக நாடுகளின், பாட்டாளி வர்க்கத்தில் நம்பிக்கையான துணையைக்கொண்டுள்ளனர். ஐரோப்பிய, ஆசியமக்களின் விடுதலையைப் பெறபோகும், பாட்டாளிவர்க்க வெற்றியை, எந்த பலமும் தடுத்துவிட முடியாது"

லெனினின் இந்த வாசகத்தில் ஆப்பிரிக்கா, லதீன் அமெரிக்கா, என்ற இரண்டு வார்த்தைகள்தான் சேர்க்கப்பட வேண்டும்.

இன்று, ஏகாதிபத்தியத்திற்கும், அடக்கப்பட்ட நாடுகளுக்கும், உள்ள முரண்பாடுகள்தான், இன்றைய நிலையில், முரண்பாடுகளின் மையமாகியிருக்கிறது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. இதே முரண்பாடுதான் வலியுறுத்தப்பட்டு, கடுமையாகி இருக்கிறது.

இதற்கு வீர வியட்னமிய விடுதலைப் போராட்டத்தைவிட உணர்ச்சிகரமான சாட்சி தேவையா? வியட்நாமிய மக்கள் ஏகாதிபத்தியத்தியத்திற்கு, பலமான அடிகளைக் கொடுத்து வருகிறார்கள்.

ஒவ்வொரு உணர்விலும், வியட்னாம் என்பது அமெரிக்காவிற்குப் பயங்கரமான அனுபவத்தைக் கொடுக்கிறது.

அழிக்க முடியாததாகத் தோன்றும் அந்த ராட்சசன், இப்போது தள்ளாடுகிறான்; தளர்ச்சி அடைகிறான்; நிலைகுலைகிறான் — ஒவ்வொரு நாளும்.

ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்கா, இப்போது உலக முரண்பாடுகளின் மையத்திற்கு ஆளாகிவிட்டிருக்கிறது.

உலக சோசலிச இயக்கத்தில் இதனுடைய முக்கியத்துவத்தை உணராமலிருப்பது, ஏகாதிபத்தியத்திற்கு வால் பிடிப்பதாகத்தான் அமையும்.

★

★

# எப்பொழுது மக்கள் புரட்சியை முறியடிக்க முடியாது?

— லெனின் —

பாட்டாளி வர்க்க அரசாங்கம் பணக்காரர்களுக்குக் கைகட்டிச் சேவகம் செய்யாமல் ஏழைகளுக்கு உதவுகிறது என்பதையும்—புரட்சி நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள இவ்வரசாங்கம் தயங்குவதில்லை என்பதையும் — புல்லுருவிகளிடம் தேவைக்கதிகமாயுள்ள உணவுப்பொருட்களை பறிமுதல் செய்து பசியால் வாடும் மக்களுக்கு அது பகிர்ந்தளிக்கிறது என்பதையும்! வீடற்றவர்களைப் பணக்காரர்களின் வீடுகளில் பலவந்தமாக அது குடி வைக்கிறது என்பதையும் பணக்காரர்களைப் பாலுக்குப் பணம் கொடுக்கும்படி கட்டாயப்படுத்துகிறது என்பதையும் — ஆனாலும் **எல்லா** ஏழைக் குடும்பங்களிலும் உள்ள குழந்தைகளுக்கும் போதுமான பால் வினியோகம் ஆகும் வரை, ஒரு சொட்டுப் பாலும் பணக்காரர்களுக்குக் கொடுப்பதில்லை என்பதையும் நிலம் உழைப்பவர்களுக்கு மாற்றப்படுகிறது என்பதையும் தொழிற்சாலைகளும வங்கிகளும் தொழிலாளர் கட்டுபபாட்டில் வைக்கப் படுகின்றன என்பதையும் — தங்கள் செல்வங்களை மறைத்து வைக்கும் கோடீஸ்வரர்களுக்கு உடனடியாக கடும் தண்டனை அளிக்கிறது என்பதையும — பத்திரிக்கை வாயிலாக அல்லாமல் — கண்கூடாக ஒவ்வொரு தேர்ச்சியற்ற தொழிலாளியும், ஒவ்வொரு வேலையற்றவனும், சமையற்காரியும சீரழிந்த விவசாயியும, எப்பொழுது பார்த்தறிகின்றனரோ அப்போது—ஏழைகள் கண்டுணருகின்றனரோ அப்போது முதலாளிகள், அல்லது குலாக்குகளின் எந்தச் சக்திகளும், கோடி கோடியாய் பணத்தைப்போட்டுப் புரட்டிக்கொண்டிருக்கும் உலக மூலதனத்தின் எந்த சக்திகளும மககள் புரட்சியைத் தோற்கடித்து அழித்து விட முடியாது. இதற்கு மாறாக, உலகமெங்கும் **மக்கள் புரட்சி** தான் வெற்றி கொள்ளும !

*(லெனின் எழுதிய "போல்ஷ்விக்குகள் நீடித்து அரசாள முடியுமா? என்ற நூலில்.)*

★

# இந்திரா காங்கிரசும் தி. மு. க. தலைவர்களும்

பல ரகமான சோஷலிசத்தைப் தினம்தோறும் கேள்வியுறுகிறோம்; சோஷலிசத்தின் பரம விரோதிகள் சோஷலிசத்தின் கர்த்தாக்களைப் போல் இப்போது, பேசுகிறார்கள் டாட்டா, பிர்லா போன்ற பெரு முதலாளிகளில் இருந்து, பழைய கோட்டைப் பட்டக்காரர் வரையிலுள்ள நிலப்பிரபுக்களும், காங்கிரஸ், தி.மு.க., போன்ற கட்சிகளும் இந்திரா காந்தி, சவான், ஜகஜீவன்ராமிலிருந்து, கருணாநிதி எம். ஜி. ஆர். வரையில், அனைவரும் சோஷலிசம் பேசுகின்றனர்.

நடந்து முடிந்த பொதுத் தேர்தலில் இந்திரா காந்தியின், சோஷலிசப் பிரச்சாரம், மக்களை ஏமாற்றி ஓட்டு வாங்குவதில் முக்கிய பங்கு வகித்துள்ளது, சுரண்டும் வர்க்கங்களின் அப்பட்டமான பிற்போக்கு பிரதிநிதிகளை மக்கள் இத்தேர்தலில் தோல்வியுறச் செய்தது நல்ல அம்சம். அதே சமயத்தில், போலி சோஷலிசம் பேசுகின்ற, அதே சுரண்டும் வர்க்கங்களின் பிரதிநிதிகள் முற்போக்கு வாதிகள் என்ற வேடத்தில் வந்தவர்களை ஏமாந்து தேர்ந்து எடுத்துள்ளது முற்றிலும் தவறானதுமாகும். அதனால் இத்தேர்தலில் மக்களின் முற்போக்குக் கொள்கைகட்கு வெற்றி ஏற்படாமல் போய் விட்டது.

ஜனநாயக சோஷலிசம் என்றும், முற்போக்குக் கொள்கை என்றும் பேசி, ஏழை மக்களின் பாதுகாவலர்கள் எனறு நடித்து வந்த பி. சோ. கட்சி, வலது சாரி இந்திரா கம்யூனிஸ்ட் கட்சி இன்னும் இது போன்ற சிறிய கட்சிகள், இத்தேர்தலில் இந்திரா காந்தியின் போலி சோஷலிசப் பிரச்சார வெள்ளத்தில், குப்பை கூளங்களைப் போல் அடித்துச் செல்லப்பட்டன. அனைவரின் சோஷலிச முகமூடி கிழிக்கப்பட்டுள்ளது. தி மு. க. கட்சி, இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, இந்திரா காந்தியின் சோஷலிசத்திற்குக் "கட்டியம்" கூறி வரவேற்று தமிழகத்தில் இந்திரா காங்கிரசின் பாதுகாவலனுகச் செயல்பட்டுத் தன் வெற்றியைத் தேடிக்கொண்டுள்ளது.

1967-தேர்தலில் காங்கிரஸ் ஆட்சிக்கு மக்கள் கடுமையான அடி கொடுத்துத் தனிமைப் படுத்தினர்கள். முதலாளி வர்க்கமும், மற்ற



---

## கே. ரமணி

---

சுரண்டும் வர்க்கங்களும் கலக்கமடைந்தனர். ஆயினும் அவர்கள் சும்மா இருக்கவில்லை — மக்களை ஏமாற்ற, இழந்த அதிகார பலத்தைத் திருப்பக் கைப்பற்ற, இந்திரா காந்தியின் போலிச்சோஷலிசப்பிரச்சாரத்தைத் திறமையாகப் பயன்படுத்தியுள்ளார்கள் அதன் மூலம் தற்காலிகமாக மக்களின் வெற்றி நடையைத் தடுத்து நிறுத்தி காங்கிரஸ் கட்சியை திரும்பவும் அதிகப் பலத்தோடு அதிகாரத்தில் அமர்த்தியுள்ளது. இந்நிலைமையில் இப்போலி சோஷலிசப் பிரசாரத்தைத் தோலுரித்து அம்பலமாக்கி மக்கள் மென்மேலும் ஏமாற்றப் படாமல் தடுப்பது சோஷலிசத்திற்காகப் போராடுகின்ற அனைவரது கடமையுமாகும். உழைப்பாளி மக்கள் இதில் உஷாராக நின்று போராடுவது மிகமிக அவசியம்.

### சோஷலிசம் எத்தனை ரகம்?

சோஷலிசத்தில் பல ரகம் கிடையாது. விஞ்ஞான சோஷலிசம் ஒன்றே ஒன்றுதானுள்ளது. கம்யூனிஸ தத்துவத்தை உலகுக்களித்த உலக கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவர்களான காரல் மார்க்ஸும், ஏங்கல்ஸும் வகுத்துத் தந்துள்ள விஞ்ஞான சோஷலிசம்தான் அது. சோஷலிசத்தின் அடிப்படை என்ன? சமூகத்திலுள்ள உற்பத்திக் கருவிகள் அனைத்தும். உற்பத்தி செய்யப்படும் பொருட்களின் விநியோகமும் சமூக உடைமையாக்கப்பட்டிருக்கும். அதன் மூலம் முதலாளித்துவ அமைப்பும், சுரண்டல் முறையும் பூரணமாக ஒழிக்கப்பட்டிருக்கும். இந்த அடிப்படையில்லால் சோஷலிசம் என்ற பேச்சுக்கே இடமில்லை. தொழிலாளி வர்க்கத்தின் கையில் அதிகாரம் வாராமல் இந்த அடிப்படை மாற்றத்தைச் செய்ய முடியாது. அதிகாரத்தைக் கைப்பற்ற தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் புரட்சி நடைபெறுவதொன்றே வழி. இப்படிப்பட்ட பார்வையும் கொள்கையும், தத்துவ நம்பிக்கையும் இல்லாத பேர்வழிகள் பேசுகின்ற சோஷலிசம் மக்களை ஏமாற்றுவதாகப் போடும் வேஷமாகும் அவர்கள் மாபெரும் அரசியல் வாதிகள், தந்திரசாலிகள், கலைஞர்கள், நடிகர்கள், நாவலர்கள், சிந்தனைச் சிற்பிகள் யாராலுைம் சரி; போலி சோஷலிசம் பேசுகின்றவர்களே! இப்படிப்பட்ட வர்களெல்லாம் சோஷலிசம் பேசுவது ஓர் அற்புதமல்ல. காரல் மார்க்ஸும், ஏங்கல்ஸும் 1848-ல் எழுதி வெளியிட்ட உலகப் பிரசித்தி பெற்ற "கம்யூனிஸ்ட்" அறிக்கையில் சுரண்டும் வர்க்கங்களைச் சேர்ந்தவர்கள், எத்தனை ரகமான சோஷலிசத்தைப் பேசுவார்களென்று சரித்திர ரீதியாக ஆராய்ந்து கூறியுள்ளார்கள்.

நிலப்பிரபுத்துவ சோஷலிசம், பூர்ஷ்வா சோஷலிசம், குட்டி பூர்ஷ்வா சோஷலிசம், "உண்மை" சோஷலிசம் என்ற பெயரால் பேசப்படும்போலி சோஷலிசம், போன்ற பலரக சோஷலிசத்தைப் பற்றி சுரண்டும் வர்க்கங்களும், அவர்களது ஏஜண்டுகளையும் பேசிவந்ததை எடுத்துக்காட்டி விமர்சித்து அம்பலமாக்கி அவற்றின் முகமூடிகளைக் கிழித்தெறிந்து உள்ளார்கள்.

சுமார் 125 ஆண்டுகட்கு முன்னமேயே, உலகில பல நாடுகளில் இவ்விதப் போலி சோஷலிசப் பிரசாரம் செய்யப்பட்டதென்றால், முதலாளித்துவ ஆட்சி

யைக் கட்டி வளர்க்கப்படும் இந்தியாவின் சுரண்டும் வர்க்கங்களும், அதன் ஏஜெண்டுகளும். உழைப்பாளி மக்களை ஏமாற்றி அவர்களின் முன்னேற்றத்தைத் தடுக்க, போலி சோஷலிசப் பிரச்சாரம் செய்வதில் ஆச்சரியம் என்ன உளது?

## இந்திரா காந்தியின் சோஷலிசம்

29—7—69-ம் நாள் புதுடில்லியில் நடைபெற்ற விமான ஊழியர்களது கூட்டத்தில் இந்திரா காந்தி பேசுகையில், பாங்கு தேச உடைமை ஆக்கப்பட்டதை கண்டு சிலர் எதிர்ப்பதைக் குறிப்பிட்டு, "..ஜனநாயகமும், சோஷலிசமும் வளருகின்ற ஒரு யுகம் இனி இந்த நாட்டில் ஆரம்பமாகும்..., நாம் சோஷலிசத்தை நோக்கி ஓர் அடி முன் வைத்துள்ளோம்...". எனக் கூறினார். அதே அம்மையார், டில்லி ராஜ்ய காங்கிரஸ் கமிட்டி 4—8—69ம் நாள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஓர் அணி வகுப்பில் பேசுகையில் "...காங்கிரஸ் கட்சியிலுள்ள சில நபர்கள், பாங்குகள் தேச உடைமையாக்கப்பட்டதற்காக என்னை எதிர்த்துக் கூச்சலிடுகிறார்கள். நான் கம்யூனிஸத்தை வளர்க்க முற்படுவதாகக் கூறுகின்றார்கள். நான் ஒரு கம்யூனிஸ்ட் ஆக எண்ணியிருந்தால் அப்படிச் செய்வதிலிருந்து என்னை எதுவும் தடுத்திருக்க முடியாது. நான் பூரணமாகக் காங்கிரஸிற்காகவும், அதன் திட்டங்களுக்காகவும் நிற்பவள்; எப்போதுமே காங்கிரஸில் இருந்து கொண்டிருப்பவள். காங்கிரஸின் திட்டங்கள், கொள்கைகளை அமுலாக்குவதனால் நான் கம்யூனிஸ்ட் ஆகிவிட்டேன் எனக் கூறுவது நியாயமல்ல..." என்று கூறினார்.

ஏகபோக பெரு முதலாளிகள், நிலப்பிரபுக்கள், போன்ற சுரண்டும் வர்க்கங்களின் கட்சியான காங்கிரஸின் திட்டங்களை நிறைவேற்றி வருகின்ற ஒரு முழுமையான காங்கிரஸ் வாதிதான் இந்திரா காந்தி. அவர் கம்யூனிஸ்ட்டும் அல்ல! சோஷலிஸ்ட்டும் அல்ல! அவரே அதனைக் கூறி விட்டு. ஜனநாயகமும் சோஷலிசமும் வளருகின்ற ஓர் யுகம் இங்கு ஆரம்பமாகி விட்டது என்றும், சோஷலிசத்தை நோக்கி ஒரு அடி முன்வைத்துள்ளோம் என்றும் கூறுகிறார் என்றால், அதன் பொருள் என்ன? காங்கிரசின் திட்டங்களையும். கொள்கைகளையும், நிறைவேற்றுவதைத்தான் அவர் சோஷலிசம் என்று கூறுகின்றார்! இதிலிருந்து அவர் பேசி வருகின்ற சோஷலிசம் வெறும் போலி வேஷம் என்பது புலனாகிறதல்லவா?!

மேலும் பார்ப்போம். 7-8-69-ம் நாள் பாங்கு தேசியமயமாக்குவது பற்றி, ராஜ்ய சபையில் நடந்த விவாதத்தில் தலையிட்டு இந்திரா காந்தி பேசுகையில், "......பாங்கு தேசியமயமாக்கப்பட்டது, ஒரு புரட்சிகரமான நடவடிக்கை அல்ல; ஆனால் அது ஒரு குறிப்பிட்ட திசையில் ஒரு சிறிய — ஆனால் உறுதியான நடவடிக்கையாகும்......நாட்டில் பல மாறுதல்கள் செய்யப்பட வேண்டியுள்ளது. ஏற்றத் தாழ்வுகளின் சித்திரத்தையே மொத்தத்தில் மாற்ற வேண்டும். அந்த நடவடிக்கைகளுக்கும், சோஷலிசத்திற்கும் எந்த சம்பந்தமும் உள்ளதென்று நான் எண்ணவில்லை". என்று கூறினார். அவைகளைத்தான் தி. மு. க தலைவர்களும். வலது சாரி இந்திரா கம்யூனிஸ்ட்களும், பி. சோ, கட்சிக்காரர்களும், இந்திரா காந்தியின் இணையற்ற சோஷலிசம் என்று வர்ணம் பூசிக் காட்டி [illegible] பொய்ப்பிரச்சாரம் செய்கின்றனர்.

## முதலாளிகளுக்கு இந்திராவின் ஆறுதல்!

இதுமட்டுமா? தேர்தலின் நன் கொள்கைக்கு, மக்கள் அமோக ஆதரவு அளித்துள்ளதாய்க் கூறிப் பூரிப்படைந்து வருகின்ற இந்திரா காந்தி, தன் சோஷலிசத்தின் நடைமுறை பற்றித் தேர்தலுக்குப் பின் பேசி உள்ளதையும் பார்ப்போம். 10—4—71-ம் நாள் டில்லியில் இந்திய தொழில் வர்த்தக சபையின் சம்மேளத்தினுடைய 44-வது மாநாட்டை ஆரம்பித்து வைத்து பேசும்போது, முதலாளிகளைப் பார்த்து இந்திரா காந்தி கூறியதாவது "அரசு தலையீடு பற்றி உங்களது பயத்தை நீங்கள் அடிக்கடி வெளிப்படுத்தி வருகிற போதிலும் நம் நாட்டின் பொருளாதாரத்தில் 85 சதவீதம் தனியார் துறையின் ஆதிக்கத்தில்தான் உள்ளது நமது பொருளாதாரத்தை உருவகப்படுத்துகின்ற இறுதி முக்கியத்வம் வாய்ந்த முடிவுகள் பலவற்றை தனியார் துறையில்தான் எடுக்கப்படுகின்றன. இம்முடிவுகள் தவறாகப் போனால் பொருளாதார அமைப்புதான் அதன் விளைவுகளை தாங்க வேண்டிவரும். அதனால்தான் சர்க்காருக்கும், தனியார் துறைத் தொழிலுக்கும் இடையில் ஒரு சரியான உடன்பாடு காண ஆவலாக உள்ளோம், ...". என்று கூறியுள்ளார் அதாவது நாட்டின் பொருளாதாரத்தில் 85 சதவீதம் முதலாளி வர்க்கத்தினிடம உள்ளது பொருளாதாரத்தின் அமைப்பை நிர்ணயிக்க முக்கியமான முடிவுகள் முதலாளி மார்களால்தான் செய்யப் படுகின்றது. இதுதான் இந்திரா காந்தி சோஷலிசத்தின் உண்மை சொரூபம்! அப்பட்டமான போலி சோஷலிசப் பிரச்சாரம் என்பதற்கு இதற்குமேல் என்ன உதாரணம் தேவை? நாட்டின் பொருளாதார அமைப்பு முதலாளி வர்க்கத்தின் கையில்தான் இருக்கிறது. அவர்களைத் திருப்திப்படுத்தி உடன்பாடு காண்பதே இந்திரா சோஷலிசத்தின் நடைமுறை!

## அடகுவைக்கும் பாதை!

இதற்கு ஒத்த முறையில்தான் இந்திரா அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையும், உறவும் உள்ளது. அந்நிய ஏகாதிபத்திய முதலாளிகளை நம் நாட்டுத் தொழிலில் பங்காளிகளாக ஆக்கி, நாட்டின் பொருளாதாரத்தை அவர்களிடம், அடகு வைக்கும் பாதையில் வேகமாக முன்னேறியுள்ளது. 1957-லிருந்து 1968 வரை, 2358 அந்நிய தொழில் கூட்டு ஒப்பந்தங்களுக்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ளது. அதில், 1200-ல் அந்நிய மூலதனம் இங்கு முதலீடு செய்யப் படுகின்றது. எல்லாவற்றிற்கும் மேலாக அந்நிய ஏகாதிபத்திய வாதிகளுக்கு நாம் ரூபாய் 7000 கோடி கடன்பட்டுள்ளோம். அதற்கு வட்டியும் அசலுமாக வருடந்தோறும் ரூ. 450 கோடிவரை செலுத்தியாக வேண்டும் நமது மக்களின் உழைப்பை, செல்வத்தை அந்நிய ஏகாதிபத்தியவாதிகள் தங்கு தடையின்றி சுரண்டிச் செல்ல பூரணவசதியளிக்கப்பட்டுள்ளது. இதுவும் இந்திரா காந்தியின் புதுரக சோஷலிசம் தான்! சோஷலிசத்தைப் பற்றி அரிச்சுவடியாவது அறிந்துள்ள சுய புத்தியுள்ள யாராவது இதை சோஷலிச நடைமுறை என்று கூறுவார்களா?

## இந்திரா அரசுக்கு டாட்டாவின் புகழாரம்!

இந்திரா காந்தியின் இந்தப் போலி சோஷலிசத்தை டாட்டா பிர்லா போன்ற ஏகபோக பெரு முதலாளிக் கூட்டம் மகிழ்ச்சியாக வரவேற்றுள்ளது. உதாரணமாக 25—10—69ம் நாள் பம்பாயில் இந்திய வியாபாரிகள் சபை பம்பாய் வர்த்தக, தொழில் சபை

மகாராஷ்டிர வர்த்தக சபை, அகில இந்திய உற்பத்தியாளர்கள் ஸ்தாபனம் ஆகிய முதலாளி சங்கங்கள் முதலியவை கூட்டமாக ஏற்பாடு செய்திருந்த முதலாளிகள் கூட்டத்தில் இந்திரா காந்தி உரை ஆற்றிய பின் என். எச். டாட்டா பேசியதாவது:" ......புதிய பொருளாதாரக்கொள்கையை அமுல் நடத்த வர்த்தக சமூகத்தினர் அரசாங்கத்துடன் பூரணமாக ஒத்துழைப்பார்கள். தாங்கள் ஒரு மிக நல்ல காரியத்தைச் செய்துள்ளீர்கள், நாட்டுக்கு உங்களது தலைமையை நாங்கள் ஏற்றுக் கொள்ளுகின்றோம்......"

இந்திரா சோஷலிசம் முதலாளி வர்க்க சோஷலிசம் என்பதற்கு இதைக் காட்டிலும் சிறந்த நற்சாட்சி தேவையா? இப்போலிச்சரக்கை மக்கள் மத்தியில் விற்பனை செய்து ஏமாற்றுவதற்கு காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் போஷித்து வளர்ப்பதும் இந்த முதலாளிகள்தான். உதாரணமாக— ஏகபோக முதலாளி பிர்லாவின் கம்பனிகள் மட்டும் 1963 முதல் 1968 வரை காங்கிரஸ் கட்சிக்குக் கொடுத்துள்ள நிதி ரூ. 38,25,651 ஆகும்! இம் முதலாளிக் கும்பலின் பணமே பல கோடிக்கணக்கில் இத்தேர்தலிலும் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற வாரி இறைக்கப் பட்டது. தமிழகத்தில் இந்திரா காங்கிரசுடன் சேர்ந்து, "முற்போக்குக் கூட்டணி" வகுத்து சட்ட சபையைக் கலைத்து மறு தேர்தல் நடத்தியவர்கள், இந்த டாட்டா, பிர்லா போலி சோஷலிசத்தை தமிழக மக்களிடம் வியாபாரம் செய்து ஏமாற்றியுள்ளார்கள் என்பதை மறுக்க முடியுமா?

## தி. மு. க. வின் சோஷலிசம்

இந்திரா காந்தியின் சோஷலிசத்தைத் தாங்களும் ஏற்றுக் கொண்டு, பிரச்சாரம் செய்தார்கள். கடந்த நாலாண்டு ஆட்சியில் தொழிலாளர்களின் போராட்டங்களை நசுக்க போலீசை ஏவி விட்டும் துப்பாக்கிச் சூடுகள் நடத்தியும், முதலாளிகளுக்கும், நிலப் பிரபுக்களும், பாதுகாப்புக் கொடுத்துள்ளார்கள். அதற்குப் பிரதி பலனாகத் தேர்தல் நன்கொடைகளும், அன்பளிப்புகளும், பொன்னாடைகளும் மலர்க் கிரீடங்களும் பெரும் செல்வந்தர்களால் வாரி வழங்கப்படுவதையும் நேரில் பார்த்துக் கொண்டுள்ளோம்— பொதுவாக சோஷலிசம் தனது லட்சியம் என்று பேசி வந்தபோதிலும், காங்கிரஸ் கட்சியின் சோசலிசத்தை முன்னாளில் கேலி செய்து வந்த போதிலும்— தான் கூறும் சோஷலிசம் என்னவென்றோ, அதை அடைவதற்கான மார்க்கம் என்ன என்பதையோ வரையறுத்துக் கூறியது இடையாது. இந்த நிலைமையில் இந்திரா காந்தியின் சோசலிச ஜோதியில் தற்போது அக்கட்சி கலந்து விட்டது.

## பட்டம் ஒன்று; நடைமுறை வேறு !

அக்கட்சியின் தலைவர்கள் கூறி வருவதை ஆராய்ந்தால் உண்மை தெரியும். உதாரணமாக, தேர்தல் பிரச்சார சூறாவளி சுற்றுப் பயணத்தின் போது, "புரட்சி நடிகர்" என பட்டம் சூட்டிக்கொண்டுள்ள எம். ஜி. ராமச்சந்திரன், 28-2-71ம் நாள் அதிகாலை 5 மணி அளவில் திருச்சி நகரில், வன்னிமரத்தடியில் நடைபெற்ற கூட்டத்தில் பேசுகையில், "...........எங்கள்கட்சி, ஏழை பணக்காரர் வேறுபாட்டால் ஏற்படும் புரட்சியைத் தடுக்கும். மற்றவர்களைப் பாதிக்காமல் சமுதாய சீர்திருத்தம் செய்வோம்" என்று கூறினார். இதன் பொருள் என்ன? தொழிலாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் வர்க்கப்போராட்டத்திற்கும், இறுதியாக அதிகாரத்தைக் கைப்பற்ற நடத்தும் புரட்சிக்கும் இவரது கட்சி எதிரி என்பதுதானே? அதைத் தடுக்கவும் செய்யும்! முதலாளிமார்களின், சுரண்டுதல் கொள்ளை பாதிக்கப்படாமல் சமுதாயச்சீர்திருத்தம் செய்யும்! கடைந்தெடுத்த, பிற்போக்கு எதிர் புரட்சிக் கொள்கைகள்தானே இவை? இவரைத்தான், "புரட்சி நடிகர்" எனப் பட்டம்சூட்டி அழைக்கிறார்கள்! இவரது நடிப்பைப்பற்றி நாம் இங்கு விவாதிக்கவில்லை. அரசியல், தத்துவார்த்த விஷயங்களில் அப்பட்டமான "பிற்போக்கு" வாதி என்றுதான் கூறுகிறோம். ஓரடிதூரம் கூடத் தாண்ட முடியாதவருக்கு, "தாண்டவராயப்பிள்ளை" என்று பெயரிட்டதுபோல் உள்ளது இவருக்குச் சூட்டப்பட்டுள்ள பட்டம்!

## மந்திரி மாதவன் வருந்துவதேன்?

மற்றோர் தலைவர், மந்திரி மாதவன் அவர்கள் கூறுவது என்ன? 1970 ம் ஆண்டு, ஜூலை மாதம் அம்பாசமுத்திரத்தில் நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில், "...பம்பாய் அகமதாபாத் காங்கிரஸ் மாநாடுகளில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் புதிது எதுவும் இல்லை. இரு காங்கிரஸ்களும் போட்டா போட்டி போடுவதைக் கண்டு நான் வருந்துகின்றேன் இரு காங்கிரஸ்களும் தமது போட்டா போட்டியில் நாட்டைக் கம்யூனிஸத்தில் தள்ளி விடப் போகின்றனவோ என்றுதான் அச்சப்படுகிறேன். எங்களுக்கு கம்யூனிஸத்தில் நம்பிக்கையில்லை; ஜனநாயகத்தில்தான் நம்பிக்கை......" என்று கூறினார்.

அதாவது, காங்கிரஸ் பிளவு பட்டதைக் கண்டு வருந்துகிறார்! ஏன்? இரு காங்கிரஸ்களின் போட்டியில் கம்யூனிசம் எங்கே வந்துவிடுமோ என்ற அச்சம்! கம்யூனிஸத்தில் அவருக்கு நம்பிக்கையில்லை! இவர்கள்தான் பொதுவுடைமைப் பூங்காவை அமைக்க நிற்பவர்களா? கம்யூனிஸ, சோஷலிஸக் கொள்கைகளின் பரம விரோதிகளான முதலாளி வர்க்க ஆட்சியை பாதுகாக்கவே நிற்கிறார்கள் என்பதைச் சந்தேகத்திற்கு இடமின்றிக் கூறி விட்டார்கள்! சிண்டிகேட் காங்கிரஸ் கூறுவதும் இதுதானே?

மாதவன் மேலும்கூறுகிறார், "......எதிர் கட்சியாக உள்ள காங்கிரஸ் கட்சி குறை கூறுவது போல், தோழமை எதிர் கட்சிகளும் எங்களைக் குறை கூறுகின்றன. ஆட்சியில் எதைச் செய்ய முடியும், என்ன செய்ய வேண்டும்? என்று கோடிட்டுக் காண்பித்தால் தோழமையின் பண்பு புரியும். இதை விடுத்து நூற்றாண்டுகளுக்கு முன்னர், எங்கோ நடந்த புரட்சியைக் காட்டி அதை இன்று இங்கு செய் என்று கூறினால் கேட்க முடியுமா? நமக்கு என்று ஒரு ஜனநாயக அமைப்பு இருக்கிறது. அந்த அரசியல் அமைப்பின் வட்டத்திற்கு மேல் நாம் எதுவும் செய்ய முடியாது............" என்று 21—2—69 ம் நாள் ஸ்ரீவில்லிபுத்தூர் வடக்கு ரத வீதியில் தி. மு. க. கூட்டத்தில் பேசுகையில் கூறினார்.

## குண்டுச்சட்டிக்குள் குதிரை ஓட்டுவது போல !

எங்கோ நடந்த புரட்சியைக் காட்டி அதையே இங்கு நடத்துங்கள் என்று யாரும் கூறியதும் இல்லை; யாரும் கூறவும் மாட்டார்கள். இவரது கற்பனை அது! உலகில் நடந்துள்ள மகத்தான பல புரட்சிகளிலிருந்து இவர் கற்றுக்கொள்ள ஒன்றும இல்லை! உண்மை அதுவல்ல. நம் நாட்டில் இன்றுள்ள சுரண்டும் வர்க்கங்களைப் பாதுகாக்கும் அரசி

யல் அமைப்பின் வட்டத்திற்கு மேல் இவர் போகத் தயாரில்லை! அந்த குண்டுச் சட்டிக்குள் நின்றுகொண்டே குதிரை ஓட்டி, அதுதான் சோஷலிஸம் என்று மக்களை ஏமாற்றுகிறவர் என்பதே உண்மை! அதனால்தான் "இன்றுள்ள அரசியல் சட்டத்தை அடியோடு மாற்றாவிடில் ஏழைமக்களுக்கோ, உழைப்பாளி மக்களுக்கோ எதுவும் செய்ய முடியாது" என்று மார்க்ஸிஸ்ட் தலைவர்களான தோழர்கள், ஈ. எம். எஸ் அவர்களும், ஏ. கே. ஜி. அவர்களும் தெளிவு படுத்தி வெளியிட்ட அறிக்கையைக் கண்டு முதலமைச்சர் கருணாநிதி அவர்களுக்கும் பொறுக்க முடியவில்லை!

கருணாநிதி அவர்கள் கூறியது என்ன? "......வர்க்கப் போராட்டமாயினும் அல்லது வேறு போராட்டமாயினும்: அவை அறவழியில் இருந்து மாறுபட்டுச் செல்வதை அனுமதிப்பதோ அல்லது அத்தகைய வன்முறைப் போராட்டத்திற்கு அரசு ஓர் கருவியாக அமைவதோ, கம்யூனிஸ்ட் கட்சியின் நோக்கமாக இருக்காது என இன்னமும் நான் நம்புகின்றேன்......... வன்முறைக்கு அரசு துணை நின்றால், நாடு காடாகி விடும்......அரசியல் அமைப்புச் சட்டத்தை உடைப்பது அவர்கள் கொள்கையாக இருக்கலாம்; அதை திருத்த வேண்டும் என்பதே எங்கள் கொள்கை......என்றார். (மதுரை—தினமணி 9—7—69.) அதாவது அவர் கூறும் அறவழியில் போராட்டம் நடக்காவிடில், அப்போராட்டங்கள் அனைத்தும் பலாத்காரம், அனுமதிக்க முடியாது, என்கிறார். இவருடைய, "அறவழி" என்பது என்ன? நெய்வேலியில், திருவொற்றியூரில், பூந்தாழங்குடியில், தென்காசியில்—நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராடிய உழைப்பாளி மக்களைப் போலீசை ஏவி வேட்டுச் சுட்டுக் கொல்வதுதான் இது அறவழியா? இது, சுரண்டல் ஆட்சியைப் பாதுகாக்கும் வழிதானே? இவருக்கு, இதுபோன்ற "அறவழி" தான் முக்கியமேயல்லாது, பாட்டாளி மக்களின் உரிமைப் போராட்டம் முக்கியமல்ல. வழியைக் கூறி, வாழ்க்கையை மறுக்கிறார். மார்க்ஸிஸ்ட் கட்சி, பாட்டாளிகளின் வாழ்வைப் பாதுகாக்கும் போராட்டங்களைத்தான் முதன்மையாகக் கருதுகின்றது. அதை அடக்கும் அரசின் வன்முறைகள்தான் நாடெங்கும் நடக்கிறது. முதலாளி வர்க்கம் தான் தொழிலாளி வர்க்கப் போராட்டங்களை "வன்முறையானவை" "தூண்டி விடப்பட்டவை" என்று ஓயாது கூறி வருகிறது. அதையே தான் இவரும் கூறுகிறார், "தொழிலாளி வர்க்கத்தின் வன்முறைக்கு அரசு துணை நிற்பதல்ல" என்று. ஆனால் உண்மை என்ன? அரசு தான், எப்போதும் வன்முறைகளையும், ஒடுக்கு முறைகளையும் போராடும் மக்களை அடக்கி ஒடுக்க ஏவி விடுகிறது. அதை மக்கள் எதிர்த்தால் வன்முறை என்று அரசு கூச்சலிடுகிறது.

இதைப் பாட்டாளி வர்க்கமோ, மார்க்சிஸ்ட் கட்சியோ விஞ்ஞான சோஷலிச வாதிகளோ ஏற்க மாட்டார்கள். மாதவனும், கருணாநிதியும், அடிப்படையில் சுரண்டும் வர்க்கங்களுடைய பாதுகாப்பரான இன்றைய அரசியல் சட்டத்தை அவர்களுக்காக நடத்தி வைக்கின்ற அமைச்சர்கள்தான் என்பது எள்ளளவும் சந்தேகப்பட இனிமேல் இடமில்லை. அவர்களுடைய சோஷலிசம் பூரணமான பூர்ஷ்வா போலி சோஷலிசமே தவிர, எள்ளளவு கூட விஞ்ஞான சோஷலிஸக் கருத்துக்களில்லை! அதனால் தான் அவர்களும் இதுவரையில் பேசி வந்த காங்கிரஸ் எதிர்ப்பு வேஷத்தைக் கலைத்து விட்டு, இந்திரா காங்கிரஸ் ஜோதியில் கலந்துள்ளார்கள். தேர்தலில் இந்திரா காந்தியும், காங்கிரஸ் கட்சியும், தி. மு. க, தலைவர்களும், மற்றும்முள்ள குட்டி பூர்ஷ்வா கட்சிகளும், முற்போக்கு, பிற்போக்கு என்று பொதுவாகப்பேசி, அதுதான் சோஷலிசம் என்று வர்ணித்து, மக்களைப் பகிரங்கமாக ஏமாற்றி ஓட்டு வாங்கிப் பதவியைப் பிடித்துள்ளார்கள். வெகு விரைவில் இது அம்பலமாகப் போகிறது. மக்களின் வளர்ந்து வரும் வாழ்க்கைப் போராட்ட நெருப்பில், இப்போலி சோஷலிஸ குப்பைகள் எரிந்து சாம்பலாகப் போகின்றன. ஆகவே போலி சோஷலிஸத்தை அம்பலமாக்கி விஞ்ஞான சோஷலிஸத்தை எடுத்துரைக்கும் கொள்கைப் போராட்டத்தைத் தீவிரப் படுத்துவது நமது உடனடிக் கடமையாகும்!

## எழுச்சி வெற்றிபெற...!

—காரல் மார்க்ஸ்

"முதலாவது, முடிவுவரை செல்வதற்கு திடசித்தம் இல்லாத நிலையில், எழுச்சி விஷயத்தோடு ஒருபோதும் விளையாடாதீர்கள். எழுச்சியானது, நிச்சயமற்ற பரிமாணங்களைக்கொண்ட சமன்பாடாகும். அந்தப் பரிமாணங்களின் மதிப்பு ஒவ்வொரு நாளும் மாறிக்கொண்டிருக்கக் கூடும். உங்களை எதிர்த்து நிற்கும் சக்திகளிடம் ஸ்தாபனம், கட்டுப்பாடு, வழக்கமாகச் செலுத்தும் செல்வாக்கு முதலிய சகல அனுகூலங்களும் இருக்கின்றன.

பகைவர்களுக்கு எதிராக மிகுந்த படைபலம் திரட்டாவிட்டால் உங்களுக்குத் தோல்வியும் சீரழிவும் நிச்சயமே!

இரண்டாவது, எழுச்சியைத் தொடங்கி விட்ட பிறகு மிகுந்த மனத்திண்மையுடன் செயல் புரிய வேண்டும்; மேலேறித் தாக்கியபடியே இருக்க வேண்டும். தற்காப்பில் இருந்து கொள்வது ஒவ்வொரு ஆயுதம் தாங்கிய எழுச்சிக்கும் சாவாகத் தான் முடியும். எதிரிகளுடன் பலப்பரீட்சை செய்யு முன்பே அது தோற்றுவிடும். எதிரிகளின் படைகள் சிதறுண்டு வருகையில், எதிர்பாராத விதத்தில் பகைவரைத் தாக்க வேண்டும். தினந்தோறும் புதிய புதிய வெற்றிகளை - எவ்வளவு சிறியவையாய் அவை இருந்தாலும் கவலையில்லை — தயாரித்துக்கொண்டிருப்பீராக.

பகைவர்கள் உங்களுக்கு எதிராகத் தங்களுடைய படைபலத்தைச் சேகரித்துத் திரட்டிக் கொள்வதற்கு முன்-அவர்களைப் பின் வாங்கும்படி செய்ய வேண்டும். புரட்சிக்கொள்கையில் இதுவரை நாமறிந்தவர்களில் தலைசிறந்த நிபுணரான தாந்தோன் கூறுவதாவது:

**"துணிச்சல்! துணிச்சல்!! மேலும் மேலும் மேலும் துணிச்சல்!!!"**

—("ஜெர்மனியில் புரட்சியும் எதிர்புரட்சியும் என்ற நூலில் ஜெர்மன்பதிப்பு-1907-பக்கம் 118)

# “நீதிபதிகளே! நீங்கள் கூறுவதை ஏற்க முடியாது!”



இ. எம். எஸ். நம்பூதிரிபாத்

**கோ**ர்ட்டை அவமதித்தாக கேரள உயர்நீதிமன்றம் எனக்கு அளித்த தண்டனையை எதிர்த்து சுப்ரீம் கோர்ட்டில் நடைபெற்ற வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பை “கேரள லா ஜர்னல்” பத்திரிகை (1970 ஆகஸ்ட் 24 ல்) வெளியிட்டுள்ளது. தண்டனையை ஊர்ஜிதம் செய்ததையும் அபராதத்தை ரூ. 1000 லிருந்து ரூ. 50 ஆகக் குறைத்ததையும் பற்றி நான் ஒன்றும் கூறவிரும்பவில்லை. மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனை பற்றி என்னுடைய “தவறை” “வெளிப்படுத்துவ” தாகக் கூறும் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பின் பகுதிக்கு விளக்கம் தரவே இந்தக் கட்டுரையை நான் எழுதுகிறேன்.

மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனைகளை கற்கவும் கிரகிக்கவும் 35 வருட காலம் நான் செலவழித்திருந்தும் மார்க்ஸ், ஏங்கெல்ஸ் நூல்களை எல்லாம் கற்றுகொண்டிருப்பதாக நான் கூறிக்கொள்ளவில்லை. மார்க்ஸ், ஏங்கெல்ஸ் நூல்கள் அனைத்தையும் படித்திருப்பதாகக் கூறிக்கொள்ளும் அடிப்படையில் நீதிபதிகள் என்னுடைய ‘தவறை’ ‘வெளிப்படுத்துவதாக’த் தெரிவதால் இதை நான் குறிப்பிடுகிறேன். ‘(மார்க்ஸ், ஏங்கெல்ஸ்) நூல்கள் அனைத்திலும் மக்கள் கோபத்துக்கு இலக்கானதாகக் கொண்டு நீதித்துறை நேரடியாகத் தாக்கப்படவில்லை’ என்று தீர்ப்பு கூறுகிறது. மார்க்ஸ், ஏங்கெல்ஸ் நூல்கள் அனைத்தையும் படித்திருப்பதாகக் கூறிக்கொள்ளுபவரின் துணிச்சலை நான் பாராட்டவே முடியும். ஆயினும், மார்க்சிசத்தைத் தோற்றுவித்தவர்களின் நூல்களில் கணிசமான பகுதி ஆங்கிலத்தில் வெளிவரவில்லை. ஆகவே சுப்ரீம் கோர்ட்டின் தலைமை நீதிபதியோ, அல்லது மற்ற நீதிபதிகளோ ஜெர்மன் மூலத்திலேயே எல்லா நூல்களையும் படித்தார்கள் என்று கூறிக்கொள்ளுகிறார்களா? எப்படியாயினும், 1844 ல் இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலை என்ற தலைப்பில் ஏங்கெல்ஸ் எழுதிய பிரசித்திபெற்ற நூலிலிருந்து கீழ்வரும் மேற்கோளை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்:

## நீதியில் பாரபட்சம்

“முறியடிக்கப்பட வேண்டிய எதிரியாகப் பாட்டாளி வர்க்கத்தைக் கருதுவதே எல்லா சட்டங்களிலும் அடிவேராக அமைந்துள்ளது. நீதிபதிகள் சட்டத்தை எவ்வாறு அமுல்படுத்துகிறார்கள் என்பதிலிருந்து இதைப் பார்க்க முடியும். மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த அமைதியை நிலைநாட்டும் பொறுப்பிலுள்ள நீதிபதிகளிடம்—குறிப்பாக இதைக்காண முடியும். பெரும்பாலும் இவர்களுடன்தான் பாட்டாளி வர்க்கத்தினர் எதிர்படுகின்றனர். தொழிலாளி வர்க்கத்தை அடக்கி வைப்பதற்கான கருவியாகவே சட்டத்தைக் கருதுவதற்கு இந்த நீதிபதிகள் தயங்குவதில்லை. மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த வசதியுள்ள நபர் ஒருவர் மாஜிஸ்திரேட் முன் அழைக்கப்படட்டும். அவர் கோர்ட்டில் தோன்றும் சிரமம் ஏற்பட்டதற்கு கோர்ட் இயல்பாகவே வருத்தம் தெரிவிக்கும். குற்றம் சாட்டப்பட்டவர் மீளுவதற்கான வழியைச் சரிப்படுத்த மாஜிஸ்திரேட் இயன்றதனைத்தையும் செய்வார். ஒரு பணக்காரர் மீது குற்றசாட்டு திட்டவட்டமாக நிரூபிக்கப்பட்டுவிட்டால், மாஜிஸ்திரேட் ஆழ்ந்த வருத்தத்துடன் அற்பமான அபராதம் மட்டுமே விதிப்பார். பணக்காரன் அலட்சியமாக பணத்தை மேஜையில் வீசிவிட்டு வெளியேறுகிறான். ஆனால் ஒரு ஏழைத் தொழிலாளி மாஜிஸ்திரேட் முன் தோன்றினால் கதையே வேறு. முந்தின இரவை மற்ற கைதிகளுடன் காவலில் அவன் கழிக்கவேண்டும். மாஜிஸ்திரேட் அவனைப் பார்த்து கூச்சலிடுகிறார். முதலிலேயே அவனைக் குற்றவாளி என்று கருதிக்கொள்ளுகிறார். “இம்மாதிரி சாக்குப்போக்கை இதற்கு முன்பு கேட்டிருக்கிறோம்” என்று கூறி அவன் கூறும் பதிலை வெறுப்புடன் ஒதுக்கித்தள்ளுகிறார். பின்னர் அவனுக்கு அபராதம் விதிக்கப்படுகிறது. அபராதம் கட்ட பணமில்லாமல் சிறைக்குச் சென்று செக்கிழுக்க வேண்டும். குற்றச்சாட்டு நிரூபணமாகாவிட்டாலும் ‘போக்கிரி, நிலை

# நம் நீதிமன்றங்களின் வேலை என்ன?

யின்றி அலைபவன்' என்று அவன் செல்விழுப்பதற்கு அனுப்பப்படுகிறார்.

தொழிலாளி வர்க்கத்துக்கு எதிரான நீதிபதிகளின் இந்த விரோத உணர்ச்சி வர்ணிக்கமுடியாததாகும். இந்த நிலைமையை மக்களும் ஏற்கின்றனர். பத்திரிகைகளின் விமர்சனத்துக்குள்ளாவதெல்லாம் உண்மையில் மிகவும் மோசமான சம்பவங்களே- பொதுவாக விமர்சனமின்றி சம்பவங்கள்தான் வெளியிடப்படுகின்றன. இதைத்தான் எதிர்பார்க்க முடியும். இந்தக்கரிவப் பிடித்த நீதிபதிகள் சட்டம் எந்தமுறையில் விளக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்திலுள்ளதோ அந்த முறையிலேயே விளக்குகின்றனர். முதலாளி வர்க்கத்தைச் சேர்ந்த நீதிபதிகள் தங்கள் வர்க்கத்தின் நலன்களே சட்டம் அமைப்பின் அடிப்படை என்று கருதுகிறார்கள்'

ஏங்கெல்ஸ் கூறியுள்ள இன்னொரு வாக்கியம் வருமாறு:

"எங்கும் வியாபித்துள்ள நிரந்தர ராணுவம், போலீஸ், அதிகார வர்க்கம், திருச்சபை, நீதித்துறையுடன் கூடிய மத்தியத்துவப்படுத்தப்பட்ட அரசுஅதிகாரம் எதேச்சதிகார முடியாட்சி காலத்திலிருந்து தோன்றியதாகும். இந்த உறுப்புகள் வேலைப் பிரிவினைத் திட்டத்தின்படி அமைந்தவையாகும். நிலப்பிரபுத்துவத்துக்கு எதிரான போராட்டத்தில் புதிதாகத் தோன்றியுள்ள மத்தியதர வர்க்கத்தின் வன்மையான ஆயுதங்களாக இவை இன்று பயன்படுகின்றன."

நிரந்தர ராணுவம், போலீஸ், அதிகார வர்க்கம், திருச்சபை, நீதித்துறை போன்ற மத்தியத்துவப்படுத்தப்பட்ட அரசு அதிகாரத்தின் வெவ்வேறு கருவிகளிடையே எந்த வித்தியாசத்தையும் ஏங்கெல்ஸ் பார்க்கவில்லை என்பதற்கு இது சான்று.

மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனைகளில் முக்கியமானதாகத் திகழும் அரசியல் தத்துவங்கள் சம்பந்தமாக குற்றவாளியின் "தவறுகளை" "வெளிப்படுத்துவது" நீதிமன்றத்தின் வேலையா என்று எனக்கு (இ. எம். எஸ்.ஸுக்கு) தெரியாது. நீதிமன்றத்தின் வேலை சட்டத்தை விளக்கி அமுலாக்குவதே என்றுதான் கருதுகிறேன். வழக்காடுபவர்கள் நம்பிக்கை வைத்திருக்கும் தத்துவங்களின் மீது தீர்ப்புக்கூறுவது நீதிமன்றங்களின் வேலை என்று நான் கருதவில்லை. அரசியல் தத்துவத்தை விளக்குபவர்களாக இருக்குமாறு நீதிபதிகள் கேட்டுக்கொள்ளப்பட்டால் அது ஒரு அசாதாரணமான நிலையாக இருக்கும். தன்னுடைய கொள்கைகளுக்கு உண்மையாக இருக்கிறானா இல்லையா என்பதைப் பார்க்காது அவனுடைய நடவடிக்கை சட்டத்துக்குப் பொருந்துவதாக, இருக்கிறதா இல்லையா என்று தீர்மானிப்பது நீதிமன்றத்தின் வேலை என்று நான் கூறுவேன்.

என்னுடைய பேச்சுக்களும் அறிக்கைகளும் சட்டத்துக்கு மாறானதா இல்லையா என்று தீர்ப்பளிப்பது நுட்பமாக நீதிமன்றத்தின் கடமையேயாகும். மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனைகளை நான் உண்மையாகப் பின்பற்றுகிறேன் என்று கூறுவது சரியா இல்லையா என்ற பிரச்னையில் நீதிபதிகள்சம்பந்தப்பட முடியும் என்பது குறித்து நான் ஆச்சரியமடைகிறேன்.

மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனைகள் சம்பந்தமாக நான் கூறுவது சரியாக இருந்தாலும் நீதிபதிகள் விளக்கும் முறையில் சட்டத்துக்குப் புறம்பானதாக என்னுடைய நடவடிக்கை இருந்தால் நான் தண்டிக்கப்படவேண்டும். மாறாக, மார்க்ஸ் ஏங்கெல்ஸ் போதனை பற்றி தவறான பாத்தியதை கொண்டாடிக் கொண்டாலும் நான் சட்டத்தை மீறாவிட்டால் என்னைத் தண்டிக்க முடியாது.

## "தவறு" யாருடையது ?

ஆனால் மார்க்ஸ், ஏங்கெல்சின் உண்மையான போதனைகள் என்ன என்று கண்டுபிடிக்கும் முயற்சியில் நாட்டின் மிக உயர்ந்த நீதிமன்றம் இறங்கியிருப்பதாலும் அப்போதனைகள் சம்பந்தமாக என்னுடைய 'தவறை' 'அம்பலப்படுத்தும்' முயற்சியில் இறங்கியிருப்பதாலும், மார்க்ஸ், ஏங்கெல்சின் உண்மையான போதனைகள் சம்பந்தமாக தவறு செய்திருப்பது நானல்ல என்று இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பின் ஒரு பெரும் பகுதி இந்த அம்சத்தில் என்னுடைய பாத்தியதையை ஆராய்வதிலும் என்னுடைய 'தவறை' 'அம்பலப்படுத்துவதிலும்' செலவழிக்கப்பட்டிருக்கிறது. நீதிமன்றத்தின் புலமைக்கும், அறிவுக்கும், அதிகாரத்துக்கும் மதிப்புக்கொடுக்கும்போதே இவ்விஷயத்தில் நீதிமன்றம் கூறியிருப்பது சரியல்ல என்று நான் கூறுவேன். அரசு சம்பந்தமாகவும் அரசு தேய்வது சம்பந்தமாகவும் மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் போதனைகளை விவாதிக்கும்போது நீதிபதிகள் கீழ்வருமாறு கூறுகின்றனர்:

'அரசு தேய்ந்துபோவது பற்றி மார்க்சும், ஏங்கெல்சும், லெனினும் எண்ணினார்கள். ஏங்கெல்சின் சித்தாந்தம் மார்க்சிசத்தின் கலப்படம் என்று லெனின் கருதினார் என்று நாங்கள் எண்ணுகிறோம். லெனின் கூற்று சரியல்ல. அரசு தேய்வதுபற்றி மார்க்சே தம்பினார். தத்துவத்தின் வறுமை என்ற நூலில் மார்க்ஸ் கூறுவதாவது:—

"தொழிலாளி வர்க்கம் வளர்ச்சிப் போக்கில் பழைய முதலாளித்துவ சமூகத்துக்குப் பதில் வர்க்கங்களும் அவற்றின் விரோதமும் இல்லாத கூட்டத்தைக்கொண்டுவரும். அரசியல் அதிகாரம் என்று அழைக்கப்படுவது எதுவும் அங்கிருக்காது. ஏனெனில் அரசியல் அதிகாரம் என்பது முதலாளித்துவ சமூகத்தில் வர்க்கவிரோதத்தை அதிகாரப்பூர்வமாக வெளிப்படுத்துவதேயாகும்."

"உண்மையான அரசு என்பது ஆளும் வர்க்கமாக தொழிலாளி வர்க்கம் அணி திரண்டிருப்பதே" என்று கம்யூனிஸ்ட் அறிக்கையில் மார்க்சும் ஏங்கெல்சும் கருத்துத் தெரிவித்துள்ளார்கள். காட்ஸ்கி கிட்டுகள்தான் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் பற்றிய மார்க்ஸ் சித்தாந்தத்தைத் தவறாகப்

புரிந்துகொண்டு பாட்டாளி வர்க்கத்துக்கு அரசு தேவையென்று கருதினார்கள். பாட்டாளி வர்க்கத்திற்கு அரசு தேவை என்றும், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்கு வழி வகுத்து அது தேய்ந்து போகவேண்டும் என்றும் மார்க்ஸ் கருதினார்' என்று நீதிபதிகள் கூறியுள்ளனர்.

மேற் கூறியிருப்பதில் மார்க்சின் மேற்கோளையும் மார்க்ஸ் சித்தாந்தத்தையும் காட்ஸ்கி தவருகப் புரிந்துகொண்டுள்ளார் என்று கூறியிருப்பதையும் தவிர மேலே கூறியிருப்பது அனைத்தும் தவருனது என்று மார்க்சிசம்—லெனினிசத்தை அறிந்தவர்கள் பார்க்க முடியும். கடைசியாகக் கூறப்பட்டுள்ள அம்சத்திலும் நீதிமன்றமே மார்க்சைத் தவருகப் புரிந்துகொண்டுள்ளது. இவ்வாறு கூறுவதற்குக் காரணம் வருமாறு:—

(1) அரசு எப்போதும் நிரந்தரமானது என்று மார்க்சும், ஏங்கெல்சும், லெனினும் கருதவில்லை. அரசே இல்லாதிருந்த காலம் மனித வரலாற்றில் இருந்திருக்கிறது என்பதை அவர்கள் காட்டியிருக்கின்றனர். மனித வரலாற்றில் மீண்டும் அரசே இல்லாதகாலம்வரும். இந்த இருகட்டங்களுக்கும் மத்தியில் அரசு இருக்கிறது என்ருலும் எல்லா காலத்துக்கும் இது ஒரே மாதிரி அரசல்ல. ஒரு கட்டத்திலிருந்து இன்னொரு கட்டத்துக்கு அதன் அடிப்படைத் தன்மை மாறுகிறது. வர்க்க சமூகத்தின் மாறுதலுடன் அதனால்உற்பத்தி செய்யப்பட்டதும், பாதுகாவலாக இருப்பதுமான அரசின் தன்மையும் மாறுகிறது. அடிமை, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ சமூகங்கள் அவற்றின் வர்க்க அரசுகளைப் பெற்றிருந்தன. சுரண்டப்பட்ட பெரும்பான்மையினரை அடிமைப்படுத்தி வைத்திருப்பதற்கு சுரண்டும் சிறுபான்மையானரான அடிமை, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ எஜமானர்களின் ஒடுக்குமுறைக் கருவியே அரசு. நம்முடையதைப்போன்ற வர்க்க சமூகத்தில் நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ கூட்டுச் சிறுபான்மையினர் ஆதிக்கத்தின் கீழ் அரசு அவர்கள் வகுத்துள்ளஒடுக்குமுறைக் கருவியேயன்றி வேறல்ல.

(2) மார்க்ஸ், ஏங்கெல்சின் இந்தப் போதனையைத்தான் காட்ஸ்கி தவருகப் புரிந்துகொண்டு முதலாளித்துவ சமூகத்தை வீழ்த்துவதற்கும், சோசஷலிச சமூகத்தை நிர்மாணிப்பதற்கும் முதலாளித்துவ அரசை தொழிலாளி வர்க்கம் பயன்படுத்தமுடியும் என்ற கொள்கையை வகுத்தார். இந்த அம்சத்தில் காட்ஸ்கியின் தவறுகளை ஏங்கெல்சே தம்முடைய கடைசிக் காலத்தில் அறிந்திருந்தார். என்ருலும் காட்ஸ்கியின் மார்க்சிஸ்ட் விரோதக் கொள்கையைத் தகர்க்கும்பணி லெனினுக்கே விடப்பட்டிருந்தது. முதலாளித்துவ அரசின் வர்க்கச் சாராம்சத்தைக் கைவிட்டு முதலாளிகளுக்கான ஜனநாயகத்தை மக்களுக்கான ஜனநாயகத்துடன் போட்டு குழப்பியிருப்பதே காட்ஸ்கி போதனையின் அடிப்படையான தவறு என்று லெனின் சுட்டிக்காட்டினார். காட்ஸ்கியின் இந்தக் கருத்தை எதிர்த்தே மார்க்சும், ஏங்கெல்சும் தங்கள் வாழ்நாளெல்லாம் போராடினார்கள்.

(3) சுரண்டப்படும் பெரும்பான்மையினருக்கு எதிராக சுரண்டும் சிறுபான்மையினரின் கையில் ஒடுக்குமுறைகருவி என்ற அர்த்தத்தில் முதலாளித்துவ அரசுதான் வர்க்க அரசின் கடைசியான உருவம் என்று மார்க்சும், ஏங்கெல்சும், லெனினும் கருதினார்கள். ஏனெனில் விவசாயி வர்க்கத்துடனும் சிறு சொத்துடைமையாளர்களுடனும் கூட்டுச் சேர்ந்து தொழிலாளி வர்க்கத்தால் முதலாளி வர்க்க ஆட்சி வீழ்த்தப்பட்டதும் தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவ அரசு யந்திரத்தை நொறுக்கிவிட்டு தன்னுடைய அரசை நிறுவுகிறது. இந்த அரசு சம்பந்தமாக இரு அம்சங்கள் கூறப்பட வேண்டும்.

முதலில் சுரண்டப்படும் பெரும்பான்மையினருக்கு எதிராக சுரண்டும் சிறுபான்மையினர் பயன்படுத்திய ஒடுக்குமுறைக் கருவியாக அது இனி இருக்காது. ஏனெனில் முன்பு சுரண்டப்பட்ட பெரும்பான்மையினரின் மேலாதிக்கம் நிலைநாட்டப்படுகிறது.

இரண்டாவதாக ஒரு அரசில்— ஒடுக்குமுறைக் கருவியின் குணங்கள் இன்னமும் அதில் இருக்கிறது. ஏனெனில் வீழ்த்தப்பட்ட சுரண்டும் சிறுபான்மையினர் மீண்டும் அதிகாரத்துக்கு வருவதைப் பற்றி நினைக்கும் அளவுக்கு சக்தி படைத்தவர்களாக அவர்கள் இன்னமும் இருக்கிருர்கள். அம்மாதிரிமீண்டும்வரும் முயற்சிக்கு எதிராக தேவையான ஒடுக்குமுறைக் கருவிகளை வைத்திருப்பது அத்தியாவசியமாகிறது. எனவே இது பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்றழைக்கப்படுகிறது. ஏனெனில் விவசாயி வர்க்கத்துடனும் சிறு சொத்துடைமையாளர்களுடனும் கூட்டுச் சேர்ந்துள்ள தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில் அமைந்த இந்த அரசு முடிந்த அளவு விரிவான ஜனநாயகத்தை மக்களுக்கு அளிக்கிறது. இத்துடன் மீண்டும் வர்க்க ஆட்சி ஏற்படாதபடித் தடுப்பதற்காக முந்தைய சுரண்டும் சிறுபான்மையினரின் உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது.

(4) மனித வரலாற்றில் இந்த இடைக்காலத்துக்குப் பின்னரே, எல்லா உற்பத்தி சாதனங்களும் கூட்டுடைமையாக்கப்படுவது பூர்த்தி செய்யப்படும்—உடல், மூளை உழைப்புக்கிடையே, நகர்புற கிராமப்புற வாழ்க்கைக்கிடையே, ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே வேற்றுமை ஒழிக்கப்படும்—வர்க்க வேற்றுமைகளின் மிச்ச சொச்சங்கள் ஒழிக்கப்படும் இந்த இடைக்காலத்துக்குப் பின்னரே அரசு "தேய்ந்துபோகும்"

மார்க்ஸ், ஏங்கெல்சின் உண்மையான போதனை சம்பந்தமாக என்னுடைய "தவறை" 'அம்பலப் படுத்த" முற்படும் நீதிபதிகள் ஒடுக்குமுறை யந்திரத்தை வைத்திருக்கும் வர்க்கம் சம்பந்தமாகவன்றி அரசைப் பொதுவாக விவாதிப்பது மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனைக்குப் புறம்பானது என்று புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. இந்தத் தவறைத்தான் காட்ஸ்கி செய்தார். இந்தத் தவறில்தான் கனம் நீதிபதிகளும் விழுந்திருக்கிருர்கள் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து. எனவேதான் "அரசு தேய்ந்து பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்கு வழிவகுக்கிறது என்பது மார்க்ஸ், ஏங்கெல்ஸ் கருத்து" என்ற தவருன கூற்று அவர்களுடைய தீர்ப்பில் காணப்படுகிறது.

ஒரு செய்திப் பத்திரிகையோ அல்லது அறியாமையுள்ள அரசியல்வாதியோ இம்மாதிரி தவருகக் கூறியிருந்தால் அதை எளிதில் தள்ளிவிட முடியும். இங்கு இந்தியாவின் சுப்ரீம் கோர்ட் இவ்வாறு தீர்ப்பளித்துள்ளது. மார்க்சிச போதனை பற்றிய என்னுடைய தவறைப் பார்க்கு மாறு அத் தீர்ப்பு என்னைப் பணிக்கிறது. இந் நிலையில் கீழ்வருமாறு வியப்புத் தெரிவிப்பது அனுமதிக்கத்தக்கது என்று நான் நம்புகிறேன்: 'பிரபுக்களே உங்களுடைய பார்வையைக் கொண்டு மார்க்ஸ், ஏங்கெல்ஸ் போதனையைப் பார்ப்பதைவிட என்னுடைய 'தவறு' வைத்துக்கொண்டிருப்பதே மேல் என்று நான் கருதுகிறேன்!"

★

# செந்தொண்டர் படை

## * திரண்டு வரும்! *

— மார்க்கன் —

எண்ணெயிலே இயங்குகின்ற எந்திரமும்,
அச்சினிலே வெளியாகும் பணக்கட்டும்.

எண்ணிறைந்தப் பொருட்களையே செய்திடுமா ?
ஏராள லாபத்தைத் தந்திடுமா ?

எல்லாமும் திறமையினு லென்போரே !
என்னந்த திறமையென விளம்பீரோ ?

கல்லிரும்பு கலவையான கட்டிடமும்,
கைநிறைய பணங்கொண்ட முதலாளியும்,

நாட்டிற் குற்பத்திச் செய்திடுவாரோ—
நல்லாயிரந் தொழிலாளர் கரங்களில்லாமல் ?

மேட்டுக் குடித்தனக் காரர்களே !
உணர்ந்திடுவீரிந்த உண்மைதனை !

உற்பத்தித் திறனொப்ப கூலியை
உழைப்பாளனுக்கே கொடுத்துவிட்டால்

உபரியேது, லாபமேது, கொள்ளையேது ?
ஊதாரிக் கூட்டமே சொல்வீரே !

செயற்கையிலே சந்தைகளைச் செய்துவைப்பீர் ;
செய்பொரு ளெல்லாமும் பதுக்கிவைப்பீர் ;

இரக்கமில்லா கொடியோரே ! தொழிலாளி
இடுப்பொடிய நெஞ்சொடைய வேலைகொடுப்பீர் !

" உழைப்பிற்கேற்றக் கூலியைக் கொடுப்பீர் ! '
என்றதுமே — உதைக்கின்றீர் — கொல்கின்றீர் ;

உழைப்போர் ஊதியத்தின் பெரும் பகுதியை
உபரியாயுறிஞ்சுகின்றீர் — கொழுக்கின்றீர் !

உண்மை யொருநாள் வெடித்தே கிளம்பிவிடும் !
உழைப்போர் கூட்டத்தை ஒன்று திரட்டிவிடும் !

எண்ணாயிரங்கரங்கள் உயர்ந்துவிடும் !
ஏய்த்துப் பிழைப்போர் திறமையை மாய்த்துவிடும் !

உண்ணாதார் கூட்டங்கள் எழுந்துவிடும் !
உல்லாசக் கோட்டையை இடித்துவிடும் !

இன்னாரிவரென வெளிப்படுத்திவிடும் !
இரக்கமற்றோரைத் தீர்த்துக்கட்டும் !

செந்தொண்டர்படை திரண்டுவிடும் !
செம்மையுலகத்தைப் படைத்து விடும் !

அந்தநாள்தான் இவ்வுலகின் பொன்னாள் !
உழைப்போரை உயர்த்திடும் பொன்னாள் !

# காவலில் கன்னி



மலையாள மூலம் :
சாவித்திரி ராமன்

தமிழில்
சி. ப. பெருமாள் தங்கப்புதூர்

அவனுக்குத் தன்னுணர்வு ஏற்படும்போது, காலைமணி ஏழு. காலைக் கதிரவனின் செந்நிறக் கதிர்கள் ஜெயிலறையின் சுவர்களில் சிறு சிறு புள்ளிகளாகத் தெறித்திருந்தன.

உடம்பிலே புரண்டிருந்த புழுதியையும் மண்ணையும் துடைத்துவிட்டான். அது அவனுக்கு ஒரு வேதனையாகத் தோன்றவில்லை. மண்ணிலும், புழுதியிலும், மழையிலும், வெயிலிலும்தானே அவன் இத்தனை நாட்களும் தூங்கியது!

என்றாலும், இந்த நாசமாய்ப் போனக் கொசுக்கடியினால் உடம்பெல்லாம் இரத்தம் கன்னி வெளிப்பட்டுக்கொண்டிருந்தது.

எப்படியும் தொலைந்து போகட்டும்; ஜெயிலறையானாலும் வாழ்க்கையில் முதன்முதலாக ஒரு அறையில் படுத்துறங்கும் பாக்கியமாவது கிடைத்ததல்லவா!

உடலை அசைக்க முடியவில்லை. தாங்க முடியாத வலி. போலீஸின் கொடூரமான தாக்குதலினால் ஆங்காங்கே தடித்து உடல் வீங்கி இருந்தது.

இவ்வளவு தூரம் மிருகத்தனமாக போலீஸ் தாக்குகிறளவுக்கு அவன் செய்த குற்றமென்ன? அவன் மனைவியோடுப் பேசிக்கொண்டிருந்தது குற்றமா? அவர்களை அங்கீகரிக்காத உலகம் அவர்கள் திருமணத்தையும் அங்கீகரிக்கவில்லையா?

சென்ற இரவு நடந்தசம்பவங்களை அவனால் எண்ணிப் பார்க்கக்கூட முடியவில்லை. ஒரு கணவன் என்ற முறையில் நேற்று நடந்த நீசத்தனத்தை எப்படி அவனால் தாங்க முடியும்? நினைத்தால் நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது.

அதன் பின் அவளுக்கு என்ன நேர்ந்தது? அவளுடைய சப்தமே வெளியில் கேட்கவில்லையே. யாரிடத்தில் விசாரிப்பது? போலீசாரை மட்டுந்தான் அங்கு பார்க்க முடிகிறது. அந்த மனச்சாட்சி இல்லாத மிருகங்களிடம் கேட்டால் உதைதான் கிடைக்கும்.

போலீசார் பரபரப்போடு அங்குமிங்கும் போய்க்கொண்டிருக்கின்றனர். ஒருவருக்கொருவர் கிசுகிசு'வென்று பேசிக்கொண்டு செல்கின்றனர். ஒன்றும் அவனுக்குப் புரியவில்லை. ஏதோ ஒரு விபரீதம் நடந்திருக்கிறது. அது மட்டுந்தான் தெரிகிறது.

சிறிது நேரம் சென்றதும் ஒரு போலீஸ் வேன் அங்கு வந்து நின்றது. இரண்டு மூன்று போலீசார் ஒரு பெண்ணைத் தூக்கிவந்து அதில் போட்டார்கள். அவன் அந்தப் பெண்ணைக் கண்டான்.

அவள் அவனுடைய மீனு!

அவள் உடல் சோர்ந்து காணப்பட்டாள். ஆடையெல்லாம் ஒரே இரத்தக் கறை. உணர்வு இருக்கிறதா என்று தெரியாது.

'பிளட் பிரஷர்'

'இரவெல்லாம் ஒரே இரத்த வாந்தி எடுத்தாள்'

'நேற்றுக் கொண்டுவரும்போதே சோர்வாகத்தானிருந்தாள்'

'விபச்சாரிதானே—எல்லா நோயுமிருக்கும்'

'இது ஒப்பேறாது'

இவ்விதம் போலீசார் அவன் கேட்கும் வண்ணம் பேசிக்கொண்டு செல்கின்றனர்.

'பிளட் பிரஷரா? அவளுக்கா? நேற்றுவரை ஒன்றுமில்லையே! நேற்றுவரை அவனோடு சிரித்துப் பேசி விளையாடிக்கொண்டிருந்தாளே!

சரி—பிளட் பிரஷராகத்தான் இருக்கட்டுமே இரத்தவாந்தி எடுத்ததாக வைத்துக்கொண்டாலும், இடுப்புக்குக் கீழே மட்டும் இரத்தக் கறைப்படியக் காரணமென்ன? உடம்பெல்லாம் கீறலும், வீக்கமும் எப்படி ஏற்பட்டது? உதடும் கன்னமும் புண்ணாகி வீங்கி இருக்கக் காரணமென்ன? தலைமுடி ஏன் குலைந்து கிடக்கிறது?

சிந்தனை அவன் மூளையைக் குழப்பிக்கொண்டிருக்கையில் போலீஸ் வேன் போய்விட்டது.

அவன் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வடிந்தது. ஜெயில் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு கதறிஅழுதான். இருண்ட அவன் வாழ்விற்கு ஒளியாய் திகழ்ந்தவள், வெறுப்பும் வேதனையும் தேங்கி நின்ற அவன் மனதில் ஆசையைத் தூண்டி, வாழ்க்கையில் ஒரு பிடிப்பை ஏற்படுத்திய அவனது மீனு, மரணத்தோடுப் போராடிக்கொண்டிருக்கும் நிலையில் போலீஸ் வேனில் கொண்டுபோகப்படுகிறாள்!

உற்றார் உறவினர் இல்லாத— யாருடைய உதவியும் ஆதரவும் இல்லாத இரண்டு ஜீவன்கள்—கண்ணீரும் கம்பலையுமாக அலைந்து திரிந்த அந்த இரண்டு மனித ஜீவன்கள்-ஒரு சுபதினத்தில் ஒன்று சேர்ந்தன. அவளுக்கு அவனும், அவனுக்கு அவளுமானாள். வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை மாத்திரம் ஏற்படும் அந்த இன்பமான நாள்.........முதல் இரவு!.. ஐயோ! அவள் இதயத்தை கழுகுகள் கொத்திக்கொண்டுபோய் விட்டனவே!

அவளோடு அவனும் போக எண்ணினான். ஒன்றாய் வாழ்ந்து ஒன்றாய் உலகைப் பிரிய வேண்டுமென்றுதான் உறுதிமொழி எடுத்திருந்தனர். ஆனால், இப்போது அவன் அவளோடுப் போகமுடியாதபடி ஜெயில் கம்பிகள் குறுக்கே நிற்கின்றன.

அவன் மூச்சுத்திணறுவதுபோன்று திக்குமுக்காடினான். இதயம் சுக்கு நூறாக உடைவதுபோன்று தோன்றியது.

குனிந்திருந்து சிறிதுநேரம் அழுது தீர்த்தான். தாரை தாரையாக வடிந்த கண்ணீரோடு துக்கமும் சிறிது கரைந்து ஓடியது. மனதை அழுத்திப் பிடித்திருந்த பாரம் சிறிது சிறிதாகக் குறைவதுபோன்று அவனுக்குத் தோன்றியது.

மன ஆறுதலை வேண்டி சிறிது நேரம் வெளியே பார்த்துக்கொண்டிருந்தான். ஜெயிலின் வெளியே நின்றுகொண்டிருக்கும் புளிய மரத்தின் மூட்டில் ஒரு மாடப் புறாவின் எலும்பும் குடலும் சிதறிக்கிடப்பதுபோல் தெரிந்தன. சென்ற இரவு பிணந்தின்னிக் கழுகுகள் புறாவைக் கொண்டுவந்து அங்கு வைத்துத்தான் கொத்திக் கீறி சிதறித் தின்றன. பாவம்! எவ்வளவு அது உயிரோடுப் போராடிக்கொண்டிருந்ததுவோ?

தூரத்தில் அந்த ஆலமரம் படர்ந்துகிடப்பது அவன் கண்களுக்குத் தெரிந்தது. எத்தனையோ ஆண்டு காலமாக. அதனடியில் நடக்கும் அனைத்திற்கும் சாட்சியாக அது நிற்கிறது. அதற்கும் சுகதுக்கங்கள் உண்டா? அதற்கும் அவனிடத்தில் இரக்கம் தோன்றியிருக்குமா?

அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில், மனிதர்கள் விடும் மூச்சைத்தான் அது சுவாசித்து வருகிறது. ஏக்கத்திற்கும், ஏமாற்றத்திற்கும், ஏழ்மைக்கும் இடையில் போராடும் மனிதக்கூட்டம்தான் அதன் நிழலில் வாழ்க்கையைத் தள்ளுகிறது. அதன் வேரில் கண்ணீரும் சிந்தப்பட்டதுண்டு.அது வேரோடியிருக்கும் மண்ணும் கண்ணீரால் நனைக்கப்பட்டதுதான். அந்த ஈரத்தில் உரமெடுத்து வளர்ந்ததுதான் அந்த ஆலமரம்.

வந்தோர்க்கெல்லாம் வாழ இடமளிக்கும் அந்த ஆலமரம், பல்லாயிரம் அநாதைகளுக்கு உறைவிடமாக அமைந்திருக்கிறது. இராமுவைப் போன்ற......ஆமாம் அதுதான் அவன் பெயர்......அனேக அபாக்கியவதிகள் அங்கே வருவதும் தங்குவதும், போவதும் வழக்கம். அதனடியில் எத்தனையோ சண்டைகள், சமரங்கள், கல்யாணங்கள், கருமாதிகள் நடந்திருக்கின்றன. அதில் வந்து தங்குபவர்கள் யாரும் வாழ்வதற்காகப் பிறந்தவர்கள் அல்லர்; பிறந்துவிட்ட காரணத்திற்காக வாழ்பவர்கள். எந்த விதத்திலும் வாழ்ந்து தீர்த்தால் சரிதான் என்று இருப்பவர்கள், அதற்குமேல் அவர்களுக்கென்று ஆசையோ, லட்சியமோ கிடையாது. பலரின் வாழ்க்கை அந்த மரத்தின் அடியிலேயே ஆரம்பித்து, அங்கேயே அஸ்தமித்திருக்கிறது.

ராமுவின் வாழ்க்கையும் அங்குதான் ஆரம்பமானது. அங்குதான் முடியவும் செய்திருக்கிறது.

வாழ்க்கை அவனுக்கு ஒரு பிரச்னையாகவே தோன்றவில்லை. அவனுக்கென்று ஒன்றுமில்லை; யாருமில்லை—யாருக்காகவும் அவன் வாழவுமில்லை. எப்படியும் வாழ்ந்தால் போதும். இறக்கும்போது எப்போது, எங்கே, எப்படி இறந்தாலென்ன?

தாயும், தந்தையும் ஒரு காலத்தில் இருந்தனர். பட்டணத்தில் அவர்களோடு சேர்ந்து பிச்சை எடுத்துக்கொண்டிருந்த காலத்தில் எப்படியோ அவர்களிடமிருந்து பிரிந்துவிட்டான். தினமும் அவர்களைத் தேடித்தான் பார்க்கிறான். இன்றுவரை அவர்கள் அவன் கண்களில் தென்படவேயில்லை. வருடங்களும் பத்து கடந்துவிட்டன.

யாரிடம் சென்று கேட்பது? அவர்களை யாருக்குத் தெரியும்? அவர்களுக்கு வீடு உண்டா? விலாசமுண்டா? நாடுதான் உண்டா?

அவர்களைத் தேடித்திரியும்போதுதான், அவன் மீனாவை சந்திக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அன்று வெள்ளிக்கிழமை. அவனுக்கும் அது ஒரு துக்க நாளாகத்தான் இருந்தது.

மனித வர்க்கத்தின் பாவங்களை கழுவுவதற்காக மனித அவதாரம் எடுத்த ஏசுபிரான் சிலுவையில் அறையப்பட்ட தினம்தான் துக்க வெள்ளிக்கிழமை. மனித வர்க்கத்தின் பாவ மூட்டையை சுமந்து இரத்த சாட்சியாக துலங்கும் அந்த புண்ணிய ஆத்மா நித்திய சாந்தி அடைய, பிரார்த்தனை செய்ய தேவாலயத்திற்கு விசுவாசிகளெல்லாம் கூட்டம் கூட்டமாய் சென்றுகொண்டிருந்தனர். அன்று தேவாலயத்தின் முன்னால் பிச்சைக்காரர்களின் கூட்டம் எக்கச்சக்கமாக இருக்கும். பிரார்த்தனை செய்வதற்கு அல்ல! பிச்சை எடுக்க!

பிரார்த்தனைக்கு வருபவர்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் பிச்சைக்காரர்கள்தான் கூடுதலாக இருப்பார்கள்—கையில்லாதவர்கள், காலில்லாதவர்கள், கூன், குருடு, செவிடர்கள், நோயாளிகள், குழந்தைகள், வயோதிகர்கள்—இத்யாதி.

முன்புபோல் இப்போது தான தருமங்கள் அதிகம் நடப்பதில்லை. தேவனிடத்திலும் மனிதர்களுக்கு இப்போது அவ்வளவாக அக்கரை இருப்பதாகத் தெரியவில்லை.

மனித ஜீவன்கள் கேவலம் ஒரு பைசாவிற்காக எலும்பான உடலையும் ஒரு சாணாக்கி, குனிந்து குனிந்து கும்பிட்டு பிச்சை கேட்பதும், அவர்களால் விரட்டி அடிக்கப்படுவதும், கசிந்து துப்பப்படுவதும், தூற்றப்படுவதும், நாய்களைப்போல வாலை மடக்கி திரும்பிப் போவதையும் பார்க்கலாம்.

அறியாமை, அந்தகாரம், அடிமைத்தனம் என்ற சிறையிலிருந்து என்றுதான் இந்த சுரண்டப்படும் வர்க்கம் விடுதலைபெற விழிப்புற்று விறுகொள்ளுமோ?

இதனைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்த ராமுவுக்கு ஒரே வெறுப்பாக இருந்தது. அவனுக்கு அறிவு வந்த நாள்முதல் பிச்சை எடுக்கும் தொழிலையே நிறுத்திவிட்டான்.

சக்தி இழந்தவர்கள் அந்த பிச்சைக்காரர்கள் கூட்டத்தில் நின்றால், அது ஒருவிதத்தில் நியாயந்தான். ஏனெனில் அவர்களும் வாழ வேண்டுமல்லவா? ஆனால் ஆரோக்கியவதியான மீனா அங்கு சென்று அவர்கள் கூட்டத்தில் ஏன் நிற்கிறாள்? ஏதாவது வீட்டுவேலை செய்து பிழைக்கக் கூடாதா?

அழகும் அந்தஸ்தும் இல்லாத அசுத்தம் நிறைந்த அவளை யார் வேலைக்கு வைத்துக்கொள்வார்கள்?

எண்ணெய் தேய்க்கப்படாத சிக்குப்பிடித்து நாறும் தலைமுடியும், அழுக்கு நாறும் கிழிந்த கந்தல் துணியால் மூடப்பட்ட அந்த கருகருத்த உடம்பில்...சே!...கண்டாலே வாந்தி வரும்!

ஒரு கண நேரத்தில் அந்த சம்பவம் நடந்துவிட்டது. ''அண்ணே ஒரு பைசா'' என்று அங்கு நின்ற ஒருவனைத் தொட்டுக் கேட்டுவிட்டாள் மீனா. அந்த பெரியமனிதனைத் தொட்டதைவிட ''அண்ணே'' என்று அவள் கூப்பிட்டதுஅவனுக்கு அடங்காத ஆத்திரத்தை மூட்டியது—''பிச்சைக்காரச் சிறுக்கி எவ்வளவு திமிரு!'' என்று திட்டிக்கொண்டே அவளைக் கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டான். அடி தாங்க முடியாமல் அவள் தரையில் சுருண்டு வீழ்ந்தாள்.

எல்லோரும் அதைப் பார்த்துக்கொண்டிருந்தனர். இந்த அநியாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பிச்சைக்காரர்கள்கூட, அதனைக் கண்டிக்க முன்வரவில்லை. எப்படி முடியும்? அடித்தவனோ நிலையும் விலையுமுள்ள ஒரு பெரிய மனிதன்; அடிபட்டவளோ ஒரு பிச்சைக்காரி. ஒரு சல்லிக்காசுக்குக் கூட விலைமதிப்பற்றவள்; சமூகத்தால் வெறுக்கப்பட்டவள்—ஒதுக்கப்பட்டவள். எதையும் பொறுமையோடு ஏற்றுக்கொள்ள வேண்டியவள்.

ஆனால், இதனைக்கண்ட ராமுவால் பொறுக்கமுடியவில்லை. அவன்,தான் நின்ற இடத்திலிருந்து சாடிச் செல்வதுதான் தெரிந்தது. ''டபார்''என பட்டாசு வெடிப்பதுபோன்று ஒரு சப்தம் கேட்டது.

மானக்கேடு, மகா மானக்கேடு. ஒரு பிச்சைக்காரப் பயலின் கையால் ஒரு பெரிய மனிதன் அடி வாங்கலாமா? கூடி நின்றவர்கள் அனை

ரும் ராமுவின்மேல் விழுந்து அவனை அடித்து நொறுக்கிவிட்டனர்.

தேவாலயத்தில் பிரார்த்தனைக்கு மணி அடித்ததும் கூட்டம் கலைந்து விட்டது.

அவள் எழுந்து அவன் அருகே மெல்லச் சென்றாள். தேவாலயத்தில் எதை எதையோ சொல்லிப் பிரார்த்திக்கிறனர்.

பாதிரியாரின் சப்தம் தேவாலயத்தை பிளந்துகொண்டு வெளியே வருகிறது. 'ஓ...' பயங்கரமான இடி முழக்கம்போன்ற சப்தம். "பாவிகளே! உங்கள் பாவங்களை, தன் பரிசுத்த இரத்தத்தினால் கழுவ தேவகுமாரன் மீண்டும் வருவார்."

வெளியில் கூடி நின்றப் பிச்சைக்காரர்கள் அவளையும் அவனையும் பார்த்து கேலியும் கிண்டலுமாக ஏசினர்.

'அகம்பாவம் காட்டினால் இப்படித்தான் கிடைக்கும்'

'பெரிய மனிதர்களிடம் மோதினால் இதுதான் கதி'

'எடுக்கறது பிச்சை—இதில் வேறு ரோசம்'

'புண்ணியவான்க தருவதையும் இந்த கழுதங்க கெடுத்துப் போட்டு.........'

இப்படி ஒவ்வொருப் பிச்சைக்காரராக தங்கள் தங்கள் கருத்தாபிஷேகங்களை பொழிந்தனர்.

அவள் அவனை தாங்கி தூக்கி நிறுத்தினாள். அடிபட்டு தடித்திருந்த இடங்களை மெல்லத் தடவிக் கொடுத்தாள்.

"வா! ஆஸ்பத்திரிக்குப் போகலாம்"—அவள் அவனைத் தாங்கி பிடித்தவாறே நடத்திச் சென்றாள்.

ஆஸ்பத்திரி வாசலில் அரை மணி நேரம் அவள் காத்துநின்றாள். அவள் பலதடவை கூப்பிட்டும் டாக்டர் அறையிலிருந்து வெளியே வரவில்லை. டாக்டரின் அறையிலிருந்து சிரிப்பொலிகளும், வளையல் குலுங்கும் ஒலிகளும் கேட்டுக்கொண்டிருந்தன.

அறையின் உள்ளே யாரையோ டாக்டர் "சீரியஸாக"ப் பரிசோதித்துக்கொண்டிருந்தார் போலும்.

"எஜமானே! இதுவரை கொஞ்சம் வந்திட்டுப் போங்க"

"நான்சென்ஸ்—நேரம் காலம் தெரியாத கழுதைகள்!" என்று கோபத்தோடும் வெறுப்போடும் திட்டிக்கொண்டே, டாக்டர் அறையிலிருந்து வெளியே வந்தார்.

"உம்......என்ன வேணும்?"

ஓ! எத்தனை அகங்காரமான கேள்வி!

ராமுவை ஒருமுறை மேலும் கீழும் பார்த்துவிட்டு ஆஸ்பத்திரியிலுள்ள ஓர் அறைக்கு எடுத்துச் செல்ல உத்தரவிட்டார்.

இருபது நிமிடங்கள் கழித்து டாக்டர் வெளியே வந்தார். பின்னால் கையில் பிளாஸ்டர் போட்ட கட்டுகளுடன் ராமு வந்தான். அக்கறையோடு பரிசோதித்ததாகத் தெரியவில்லை. ஒரு பிச்சைக்காரனுக்கு ஒரு டாக்டரின் விலை மதிப்புள்ள இருபது நிமிஷங்கள் செலவழிக்கப்பட்டதே மிகப்பெரிய சாதனை!

"இனிமேல் நீ போகலாம். இரண்டு வாரம் கழித்து வா. பிளாஸ்டரை அறுத்துவிடுகிறேன்" என்றார், டாக்டர்

ராமுவுக்கு ஓய்வும், தொடர்ந்து வைத்தியமும் தேவைப்பட்டது. அவனை ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' செய்து சில நாட்கள் தங்கவைத்து வைத்தியம் பார்க்க டாக்டர் சம்மதிக்கவில்லை எப்படி சம்மதிப்பார்? அவனுக்குத் தொந்தித் தொப்பையுள்ள வயிறு இல்லை; வெள்ளை வெளேரென்ற மடிப்புக் குலையாத ஆடைகளில்லை; சிபாரிசு இல்லை; லஞ்சம் கொடுக்கவில்லை.

மீனா, ராமுவின் நெற்றியில்வடிந்த வியர்வையை தன் முந்தானையால் துடைத்தாள். ஒரு கையால் அவள் அவனைத் தாங்கிப்பிடித்துக்கொள்ள அவன் மெல்ல மெல்ல நடந்து, ரோட்டோரமுள்ள ஒரு மரத்தடியைச் சென்றடைந்தனர். அவள் அவனை மடியில் கிடத்தி விசினாள்—வலியுள்ள இடங்களில் தடவிக் கொடுத்தாள்.

"உங்களுக்குப் பசிக்கிறதா?" என்று கேட்டுவிட்டு அவள் எழுந்து சென்று, இரண்டு மூன்று தோசையும் ஒரு சட்டியில் தண்ணீரும் கொண்டு வந்தாள்.

அவன் அதைத் தின்று தண்ணீரும் குடித்தான். ஆகா! எவ்வளவு பசி! வேலை ஒன்றும் கிடைக்காததால் நேற்றே உணவொன்றும் அவன் உண்ணவில்லை.

பசியும் சோர்வும் சிறிது குறைந்தது. உடம்பில் வலியும் சிறிது சிறிதாகக் குறைய ஆரம்பித்தது.

புதுமையான ஒரு அனுபவம்—ஒரு புத்துணர்ச்சி; ஒரு ஆத்ம திருப்தி!

அவன் அவள் கண்களை உற்றுப் பார்த்தான். அழுக்கடைந்த கந்தல் ஆடை அணிந்திருந்தால்தான் என்ன? அவள் கண்கள்தான் எத்தனை ஒளிமயமாக இருக்கிறது. உடல்தான் எவ்வளவு தளதளப்பாக இருக்கிறது.

"ஒன் பேரு?"

"மீனா"

"நீ யாரு?"

"எனக்குத் தெரியாது" அவளுக்கு எப்படித் தெரியும்? அவள் யாரென்று? அவளுக்கு வீடோ, ஊரோ, இல்லை, யாருடைய மகளென்றுவது கூற முடியுமா, அவளால்?

"உனக்கு அம்மா, அப்பா இல்லையா?

"இருந்தார்கள்—இப்போ எங்கே என்று தெரியாது? அவள் கண்கள் கண்ணீரால் நிறைந்தது.

பிச்சைக்காரர்களைப் பொறுத்த வரையில் பெற்றோர் பிள்ளைகள், பந்தபாசம் அவ்வளவு முக்கியமானதாகக் கருதப்படுவதில்லை. பாசமிருக்கலாம், ஆனால் அவர்களிடையே உள்ள உறவு நெடுநாள் நீடித்து நிற்பதில்லை. செம்மறி ஆட்டுக் கூட்டம்போல் உணவு தேடி ஊர் ஊராகத் திரியும்போது, பெற்றோரும் பிள்ளைகளும் பிரிய நேரிடும். கணவனும் மனைவியும் பிரியநேரிடும். அது போலவே சகோதரனும் சகோதரியும் பிரிந்த பின்னால், ஒன்று சேருவது என்பது அனேகமாக முடியாது.

'உங்கள் பேரு?'

'ராமு'—

அவளுக்கும் அவனைப் பற்றி அறிய ஆவல்.

'நீங்க யாரு?'

'தெரியாது'

'அம்மா அப்பா இருக்கிறாங்களா?'

'உன்னைப் போலத்தான்'

அதன் பின் அவர்கள் இரண்டு பேருக்கும் பேசுவதற்குஒன்றுமில்லை.

மீனாவின் கண்களில் திரும்பவும் கண்ணீர் தேங்கியது.

'நீ ஏன் அழுற?' அவன் அவளைப் பார்த்துக் கேட்டான்.

அவள் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு 'இனி உங்களால் வேலை ஒன்றும் செய்ய முடியாதே. இதற்கெல்லாம் நான்தானே காரணம்' என்றாள்.

'பரவாயில்லை. அழாதே' என்று அவள் கண்ணீரைத் துடைத்தான். 'நீங்க கஷ்டப்பட வேண்டாம். நான் பிச்சை எடுத்துக்கொண்டு வந்து ஒங்களுக்குத் தாரேன்.'

அவன் அவள் முகத்தை உற்று நோக்கினான்: அவள் கண்களில் ஒரு வைராக்கியம் நிழலிட்டு நிற்பதைக் கண்டான்.

இரவைக் கழிக்க ஒரு ஒதுக்கிடம் தேடி இருவரும் புறப்பட்டனர்.

..........................

பஸ் ஸ்டாண்டிற்கும் சினிமா தியேட்டருக்கும் இடையில், ரோட்டின் வடக்குப் பக்கத்தில் நிற்கும் ஆலமரத்தின் அடியில் தங்கியிருக்கும் ஏழைப் பிச்சைக்காரர்கள் மத்தியில் மீனுவும், ராமுவும் புகலிடம் தேடிக்கொண்டனர்.

அங்கிருந்தவர்கள் அவளிடம் அன்பாய் பழகினர். மீனு தினமும் காலையில் அவர்களோடு சேர்ந்து தான் பிச்சை எடுக்கச் செல்வாள். மாலையில் வரும்போதும் அவர்களோடு சேர்ந்து வருவாள். கொண்டுவந்த சோற்றை அவனுக்கும் கொடுத்துவிட்டு, மீதியைத் தானும் புசித்துவிட்டு, பிச்சைக்காரிகளோடு சேர்ந்து தூங்கச் சென்று விடுவாள். அவன் பிச்சைக்காரர்களோடு சேர்ந்து படுத்துக்கொள்வான்.

ஒரு நாள் காலையில் இடியாப்பம் தின்றுகொண்டிருக்கும்போது மீனு ராமுவிடம் கேட்டாள்:

'எனிக்கு கல்யாணம் செய்ய ஆசையாயிருக்கு. ஒங்களுக்கு?

'எனக்கும் அப்படித்தான்'

'பிரிஞ்சு போயிடுவீங்களா?'

'மாட்டேன்'

'ஒருக்காலும்?'

'ஒருக்காலும் பிரிய மாட்டேன்!'

அவர்கள் வாழ்க்கையில் புதிய அத்தியாயம் தொடங்க ஆரம்பித்தது. அதுவரை அவன் முகத்தைப் பார்த்துப் பேசி பழகிவந்தவள், இப்போதெல்லாம் தரையைப் பார்த்துப் பேசலானாள். பேச்சிலே நாணமும், செய்கையிலே அச்சமும் நிழலாட ஆரம்பித்தன. காதல் அரும்பாகி, போதாகி, மலராகும் நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. ஆலமரத்தின் அடியில் இரண்டு இதயங்கள் இன்பக் கனவுகள் காண்பதில் மூழ்கிக் கிடந்தன.

சில நாட்களில் ராமுவுக்குத் தூக்கம் வருவதே இல்லை. அவளும் சில வேளைகளில் நள்ளிரவில் பெருமூச்சு விடுவது அவனுக்குக் கேட்கும், அனைவரும் குறட்டைவிட்டுத் தூங்கும்போது அவனும் அவளும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டே படுத்திருப்பர். இடை இடையே சிரிப்பொலி கேட்கும். கீழே கிடக்கும் சிறு சிறு கற்களைப் பொறுக்கி ஒருவர் மேல் ஒருவர் எறிந்துகொள்வார்கள்.

ஒருநாள் இரவு ராமு அவளைக் கையைக்காட்டி அழைத்தான்— அவள் எழுந்து மெல்ல அவனருகே சென்றாள். அவன் அவளைத் தாவி அணைத்து முத்தமிட்டான். எதற்கோ அவளைக் கட்டாயப்படுத்தினான். ஆனால் அவள் அவனை உதறித் தள்ளிவிட்டு 'அதெல்லாம் கல்யாணத்திற்குப் பிறகுதான்' என்று எழுந்து ஓடி பிச்சைக்காரிகள் பக்கத்தில் சென்று படுத்துக்கொண்டாள்.

கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை ராமு செய்ய ஆரம்பித்தான். அவன் குடைகள் தைப்பதற்கு கற்றுக்கொண்டான் அவனது கைகள் குணமாகி இருந்தன. கடினமான வேலைகள்மட்டுந்தான் செய்ய முடியாத நிலையில் இருந்தான்.

அவன் மீனுவுக்கும் குடைகள் தைக்கக் கற்றுக்கொடுத்தான். அவளை பிச்சை எடுக்க அனுப்புவதற்கு அவனுக்கு விருப்பமில்லை.

தினசரி வருமானம் இரண்டு ரூபாய்க்குக் குறையாது. எப்படியும் ஐம்பது பைசா மிச்சம் வைப்பது என்று தீர்மானித்துக்கொண்டனர். சிறிது சில்லறைகளும் சேர ஆரம்பித்தன. அவளுக்கு ஆறரை ரூபாயில் கட்டிச் சிவப்பு நிறத்தில் ஒரு ரேயான் சேலையும், மஞ்சள் நிறத்தில் ஒரு ஜம்பரும் எடுத்தான். மொழு மொழுவென்றிருக்கும் கருத்த அவளது உடலுக்கு அந்த ரேயான் சேலை எவ்வளவு எடுப்பாக இருக்கிறது. அவனுக்கும் ஒரு சாரமும் சட்டையும் எடுத்துகொண்டான்.

திருமண நாளும் நெருங்கிவிட்டது அந்த ஆலமரத்தடியில் மேள தாளங்கள் ஏதுமின்றி பிச்சைக்காரிகள் சூழ்ந்து நின்று குரவையிட, ஒரு நாள் காலை அவன் அவள் கழுத்தில் மஞ்சள் கயிற்றைக் கட்டினான்.

அந்தி சருங்கும் வேளை. இருவரும் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். அவன் அவள் முகத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான்: அவள் முகத்தில் ஒரு புதிய அழகு ஜொலித்தது. அவள் அணிந்திருந்த சிவப்பு நிற ரேயான் சேலையும், மஞ்சள்நிற ஜம்பரும் அவள் கருத்த உடலுக்கு அழகு சேர்த்து அவன் கண் வழியே போதையை ஊட்டிற்று. எண்ணெய் தேய்த்து பின்னுவதற்காக கலைத்து விடப்பட்டிருந்த தலைமுடி, அவள் நெற்றியில் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தது. இடது கையால் இடை இடையே முடியை ஒதுக்கி விட்டுக்கொண்டே ஓரக் கண்ணால் அவனைப் பார்த்து புன்சிரிப்பை உதிர்த்துக்கொண்டிருந்தாள்.

'மீனு! உன்னைப் பார்க்கும்போது எனக்கு எப்படியோ வருகிறது'

அவள் வெட்கத்தால் தலை குனிந்தாள். கையில் உருட்டிக்கொண்டிருந்த ஒரு உருண்டை சோற்றை அவன் கையில் கொடுத்தாள். ஒரு புன்சிரிப்பு—அதிலே ஓர் அன்பு! தாகம்! உணர்ச்சி! ஏக்கம்! எல்லாம் பளிச்செனத் தெரிந்தது.

அன்று அவர்களுக்கு முதலிரவு. அன்றும் அவள் என்றும்போல் பிச்சைக்காரிகள் பக்கத்தில் சென்று படுக்கச் சென்றாள். வேறு என்ன செய்ய முடியும்? தனிமையில் இருவரும் இருக்க வேறு இடமும் இல்லை. நாசமாய்போனத் தெரு விளக்குகள் இரவை பகலாக்கி எரிந்து கொண்டிருக்கிறது! அடங்காத ஆசையினால் இருவர் மனமும் தத்தளித்துக் கொண்டிருந்தன. ஆள் நடமாட்டம் ஓயவில்லை. ரோட்டில் வாகனங்கள் போய்க்கொண்டிருந்தன.

அவர்கள் உறங்காமல் அங்குமிங்கும் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தனர். இருவர் முகங்களும் நிராசையினாலும், ஏமாற்றத்தினாலும், ஏக்கத்தினாலும் வெளிறிப் போயிருந்தன. இத்தனை நாளும் ஏக்கத்தோடு எதிர்பார்த்துக் காத்திருந்த முதலிரவு—பயனற்ற முறையில் பயணம் செய்கிறது—அவர்களிருவரையும் பரிதவிக்க விட்டு விட்டு.

உள்ளத்தில் ஆசைகள் அலைமோதுகின்றன. அடக்க முடியாத ஆசை,

உணர்ச்சிப் பிரவாகமாய் பெருக்கெடுத்து உடைப்பது போன்ற பிரமை. எத்தனை நேரம் காத்திருக்கமுடியும்? அவனால் அடக்க முடியவில்லை.

ரோட்டின் தெற்குப் பக்கம் சிறிது தூரத்தில் ஒரு சிறு வேலியில் ஒரு உயர்ந்த கள்ளிச்செடி. அதன் மேல் குடை விரித்தாற்போல கோவைக் கொடிப் படர்ந்திருந்தது. ஆதலால் அந்த இடம் கொஞ்சம் இருட்டாக இருந்தது. பகல் நேரங்களில் ரோட்டில் வருவோருக்கு சிறுநீர் கழிப்பதற்குரிய மறைவிடமாகவும் அந்த இடம் பயன்படுவதுண்டு. அந்த இடம் அவன் நினைவிற்கு வரவே, அவளை அங்கே அழைத்துச் சென்றான்.

இருவரும் அங்கே சென்று அதனடியில் அமர்ந்தனர். லேசாக மூத்திர நெடியிருந்தாலும் அதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. ஆசை வெறியில் அது அவ்வளவாகத் தெரியவில்லை. அங்கு உடைந்துகிடந்த கண்ணாடித்துண்டுகளையும், சிதறிக் கிடந்த சல்லிகளையும் எடுத்து எறிந்துவிட்டு, பெருக்கி சுத்தம் செய்தனர்.

அவளுடைய பழையக் கந்தல் சேலையை கையில் சுருட்டிக்கொண்டு வந்திருந்தாள். அதைத் தரையில் விரித்தாள். கையால் விரிப்பைத் தடவிப் பார்த்தாள். சிறு கற்கள் இடை இடையே தட்டுப்பட்டன. பரவாயில்லை. சிறிது நேரத்திற்குத் தானே.

உடலெல்லாம் கதகதவெனச் சூடேறிக்கொண்டிருந்தது. நரம்புகள் விறைத்துத் தெறித்துவிடுவது போன்று அவனுக்குத் தோன்றியது. ஆவேசம், ஆனந்தம் நிமிடந்தோறும் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. நெற்றியில் முத்துமுத்தாய் வியர்வை கொட்ட மெல்ல அவளை நெருங்கினான்............

அப்போது அங்கே வந்து நின்றது போலீஸ் வேன். இரண்டு மூன்று போலீசார் அதிலிருந்து இறங்கி அவளருகே சென்றனர். அதில் ஒருவனை அவள் பார்த்திருக்கிறாள். சில வேளைகளில் —பகல் நேரங்களில் அவளைப் பார்த்து நாய்மாதிரி பல்லிளித்திருக்கிறான்.

'டேய் ராஸ்கல்—விபச்சாரம் பண்ண நல்ல இடம் கிடைச்சிருக்கு இல்லையா? ஏறடா வேன்ல...!'

அவன் ஏதோ சொல்வதற்கு வாயைத் திறந்தான். அதற்குள் பக்கத்தில் நின்ற ஒரு போலீஸ்காரன் அவன் பிடரியில் ஓங்கி ஒரு அறை கொடுத்தான். இன்னொருவன் பயந்து நடுங்கி நின்ற மீனாவின் மார்பை...! 'வேன்' புறப்பட்டது.

போலீஸ் ஸ்டேஷன்........இல்லை இல்லை. காவல் நிலையம்—யாருக்கு காவல்? எதற்கு காவல்?

ராமுவை ஒரு அறையிலும், அவளை இன்னொரு அறையிலும் அடைத்தனர்.

ராமுவின் முகம் நிராசையினால் கறுத்து கண்கள் கலங்கி இருந்தன.

கொஞ்ச நேரத்தில் ஜெயில் வராந்தாவில் ஆட்கள் நடமாடும் சப்தம் கேட்டது. கம்பிகளினூடே பார்த்தான். இரண்டு போலீஸ்காரர்கள்—அவர்களைப் பிடித்துக் கொண்டுவந்த அதே தடி மாடுகள்.

மீனா அடைக்கப்பட்டிருந்த அறையின் பக்கமாக அவர்கள் செல்வது தெரிந்தது.

ஜெயில் காம்பவுண்டுக்குள் நிற்கும் புளியமர மூட்டில் எப்படி எப்படியோ சப்தங்கள் கேட்கின்றன. கழுகுகள் பாய்ந்து பாய்ந்து ஒரு புறாவைக் கொத்துகின்றன. வெறி பிடித்த அவைகள் புறாவின் மாமிசத்தைக் கொத்தி கொத்தி பங்கு போடுகின்றன. வேதனை சகிக்க முடியாமல் புறா சிறகைப்போட்டு அடிக்கின்றது. பிடி கிடைக்காமல் கழுகுகள் புறாவோடு சண்டையிடுகின்றன.

பிடி கிடைத்துவிட்டது போலிருக்கிறது. புறா கிடந்து துடிக்கின்றது. வேதனை தாங்க முடியாமல் உயிரோடு போராடிய அந்த ஏழையின் அலறல் சப்தம் சிறிது நேரத்தில் முனகலாக மாறியது. அது வரை தான் அவனுக்குத் தெரியும்.

அவன் ஜெயில் கம்பியை இறுகப் பிடித்துக்கொண்டு கர்ஜித்தான். ஆவேசத்தோடு அலறினான்.

''பாவிகளே! சண்டாளர்களே! என்னுடைய மீனாவைத் தொடாதீர்கள்!''

★

# புரட்சிப் பொன்னாள்!

—கருவை வேதாந்தி—

உதிரமதை மூலதன மாகக் கொண்டு
    உயிரதனை முன்பணமாகக் கட்டி
அடிமை நிலை சாய்க்கப் போராடு கின்ற
    மாவீரரசம் தொழிலாளர் தோழர் குழாம்
சதியதனை முறியடித்துச் சாவை வென்ற
    சத்தியத்தை வெற்றிகொள் வீறு கொண்ட
புதியதோ ருலகுகாணப் போர றைந்த
    புதுமையிலே விடிந்தொளிர் ''மே'' புரட்சிப் பொன்னாள்!

வர்க்கபேத மற்றசமு தாயம் காண
    வகைதொகை யாகப்பல்லோர் வந்த பின்நாள்
தர்க்கமது பேசிப்பலர் தனியு டைமை
    தகைவுடைமை யென்றுகூறித் திரிப வர்க்கே
சொர்க்கமென்று மில்லையெங்கும் உழைப்புதி தானே
    சொல்லிவைத்த தெய்வமப்பா உணர்நீ யென்று
தர்க்கம்பல பேசிவெற்றிக் கொடிமை நாட்டும்
    செம்மையில் சிறந்தொளிர் ''மே'' புரட்சிப் பொன்னாள்!

(வேறு) அறுசீர்

உழைத்தோனின் குருதியினை உருகியேபார்க்கும்
    உழைக்காத பணமுதலைக் கொடியநாகம்
பிழைத்துவிட, பாட்டாளி யின்வறுமைப்
    பிணிதீர்க்க மறுத்துவிட்ட கொடுமைகண்டு,
இழைக்கின்ற கொடுமைக்குப் புள்ளிவைக்க
    இரத்தத்திற் றோய்த்தசெந் துணியினிலே
அழைக்கின்ற செங்கொடியி னழகினிலே
    அணியாய்த் திரண்டார் ''மே'' புரட்சிப்பொன்னாள்.

# 'தர்மத்தின் கரங்கள்!'

— ஆர். ஆர். எஸ்.

முருகேசம்பிள்ளை ஒரு ரிடையர்டு ஆசிரியர். அவருக்கு செகரட்டரி போர்டில் நல்ல 'வாய்ஸ்'ஸாம். தேர்வு எழுதிவிட்டு அவ நம்பிக்கையோடு சுற்றிக்கொண்டிருப்பவர்களுக்கும், பணம் கொடுத்தே சர்டிபிகேட் வாங்கிவிடலாம்......சும்மா தேர்வில் உட்கார்ந்து எழுந்தால் போதும் என்ற வியாபாரத் தன எண்ணங்கொண்ட அறிவு மழுங்கிய மூளைகளுக்கும் அவர்தான் புரோக்கர் வேலை செய்து வருகிறாராம்.

இதுதான் எங்கள் அலுவலகத்துக்கு அவரைப் பற்றி வந்திருந்த தகவல்கள்.

அவரை எப்படியும் சட்டத்தின் பிடிக்குள் சிக்கவைத்து காவலுக்கு உட்படுத்த வேண்டும் என்பது எனக்கு இடப்பட்ட கட்டளை.

மேலதிகாரியிடமிருந்து பெற்ற ரூபாய் நோட்டுக்களின் எண்களை எனது டைரியிலும் ஒரு முறை குறித்துக் கொண்டு, சாதாரண வேட்டி, சட்டை அணிந்து, பணத்தை மடியில் பத்திரப்படுத்தி, குறிப்பிட்ட கிராமத்தை நோக்கிப் புறப்பட்டேன்.

வெய்யில் நேரம். ஊர் எல்லையில் உயர்ந்து நின்று, உச்சி வெய்யிலில் பளபளத்த புராதன காலத்து அசோக ஸ்தூபி எல்லாவற்றும் மேலாக தலை நீட்டி கம்பீரமாக வரவேற்பது போலிருந்தது. சத்தியத்தை நிலைநாட்டப்போகும் பெருமிதத்துடனேயே ஊருக்குள் நுழைந்தேன் வீட்டை விசாரித்துக் கொண்டு நெருங்கினேன்.

குறைந்தபட்சம் ஒரு சுமாரான மச்சு வீட்டையாவது கற்பனை செய்துகொண்டு போனேன்; எனக்கு ஏமாற்றம்தான்......!

வீடு கூரைவீடு. குடிசை என்று சொன்னால் பொருத்தம். கறுத்து மக்கிப்போன விழல்கள் கூளம் கூளமாக சரிந்துகிடந்தன. சுவர்களும் புரைசலோடி மழை ஒழுக்கால் கரைந்து போயிருந்தன. வீட்டுத் திண்ணையில் நாலைந்து பேர். எல்லாம் அதற்காக வந்தவர்களாயிருப்பார்கள். எல்லோரும் வாலிபர்கள். ஏறக்குறைய என் வயதையொத்தவர்கள். கிழிந்துபோன கோரைப் பாயில் சப்பளமிட்டு அமர்ந்திருந்தார்கள். எதிர்த்திண்ணையில் இருப்பவர்தான் முருகேசம் பிள்ளையாக இருக்கவேண்டும்.

குண்டு பூசணிக்காயைப் போன்ற கொஞ்சம் பருமனான முதிய தோற்றம்; உருட்டு மண்டையில் ஒட்டி வளர்ந்து கவிந்திருக்கும் மொசு மொசுப்பான வெண் மயிர்கள்; அகன்ற நெற்றியில் சிவப்புக் கோடிட்ட ஒற்றை நாமம்: நைந்து போன அரைக்கைச் சட்டை, வேட்டி. பை ஜேபி பளு தாளாமல் கனத்துத் தொங்கியது.

உற்சாகமாக எதைப்பற்றியோ பேசிக்கொண்டிருந்தவர் என்னைப் பார்த்ததும் ''வாங்க......வாங்க... உட்காருங்க. நீங்க யாருன்னு எனக்குத் தெரியாது. இருந்தாலும் பரவாயில்ல; உட்காருங்க. என்னைத்தேடி யார் வரப்போறாங்க'' என்று வரவேற்புக் கொடுத்துவிட்டு மறுபடியும் தொடர்ந்து பேச ஆரம்பித்தார். நான் வியப்போடு அமர்ந்தேன்.

''என்ன, இந்தக் காலத்துப் பசங்க பாடமா படிக்குது? எதுனா சொன்னா ஒஹ்ஹொஹ்ஹோன்னு சிரிச்சி படபடன்னு டெஸ்கைத் தட்டிட்டுப் பூடுதுங்க. படிப்பா...அக்கரையா... அதுல ஒரு கவனம் இருந்தாத்தானே! என் சர்வீஸூ மொத்தம் நாப்பது வருஷம் ஏழுமாசம் இருபத்திரெண்டு நாளு. இதுல எவ்வளவோ பார்த்திருப்பேன். ஆனா இந்தக்காலத்துப் பசங்களாட்டம் எங்கியும் பார்த்ததில்ல. பி. ஏ. ன்றான், பி. எஸ். ஸின்றான். ஒரு மணியார்டர் பாரம் பூர்த்தி பண்ணுடான்னா......தெரியாது. என்ன படிப்போ......! அந்தக் காலத்துல மணலைக்கொட்டி வெரல் தேய எழுதறது. அட்சரம் படிஞ்சாதான் அப்புறம் படிப்பு. இப்ப என்னடான்னா எடுத்ததுமே படம், பட்டம், வடம், வட்டம், விட்டம்னு... எழுத்து தெரியாத படிப்பு. தோ பாரேன் நாங்க எழுதி எழுதி வெரல் தேஞ்சதெ. இன்னுங்கூட அப்படியே யிருக்கு'' அவர் தன் ஆள்காட்டி விரலைக்காட்டி சற்று பேச்சை நிறுத்தினார்.

அவரைப் பார்த்ததிலிருந்து நெஞ்சுக்குள் ஏதோ ஒரு நெருடல் ஆனால் அது என்னவென்று புரியவில்லை. அவரையே உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தேன். அவர் பேசிக்கொண்டேயிருந்தார். இடையிடையே கூட இருந்தவர்கள் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

''எம் பையனையே எடுத்துக்கோயேன். ஏழாம்போல இருக்கானே, ரெண்டாவது படிக்கிறான். புஸ்தகத்தை தெறந்து வச்சின்னு அவன் பாட்டுக்கு ''இரு குருவிகள் ஒரு மரத்தில் கூடுகட்டி வாழ்ந்தன. ஒரு நாள் திடீரென்று வானம் இருண்டது. மழை பெய்தது........ன்னு படிச்சிக்னே போவான். நிறுத்தி எழுத்து கூட்றான்னா எங்க வாத்தியார் அப்பிடி சொல்லித்தரலேன்றான். குருட்டுப் பாடம். எப்படியோ எங்க நாளெல்லாம் ஓடிப்போச்சி. நீங்கல்லாம்தான் எப்பிடி பொழைக்கப்போறீங்களோ......! ஆரம்பத்துல......எப்போ......; நைண்டீன் தர்டி சவன்லே சொல்றேன். அப்போ ஒரு மேனேஜ்மெண்டுல வேலை செய்துக்னு இருந்தேன். அப்ப ஒரு வாத்தியார் எந்நேரமும் தூங்குவான். ஹெட்மாஸ்டர்கிட்டபோயி, ''ஏன்யா அவரு தூங்கறாரே நீ கேக்கக் கூடாதான்னா; என்னா சார் செய்யது. உள்ளூர்க்காரரு, மேனேஜருக்கு வேண்டியவரு எதுனா கேட்டா வழில மடக்கிக்னு அடிப்பான். யார் ஒழுவாங்கறது...... அப்பிடன்னு பொலம்புவான். அப்பவே அப்பிடி. இப்ப சொல்லவே வேணும்......''

அவர் தொடர்ந்து பேசிக்கொண்டேயிருந்தார். முகத்தில் அரும்பி நின்ற வியர்வைத் துளிகளைத் துடைக்கும்போது, அந்த ஒற்றை

நாமம் கலையாமல் பவ்யமாக துடைத்துக்கொண்டார். இதை......

மனத்திலே ஒரு நமநமப்பு......! இதை எங்கேயோ எப்போதோ பார்த்த மாதிரி......

"அப்ப டிஸ்ட்ரிக் போர்டு இருந்தபோது எவ்வளவோ தேவலாம். இந்தப் பஞ்சாயத்து யூனியன் வந்ததிலேருந்து ரொம்பக் கெட்டுப் போச்சி. தலைக்குத் தலை பெருதனமாப்போச்சி. தெறந்த வீட்ல நாய் நுழையறு மாதிரி எவனெவனோ நுழையறான். பள்ளிக்கூடமா ஒரு காரணமா.........அந்தக் காலத்துல அலிபாபா நாற்பது திருடன்னு இருந்தானுங்க. இங்க நாப்பது திருடனுங்க இல்லே. நாப்பத்திரெண்டு திருடனுங்க இருக்காங்க. ஒரு நாளு எண்ணிப் பார்த்துட்டேன். கமிஷனர்தான் அலிபாபா! அலிபாபா கதவாவது 'அண்டாக்கா கசம்'னு தெறக்கும். இவனுங்ககிட்ட எதுவும் நடக்காது. சில்லரையை காட்டணும் அப்பத்தான் வாயெத் தெறப்பானுங்க. வரவர வாத்தியார் பொழப்புக் கேவலமாப் போச்சி..."

எல்லோரும் சிரித்தார்கள். அவர் தொடர்ந்து பேசிக்கொண்டேயிருந்தார். பழமைக்கும் புதுமைக்கும் ஜவைக்கோலிட்டு அளந்து அவருக்கே உரிய தனிப்பாணியோடு ரசனை ததும்ப பேசிக்கொண்டிருந்தார்.

நான் நெற்றியை நெருக்கிக் கொண்டு அவரையே கவனித்துக் கொண்டிருந்தேன்.

அடிக்கடி துண்டால் முகத்தை துடைத்துக்கொண்டார். நாமம் கலையாமல் நாசுக்காக ஒற்றி எடுக்கும் துடைப்பு.

எனக்கு எதுவும் சரியாக பிடிபடவில்லை; இதை......இதே மாதிரி... எங்கேயோ......அவர் துண்டால் முகத்தைத் துடைக்கும்போது நினைவுகள் அதை நெருங்கி எட்டுவதுபோல் தோன்றுகிறது. அப்புறம் நழுவிப்போய் விடுகிறது. பிடிவிட்டு தொடர்ச்சி யறுந்துபோய்விடுகிறது. மீண்டும் துடைக்க மாட்டாரா என்று பார்த்துக்கொண்டிருந்தேன்.

"பேசாம எல்லா ஸ்கூலையும் ஒரே நிர்வாகத்தில வச்சுடலாம். அதை செய்ய மாட்டானுங்களே.......... முனிசிபாலிடி, கார்பரேஷன், வெல்ஃபேர், கவர்மெண்டு, மேனேஜ்மெண்டு, பத்தாத்துக்கு பஞ்சாயத்து யூனியன்........கடைசி மூணு வருஷம் இந்த யூனியன்ல நான் வேலை செஞ்சது இருக்குதே.........

அடா! அதுதான் என்னுடைய நாப்பது வருஷ சர்வீஸுல......

அவர் பேசிக்கொண்டேயிருந்தார்.

சிறங்குக் காலுடன் தண்ணீரில் இறங்கினால் மீன்கள் வந்து களுகளுவென்று அழுக்கைப் பிறுண்டுமே... அந்த மாதிரி ஒரு அரிப்பு......புதையுண்டு கிடக்கும் பழைய நினைவுகளை கிளறிப் பார்க்கும்போது, அதன் தொடர்ச்சியில் ஏதோ ஒன்று நழுவி நெஞ்சின் அடியிலேயே மறைந்து நிற்குமே......அப்படி. இன்னமும் அது என் நினைவுக்கு வராமலேயிருக்கிறது.

அவர் என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தார். அடிக்கடி தன் சர்வீஸைப் பற்றி பெருமையாக பேசிக்கொண்டார். நாகரீக காலத்து சங்கடங்களை நகைச்சுவையாக வர்ணித்து சிரித்துக்கொண்டிருந்தார். பேச்சு எங்கெங்கேயோ சுழன்று கடைசியில் பஞ்சப் புராணத்தை நெருங்கியது.

"ஏன் சார் வீட்டைப் பிரிச்சு கட்றதுதானே. வர்ரது மழை நாளாச்சே."

"கட்ட வேண்டியதுதான். பணம் வேணுமா, மெட்ராஸுல இருக்கறவனுங்க. ஜகதலப் பிரதாபனுங்க. நான் என்னமோ உங்ககிட்ட வாங்கி அவன் கிட்ட கொடுக்கறதுல பெரிசா கமிஷன் அடிச்சிடறு மாதிரி.........கடைசியில ஒண்ணுமில்லை......ரூபா ஒம்பதுதான். என்ன வர்ரது வயித்துக்கே சரியாயிருக்குது. வெகுசா தூக்கிக் குடுக்கறானுங்களே பென்ஷன். என்னமோ வாழ்க்கை. அதுல வேற இந்த வருஷங் காய்ச்சல். படி அரிசி ரெண்டு எண்பது விக்குது."

"எங்கினுதுகூடம் நாத்து உட்டு காயுதுசார்"

"எங்க சின்ன குழந்தைங்க கிட்டேயே பால் வேற்றுமை வந்தாச்சு! அப்புறம் எங்க மழை பெய்யும்?" என்று ஜேபியிலிருந்து பொடி மட்டையை எடுத்து சிட்டிகைப் பொடியை சர்ரென்று உறிஞ்சி "அப்பாடா" என்று ஒரு தும்மல் போட்டார்.

என் உடம்பு சிலிர்த்து அடங்கியது! எலும்புக் குறுத்தெல்லாம் உக்கிரமான பாய்ச்சல்! ரத்த ஓட்டமே நின்று இறுகி உறைந்தாற் போல......எங்கேயோ என்ன......? மருதூரில்தான்......!

அப்போது நான் மூன்றாவது படித்துக்கொண்டிருந்தேன். சோலைவாழி அம்மன் கோயில் மண்டபத்தில் பள்ளிக்கூடம். ஒரு உச்சிக் குடுமி வாத்தியார்.........பெயர் சரியாக நினைவில்லை. இதே நாமம்; உருண்டைத் தலை; ஆனால் அப்போது ஜிட்டு. அசங்கி அசங்கி நடந்துவரும் போது 'வண்டு உருண்டு வருதுடா' என்று கிண்டல் பேசி கெக்கக்கே கொட்டுவோமே......அவரா இந்த முருகேசம் பிள்ளை. கால மாறுதல்

# மே தினம் வாழ்க!

—உறந்தை செம்பியன்

மேதினி சிறக்க வந்த திருநாள்
மேதினம் என்றே மேவிய நந்நாள்!
ஏதினி வாழ்வென் றேங்கிடும் ஏழையர்
ஏற்றம் கண்டிட வந்த திருநாள்!

மாடாய் உழைத்தே ஓடாய்த் தேய்ந்தவர்
வாழ்வு மலர வழிகண் டிடும் நாள்!
காடாய் தரிசாய் கிடந்த நிலங்களைக்
கழனியாய் ஆக்கியோர் வாழ்வின் பொன்னுள்!

சுத்தியு(ம்)அ ரிவாளும் சேர்ந்திவ் வுலகைத்
தூக்கிட முயன்றிடும் திருநாள்!
எத்திக்கும் சிவப்பாய் இயற்றிட வந்திடும்
இம் "மே" நன்னுள் வாழ்க! வாழ்கவே!

களுக்கேற்ப குடுமி அவரை விட்டுப் பிரிந்துவிட்டனா!

காலங்கள் மாறனாம். அந்த ரூபம்; சிரிக்கச் சிரிக்கச் சிரிக்க கதை சொல்லும் பாணி. அந்த முகத்தைத் துடைத்துக் கொள்ளும்போது ஒற்றை நாமத்தைக் காப்பாற்றும் ரவினம் இதெல்லாம் மாறி விடுமா......!

நெஞ்சுக்குள் ஒரு பாரம்-கனமான பாரம்.

'அவங்கவளுக்கு என்னென்ன பொம்மை போடத் தெரியுமோ அதெல்லாம் போட்டுக்கொண்டு வாங்க' என்றார் அவர். எல்லோரும் படம்போட்டு காட்டி மார்க் வாங்கிக்கொண்டு வந்தோம். படம் போட்டு முடிந்து வீட்டுப்பாடம் இங்கேயே எழுதி வைத்துவிடலாம் என்று பென்சிலைப் பார்த்தால்...... திக்கென்றது. பென்சிலைக் காணவில்லை. புது பென்சில். அன்றைக்கித்தான் அப்பா வாங்கிக் கொடுத்தார். சட்டைப்பை, கால் சட்டைப் பை, புத்தகப் பை எங்கெங்கெல்லாமோ தடவித் தேடிப்பார்த்து விட்டு உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டேன். இவர்தான் ஆசிரியர். 'ஏண்டா அழறே?' என்றார்.

'பென்சில் சார், புதுசு சார், அப்பா சார், காணோம் சார், அடிப்பார் சார்'' நான் தேம்பினேன். அவர் மானிட்டரைக் கூப்பிட்டு, யாராவது சேகர் பென்சில பார்த்திங்களான்னு' கேட்டார். அக்கறையோடு படம் வரைவதில் ஆழ்ந்திருந்தவர்களில் சிலர் தலையை நிமிர்த்தி 'இல்லே சார் பார்க்லே சார்' என்றார்கள். அவர் 'ஒவ்வொரு பையா சோதனை போட்டுப் பாருடா' என்றார். கடைசியில் அது சுப்ரமணி பையில் கிடந்தது.

அவ்வளவுதான். குனிந்துகொண்டு படம் வரைந்திருந்த சுப்ரமணியை அவர் ஆவேசமாக பிடித்து இழுத்தார். அவருக்கு ஏற்கனவே என்ன கோபமோ, கொஞ்சங்கூட யோசிக்காமல் 'திருடுவியா...திருடுவியா... இனிமே திருடுவியா...என்று பிரப்பங்குச்சால் வளைய வளைய வாங்கி விட்டார். பாவம் மணி! ஓ என்று அழுதான். இல்லே சார்...... இல்லே சார்......என்று அடி தாங்காமல் வளைந்து நெளிந்து புட்டத்தைத் தடவித் தடவி அழுதான். நான் தான் சார் எழுதறதுக்குக் கேட்டேன். அவன்தான் சார் கொடுத்தவன். நெனப்பு இல்லாமெ பையிலேயே போட்டுக்னேன் சார்' என்று சொன்னான்.

எனக்கு சரீர் என்று உரைத்தது அவன் கேட்டதும் நான் கொடுத்ததும் ஞாபகத்துக்கு வந்தன. இப்போது சொன்னால் அந்தக் கோபத்தில் எனக்கும் ஏதாவது விழுமே என்று பயம்.

மணி என்னிடம் வந்து தேம்பியபடியே 'நீ தானடா கொடுத்தே. அசோகர் பாடம் படிச்சிக்னு இருந்தியே......அப்ப குடுக்கலே...' என்று தன் நேர்மையை நிலைநாட்டும் பாவனையில், அநியாயமாகத் தான் பட்ட அடிகளின் வலி தாங்காத நிலையில் பொங்கி வரும் அழுகையில் நீர் வழியும் கண்களுடன் கேட்டான்.

என்னால் எதுவும் சொல்ல முடியவில்லை. என் அவசரத்தனத்துக்காக பயந்துபோனேன். அவனைப் பார்க்கும் போதெல்லாம் இளகிப்போய் விடுவேன். பிறகு அந்தப் பென்சிலை அவனுக்கே கொடுத்துவிட்டேன்.

இது எப்போதோ நடந்தது-கருத்துத் தெரியாத வயதில். இப்போது நினைத்துப் பார்க்கும்போது......... தொண்டை அடைத்தது அழுகை வரும்போலிருந்தது. பரிதாபத்தோடு கலக்கமடைந்த கண்களால் அவரைப் பார்த்தேன்.

அவர் உற்சாகமாகவே பேசிக் கொண்டிருந்தார். அவ்வப்போது உட்கார்ந்திருந்த வாலிபர்கள் சிரித்துக்கொண்டிருந்தார்கள். சுவாரஸ்யமாக ரசித்துக்கொண்டிருந்தார்கள். நான் வேதனையோடு அமர்ந்திருந்தேன்.

அவரைத்தான் காவலுக்கு உட்படுத்த வேண்டும்! வெளியே வெயில் கொடுமையாகத் தகித்தது. வீட்டெதிரே சாணம் தெளித்து கோலம் போட்டிருந்தார்கள். காலையில் போட்ட கோலம் கலைந்து மங்கிக் கிடந்தது. நடுவில் சாணத்துள் செருகியிருந்த பூசணிப்பூ வாடித் துவண்டு வரண்ட சாணத்தின் மேலேயே சோர்ப்பிப்படுத்திருந்தது.

வீட்டுக்குள்ளிருந்து ஒரு சின்னக் குழந்தை வெளிவந்தது. தெருவில் 'பூம்......பூம்' என்று பாம்பு மிட்டாய் விற்றுக்கொண்டு போனான். 'அப்பா மித்தாய்ப்பா'

அவர் பேச்சு சுவாரஸ்யத்திலேயே பாக்கெட்டைத் தடவினார் சில்லரை எதுவும் தட்டுப்படவில்லை.

'நான் வாங்கித் தர்றேன் சார்...' என்று ஒருவன் சில்லரை எடுத்துக் கொடுத்தான்.

# புரட்சி வேண்டும்!

—ச. மாதவன்—

வெடிமருந்துச் சாலையிலே நெருப்புப் பற்றி
வெடிக்கின்ற காட்சியதாய் இந்த நாட்டில்
இடிமுழக்கப் பேரொலியாய் ஏழ்மை சீறி
எழுகின்ற புரட்சியொன்று வெடித்தல் வேண்டும்!

புரியாத பகிர் போட்டுக் காலம் தன்னும்
புளிச்சேப்பக் கூட்டத்தின் கொடுமை தன்னை
எரிமலையின் கனல்பற்றி எரித்தல் போலே
இந்நாட்டில் புரட்சியொன்று வெடித்தல் வேண்டும்!

வயல்வெளியில் ஆலைகளில் உழைத்து ழைத்தும்
வறுமையையே துணையாகக் கண்டு வாழ்வோர்
துயர்நீங்கப் புரட்சியொன்று வெடித்தல் வேண்டும்!
துணிவான முன் முயற்சியவர் கொள்ளல் வேண்டும்!

பாலின்றி அழுகின்ற குழந்தைக் காகப்
பாதுகாப் பளிக்காத சமுதாயத்தை
வேலியிட்டு வளைத்தோன் ஆட்சி செய்யும்
வீணர்கள் அறுகின்ற புரட்சி வேண்டும்!!

கொந்தளிக்கும் கடலெனவே மக்கள் கூட்டம்
குமுறியெழுந் தார்ப்பரித்துக் கிளம்ப வேண்டும்
அந் நாள்தான் புரட்சிகரப் பொன்னா ளாகும்
அந்நாளை உருவாக்க வாடா தோழா!!

நான் வீட்டை நோட்டமிட்டேன். உள்ளே சோகம் வியாபித்துக் கிடந்தது. திண்ணையோரத்து ஜன்னல் பக்கம் ஏக்கம் தவழும் இரு கருவிழிகள் தெரிந்தன. பாவம் வயதுக்கு வந்து எத்தனை வருஷம் ஆகிறதோ......!

அதற்குள் ஒரு மிட்டாய்ச் சண்டை...உள்ளிருந்து சின்னக் குழந்தையைத் தொடர்ந்து 'அப்பா...அப்பா எனக்கப்பா' என்று சில ஓடி வந்தன. 'சும்மா இருக்கனும் தம்பிக்கு மட்டுந்தான்' என்று உள்ளேயிருந்து ஒரு அதட்டல்.

"அப்போ நாங்க வர்ரோம் சார். நீங்க எப்ப மெட்ராஸ் போறீங்க" என்றான் ஒருவன்.

"புதன்கிழமை போறேன். நீங்க அதுக்குப் பிற்பாடு வந்து பாருங்க"

எல்லோரும் எழுந்து சென்றார்கள்.

குழம்பிய உள்ளத்துடன் ஏதும் புரியாத தடுமாற்றத்துடனுமிருந்த நான் மெள்ள எழுந்தேன் புறப்பட.

"வந்ததுலேருந்து பேசாம இருக்கீங்க. உங்களது என்ன விஷயம். டி. எஸ். எல் சியா?......எஸ் எஸ். எல். ஸி. யா?........ பி. யூ. சி. யா?" என்று கேட்டார் பிள்ளை.

என்னை அவருக்குத் தெரியவில்லை. எப்படித் தெரியமுடியும். நான் எதற்காக வந்திருக்கிறேன் என்பது கூட அவருக்குத் தெரியாதே. அவரையும் எனக்குத் தெரியாமலே போயிருக்கக் கூடாதா.. ...

அவர் உண்மையிலேயே சட்டத்தின் பிடிக்குள் சிக்கவைக்கப்பட வேண்டிய ஒருவர்தானா...! அதைத் தீர்மானிக்க எனக்கு அருகதை இல்லை. சொன்னதைச் செய்யவேண்டிய ஊழியன்தானே நான். இந்த வேலை வேறு யாருக்காவது வந்து வாய்த்திருக்கக் கூடாதா......?

என் குருவை, நிர்த்தாட்சண்யமாக நசுக்கி வைத்து தலையெடுக்க வொட்டாமல் செய்யும் போராட்டம் மிக்க தற்போதைய சமூக அமைப்பில் தடுமாறிக்கொண்டிருக்கும் ஒருவரை, நாப்பது வருஷ சர்வீஸுக்கும் பிறகு நாதியற்றத்தனமாக அவரைவிட்டு வைத்து வேடிக்கை பார்க்கும் நிலைமையில் அவர்மேல் அனுதாபங்கொண்டு, அவரது நிலைமைக்காக அவரை விட்டுவிடுவதா......?

அப்படி விட்டுவிடுவதானால், கடமையுணர்வும் சட்டமும், ஒழுங்கும் என்னாவது......? அப்படியானால் அவரை கைதுசெய்ய ஏற்பாடு செய்துதானாக வேண்டுமா......?

கத்தையாக கள்ள நோட்டுக்களடிக்கும் கும்பலும், வியாபாரத்தின் பேரால் பகல் கொள்ளை அடிக்கும் தந்திரசாலிகளும், அந்தஸ்தை மூலதனமாக்கி லஞ்சப் புரட்டல், ஏமாற்றல், எத்துவேலைகள் செய்யும் சோம்பேறிக் கூட்டங்களும் சமூகத்தில் கௌரவப் போர்வையுடன் வாழும் போது......கேவலம் இந்த பிச்சைக்காரனைப் போன்ற ஆளை நோக்கி அது வாயைப் பிளக்கிறதே......;

அப்படியானால் இவர்மேல் இரக்கம் காட்டவே முடியாதா? இவரை விட்டுவிட முடியாதா? கைதுசெய்துதானாக வேண்டுமா? நான் யார் என்பதுகூட புரியாத வெள்ளை உள்ளத்துடன் எதிரே நிற்கும்வறுமையில் எடுத்துக்காட்டான இந்த பரிதாபத்துக்குகந்த உருவத்தையா...! பால்ய குருநாதரையா......!

நான் வேதனையால் வெந்து குழம்பிக்கொண்டிருந்தேன்.

'சட்டம்'—ஒரு கழுதை என்பது சரிதான். இடிபாடுகள் நிறைந்த குட்டிச்சுவர்ப் பக்கமும் குடிசைகள் பக்கமும்தானா அதற்கு மேய்ச்சல்...!

ஏதும் புரியாமல் குழம்பி நின்றேன். வரும்போது கம்பீரமாய் உயர்ந்து நின்ற ஸ்தூபி என்னைப் பார்த்து சிரிப்பதைப் போலிருந்தது.



# பாதி வயித்துக்கு காணல்லே!

பாண்டியன் மில்லுலவேலே
பாதரவு கேளு!

பஞ்சு, பஞ்சாப் பறக்குது
பந்து போல மேலே!

எடக்கு பண்ணுதே ரங்கு
இறையப் போகுது சங்கு

இன்னைக்கு வாங்குற கமிஷனிலே
எனக்கும் உனக்கும் பங்கு!

சட்டை சிவப்புக்குள்ளே
சாயா சீட்டு இல்லே!

சயிடு பாக்கும் பொம்பளப்புள்ளே
சாயா குடிக்க இல்லே!

அந்த இழையைக் கட்டுறியா;
எங்க சயிடு வாரியா;

அடுத்த மேஸ்திரி கண்டா;
எடுத்துக்குவாறு சூது!

நமக்கு சந்திப்பு இல்லே
நைட்பாக்கும் தொல்லே

நல்ல வெள்ளிக்கிழமை
நமக்கு சந்திப்பு உண்டு

வெளியிலிருக்கும் வாச்சுமேனிடம்
தூக்கு சட்டியைக் காட்டி!

வேக, வேகமாக
வீட்டுக்குப் போகணும் சூட்டா!

ஆறே முக்கா சங்கு
அடிக்குதடி கண்ணு

அயந்து மறந்து தூங்குன
ஆப்சண்டா ஆகணும்!

பிரளிப் பஞ்சை எடுக்கணும்
பேரு நம்பரைக் கொடுக்கணும்

உள்ளே போடு சீட்டை
உரக்கப் பாடு பாட்டை!

போன மாசம் சம்பள வாங்கி
பொட்டியில பூட்டல்லே!

இந்தமாச சம்பள வாங்கி
இடுப்பு சங்கிலி மாட்டல்லே!

பாண்டியன் மில்லுல வேலேங்கற
பவுசு மட்டும் மாறல்லே!

பகலு பூரா வேலே செஞ்சி
பாதி வயித்துக்கும் காணல்லே!

(முகவை மாவட்டம், இராஜபாளையம் வட்டாரத்தைச் சேர்ந்த ஒரு 'நாட்டுப் பாடல்')

உதவி: சுப்புலட்சுமி, பெ. சன்னாசி.
அனுப்பியது: கொ. ச. பலராமன்.

# முதலாளித்துவ நாடாளுமன்ற தத்துவமும் புரட்சிகர நாடாளுமன்ற நடவடிக்கையும்

[ இ. எம். எஸ். நம்பூதிரிபாத் ]

“முதலாளித்துவ நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்கு எதிராகப் போராடக்கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களில் ஒருவரான ஏ. கே. கோபாலன், ஐந்தாவது முறையும் ஏதற்காகத் தேர்தலில் நிற்கிறார்?” என்று கேரள வலது கம்யூனிஸ்ட் கட்சி கேள்வி எழுப்பியுள்ளது.

இந்தக் கேள்வியை ஒரு சாதாரண முதலாளித்துவக் கட்சியின் தலைவர் கேட்டிருந்தால் நாம் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டோம்.

முதலாளித்துவ நாடாளுமன்ற தத்துவத்துக்கும் புரட்சிகரமான நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்குமுள்ள வித்தியாசம் அவர்களுக்குத் தெரியாது. இந்த வித்தியாசத்தைத் தெரிந்துகொள்ளும் சிலர் முதலாளித்துவக் கட்சிகளில் இருந்தாலும் அவர்களும் மார்க்சிசம்—லெனினிசத்தைத் திருத்திக்கூறுவர். முதலாளித்துவ நாடாளுமன்ற அமைப்புக்கு எதிராகப் போராடுவதும், நாடாளுமன்ற நடவடிக்கைகளிலிருந்து ஒதுங்கி நிற்பதும் ஒன்றுதான் என்ற எண்ணத்தை வளர்க்கவே அவர்கள் முற்படுவர்.

ஆனால் தன்னை மார்க்சிஸ்ட்—லெனினிஸ்ட் கட்சி என்று கூறிக்கொள்ளும் ஒரு கட்சி, இதே வாதத்தினைத் திரும்பத் திரும்பக் கூறினால் அக்கட்சியைப் பற்றி நாம் என்ன கூறமுடியும்?

## லெனின் நடத்திய போராட்டம்

அவர்கள் மார்க்சிசம்—லெனினிசத்துக்குத் துரோகம் இழைத்திருக்கிறார்கள் என்றுதான் கூறமுடியும். ஏனென்றால், கவுட்ஸ்கியும் அவரைச் சேர்ந்தவர்களும் பிராச்சாரம்செய்த முதலாளித்துவ நாடாளுமன்ற கருத்துக்களுக்கு எதிராகக் கடுமையான கொள்கைப் போராட்டம் நடத்திய லெனினே நாடாளுமன்ற நடவடிக்கைகளிலிருந்து விலகிநின்ற அதிதீவிரவாதிகளுக்கு எதிராக கடுமையான கொள்கைப் போராட்டம் நடத்தியிருக்கிறார். இதைத் தெளிவுபடுத்துவதற்கு கேரள வலது கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்ட லெனின் நூல்கள் மூன்றாவது தொகுப்பில், 482 முதல் 493 வரையுள்ள பக்கங்களைத் திருப்பிப் பார்த்தால் போதும். அவற்றில் சில பாராக்களைப் பார்ப்போம்:

“மிகப்பெரும்பாலான தொழிலாளர்கள் இன்றைக்கு நாடாளுமன்ற ந[illegible]



இருக்கிறார்கள். அது மட்டுமல்ல, புரட்சிகர நடவடிக்கைகளை எதிர்ப்பவர்களாகவும் இருக்கிறார்கள். இந்த நிலையில் நாடாளுமன்ற முறை அரசியல் ரீதியில் காலத்துக்கொவ்வாததாக ஆகிவிடவில்லை. ஜெர்மனியில் இடதுசாரிகள் தங்களின் அடிப்படைக்கொள்கைகளை யதார்த்தத்துக்குப் புறம்பான முறையில் அமைத்துக்கொண்டார்கள் என்பது தெளிவு. புரட்சியாளர்களுக்கு பெரும் ஆபத்தை விளைவிக்கும் தவறு இது.',

“நம் வர்க்கத்துக்குக் காலம் கடந்துவிட்டது என்று நாம் கருதுவதை மக்களும் காலம் கடந்துவிட்டது என்று கருதவில்லை. இந்த நிலைமையை மறுபரிசீலனைசெய்ய முடியாதவர்களாக அதி தீவிரவாதிகள் இருக்கின்றனர். அடுத்தட்டிலுள்ள வர்க்க உணர்வு கொஞ்சமுமில்லாத மக்கள் நிலைக்கு இறங்கிப் போகக் கூடாது என்பது சரியே. ஆனால்,

முதலாளித்துவ நாடாளுமன்ற ஜனநாயகத்தைப் பற்றி மக்கள் புரிந்திருப்பது தவறான கருத்துக்கள் என்று நாம் அவர்களுக்கு விளக்கவேண்டும். ஆனால் அதே நேரத்தில் வர்க்கம் முழுமைக்கும் (கம்யூனிஸ்ட் கட்சியின் முன்னணிப் பிரிவுக்கும் மட்டுமல்ல) உழைக்கும் மக்கள் அனைவருக்கும் (முன்னணி பிரிவினருக்குமட்டுமல்ல) வர்க்கபோதமும் தியாகஉணர்வும் உண்மையில் எந்த அளவுக்கு இருக்கிறது என்பதைத் திறமையோடு புரிந்துகொள்ளவும் வேண்டும்”

“உள்நாட்டில் வாழும் பாமரர்களையும் சுரண்டப்படக்கூடியவர்களையும் தட்டி எழுப்பி முன்னணிக்குக் கொண்டு வருவதற்காகவே தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகரக் கட்சி நாடாளுமன்றத் தேர்தலில் பங்கு கொள்ளவேண்டும். நாடாளுமன்றத்துக்குள் சென்று போராடவும் வேண்டும். முதலாளித்துவ நாடாளுமன்றத்தையும் அதைப் போன்ற பிற்போக்கு அமைப்புகளையும் உடைத்தெறிய முடியாமலிருக்கும் காலம்வரை, நீங்கள் அதற்குள் செயல்படவேண்டும். ஏனென்றால், பிரமைகளில் சிக்கியிருக்கும் தொழிலாளர்கள் அங்கே இருக்கிறார்கள். இதை நாடாளுமன்றத்துக்குள் சென்று போராடாமலிருந்தால் நீங்கள் வெறும் வாய்வீச்சாளர்களே!” என்று லெனின் கூறியுள்ளார்.

## இந்திய அனுபவம்

குருஷேவ் காலம்வரை உலகெங்கும் கம்யூனிஸ்டுகளின் அடிப்படை

நிர்ணயிப்பாக இது இருந்தது. இந்திய கம்யூனிஸ்டுகளும் இதே பார்வையுடன்தான் நாடாளுமன்றத் தேர்தல்களிலும் சட்டமன்றத் தேர்தல்களிலும் இந்தக் கால முழுவதிலும் பங்கு கொண்டனர். நாடாளுமன்ற நடவடிக்கையின் மூலம் புரட்சிகரமான சமுதாயமாற்றங்களை ஏற்படுத்த முடியும் என்ற பிரமைக்கு எதிராக இந்தியா உட்பட எல்லா நாடுகளிலுமுள்ள கம்யூனிஸ்டுகள் சக்திவாய்ந்த கொள்கைப் போராட்டம் நடத்தியுள்ளனர்.

அதே நேரத்தில் தேர்தலைப் பகிஷ்கரிப்பதென்ற இடதுசாரி சந்தர்ப்பவாதத்தையும் அவர்கள் ஏற்கவில்லை. தேர்தலின் மூலமாகக் கிடைக்கும் பதவிகளை மக்களின் புரட்சிகரப் போராட்டங்களை வெற்றிபெறச் செய்வதற்கும் கம்யூனிஸ்டுகள் பயன்படுத்தியுள்ளனர்.

இன்றைய வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் உட்பட ஒன்றுபட்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்கள் யாருமே, நாடாளுமன்றநடவடிக்கைகளிலிருந்து வெளியே நிற்பது, அல்லது பூர்ஷுவா கட்சிகளைப் போலவே நாடாளுமன்ற நடவடிக்கைகளில் மட்டுமே ஈடுபடுவது என்ற நிலையை—ஒன்று நாடாளுமன்ற நடவடிக்கையிலீடுபடுவது, அல்லது விலகி நிற்பது என்ற இரண்டு நிலைகள்தான் இருக்கிறது என்ற நிலையை எடுக்கவில்லை. பூர்ஷுவா, குட்டி பூர்ஷுவா கட்சிகளின் கொள்கைகளிலிருந்து மாறுபட்ட நிலையில் தொழிலாள வர்க்கக் கட்சியின் பார்வையின் அடிப்படையில் புரட்சிகர நடவடிக்கையின் பகுதி என்ற நிலையில் தேர்தல்களையும் நாடாளுமன்றத்துக்குள் உள்ள வேலைகளையும் பயன்படுத்துவது என்ற பார்வைதான் ஒன்றுபட்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சியில் இருந்தது.

1946 ல் இந்தியாவில் (பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில்) மாநிலங்களில் தேர்தல் நடைபெற்றது. கம்யூனிஸ்ட் கட்சி அன்றைக்கு அந்த தேர்தலைபகிஷ்கரிக்கவில்லை. மாறாக, அதில் தீவிரமாக பங்குபெற்றது. அந்த தேர்தலில் போட்டியிட்ட கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களில் இருவர், அன்றைக்கு ஒன்றுபட்டிருந்த சென்னை மாநில சட்டமன்றத்திற்கும் ஒன்றிரண்டு பேர் வங்கம், பம்பாய் மாநில சட்டமன்றங்களுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தொழிலாளர்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த தனித் தொகுதிகளிலிருந்துதான் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பொதுவான தொகுதிகளில் போட்டியிட்ட அனைவரும் தோல்வியடைந்தனர்.

இரண்டு வருடங்களுக்கு பிறகு, 1948 ல் அன்றைக்கிருந்த திருவாங்கூர் சட்டசபைக்கு தேர்தல் நடந்தது. அந்த தேர்தலிலும் கம்யூனிஸ்டுகள் பங்கெடுத்தனர். 20 க்கும் குறைந்த இடங்களில் போட்டியிட்ட கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்கள் எல்லா இடங்களிலும் தோல்வியடைந்தனர்.

இந்த இரண்டு தேர்தல்களையும் கம்யூனிஸ்ட் பார்வையோடுதான்

## சிறு உற்பத்தியாளர்களும் திருத்தல் வாதிகளும்

சிறிய ரக தொழிற் உற்பத்தி முறைகளைப்பற்றி திருத்தல் வாதிகள், பிரகாசமான சித்திரம் ஒன்றைத் தீட்டி நம் முன் வைக்கிறார்கள். ஆனால் இதன் உண்மை நிலை என்ன? பெருந்தொழில் உற்பத்தி முறை, அது தொழிற்துறையாய் இருப்பினும் சரி, விவசாயத் துறையாய் இருப்பினும் சரி இரண்டிலும் சிறு அளவு உற்பத்தி முறையைவிட எவ்வளவோ சிறந்தது என்பதை மறுக்க முடியாத நடைமுறை அனுபவம் எடுத்துக்காட்டுகிறது. விவசாயத் துறையில் சரக்கு உற்பத்தி முறை என்பது சிறிய அளவினதாய் இருந்தபோதிலும், இன்றைய உலக பரிவர்த்தனை சந்தையில் அதுவும் படிப்படியாக இழுக்கப்படுகிறது.

சிறு அளவு உற்பத்தி முறை என்பது, தேசிய பொருளாதாரத்தை சீர்குலைப்பதின் மூலமே, வாழ்க்கைத்தரத்தை தொடர்ந்து பாதிப்பதின் மூலமே, வறுமையைத் தொடர்ந்து நீடிப்பதின் மூலமே, ஆடு மாடுகளின் தரத்தை தொடர்ந்து வீழ்ச்சி அடையச் செய்வதின் மூலமே — வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால், எந்த வழி முறைகளைப் பின்பற்றி பண்டைக்கால கைத்தொழில் உற்பத்தி முறை, முதலாளித்துவ முறைக்கு எதிராக தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முயன்றதோ அதே வழி முறைகளைப் பின்பற்றி தான் நீடித்திருக்க முடியும் ஆனால் இது சாத்தியமாகுமா?

விஞ்ஞானத் துறையிலும், தொழிற் நுட்பத் துறையிலும் ஏற்படும் ஒவ்வொரு முன்னேற்றமும், முதலாளித்துவ சமுதாயத்தில் இருக்கின்றன, சிறிய தொழிற் உற்பத்தி முறையின் அடித்தளத்தையே தகர்த்து விடுகின்றன.

இத்தகைய வளர்ச்சிப் போக்குகளின் சோஷலிஸ்ட் அரசியல் பொருளாதாரவாதிகள், ஆழ்ந்து ஆராய்ந்து இன்றைய முதலாளித்துவ அமைப்பின் கீழ் எவ்வாறு சிறுதொழிற் உற்பத்தியாளர்கள் நீடிக்க முடியாது என்பதை எடுத்துக் காட்டவேண்டும். விவசாயிகள் எவ்வாறு இன்றைய முதலாளித்துவ அமைப்பின் கீழ் நீடிக்க முடியாது என்பதைச் சுட்டிக் காட்டி, பாட்டாளி வர்க்கப் பார்வையை அவர்களுக்குத் தரவேண்டும்.

இந்தப் பிரச்சனையில் விஞ்ஞானப் பார்வையில் இருந்து பார்க்கும் பொழுது, திருத்தல் வாதிகள் ஒருதலைப்பட்சமாக சில விபரங்களை எடுத்துக்கொண்டு, முதலாளித்துவ அமைப்பு முழுவதையும் பார்க்காமல் மாபெரும் தவறு செய்கிறார்கள். அரசியல் ரீதியாகப் பார்த்தால் விவசாயிகளை திருத்தல் வாதிகள் விரும்பியோ, விரும்பாமலோ ஒரு சிறு உடைமையாளரின் கண்ணோட்டத்தை (அதாவது முதலாளியின் கண்ணோட்டத்தை) மேற்கொள்ளும்படியே போதிக்கிறார்கள்.

புரட்சிகர பாட்டாளி வர்க்கப் பார்வையை ஊட்டுவதற்குத் தவறுகிறார்கள்!

—வி. ஐ. லெனின் "குட்டி பூர்ஷ்வா புரட்சி வாதம்" என்ற நூலில்.

கட்சி பயன்படுத்தியது. இதில் முதலில் நடைபெற்ற தேர்தலில் வெற்றி பெற்றபோது எம். எல். ஏ. பதவிகளை கட்சி பயன்படுத்தியது லெனினிஸ்ட் பார்வையோடுதான்.

## சட்டமன்றங்களில் கம்யூனிஸ்டுகள் பாத்திரம்

முதலாளித்துவ நாடாளுமன்ற அமைப்பில் தேர்தலில் பங்கு கொண்டு பதவிகளை பெற முயற்சிப்பது, முடியாமல் போனால் "அரசியல் சட்டத்திற்குட்பட்ட எதிர்க்கட்சி"யாக செயல்படுவது என்ற கொள்கையை கட்சி அன்றைக்கு பின்பற்றவில்லை. அதற்குமாறாக தற்போதைய சமுதாய அமைப்பினை அம்பலப்படுத்தி, வர்க்க எதிரிகளுக்கெதிராக பரந்த அளவில் வெகுஜன ஐக்கியத்தை உருவாக்குவதற்காகத்தான் ஒவ்வொரு தேர்தலையும் கட்சி பயன்படுத்தியது. தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு சட்டமன்ற உறுப்பினரும், சட்டமன்ற விதிகளின்படி தங்களுக்கு கிடைக்கக்கூடிய ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் இதற்காகவே பயன்படுத்தினர்.

1952-ம் வருடத்தில் இதில் சிறு மாறுதல் செய்யப்பட்டது உண்மை தான். சில இடங்களிலாவது தேர்தலின் மூலம் அதிகாரத்திற்கு வர முடியுமென்ற எண்ணம் தலைதூக்கியது. இதோடு முதலாளித்துவ நாடாளுமன்ற அமைப்பில் ஓரளவு நம்பிக்கையும் கட்சிக்குள் வந்தது.

1956-ம் வருட "குருஷேவ் சித்தாந்த"மும் 1957ல் கேரளாவில் ஏற்பட்ட அமைச்சரவையும் இந்தக் கருத்து வளர தெம்பூட்டியது. கேரளத்தை தொடர்ந்து ஏனைய மாநிலங்களிலும், கடைசியில் மத்தியிலும் தேர்தலின் மூலமாக அதிகாரத்திற்கு வர முடியுமென்ற எண்ணம் கட்சிக்குள் வளர ஆரம்பித்தது.

## அன்றைய எச்சரிக்கை!

ஆனால் அந்த கட்டத்திலும் "அமைதியான முறையில் படிப்படியாக முன்னேறுவதென்ற சித்தாந்த"த்திற்கெதிராக கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்திய தலைமை எச்சரித்தது. பின்னர், வலது கம்யூனிஸ்டுகள் மேற்கொண்ட முதலாளித்துவ நாடாளுமன்ற தத்துவத்துக்கு எதிராக அன்றைய கட்சித் தலைமை எச்சரிக்கை விடுத்தது.

ஆனால், கட்சி தலைமையின் இந்த எச்சரிக்கை கட்சியிலிருந்த திருத்தல்வாத கொள்கையின் வளர்ச்சியினை தடுக்க பயன்படவில்லை. திருத்தல்வாத கொள்கை பிறகு பூரணமான வளர்ச்சியை அடைந்துவிட்டதென்பதற்கு உதாரணம்தான், எம். என். கோவிந்தன் நாயர் வெளியிட்ட "ஆட்சியும் போராட்டமும் ஒன்றாக இணைந்து போகமுடியாது" என்ற பிரசித்திபெற்ற அறிக்கையாகும். 'ஒன்று ஆட்சியிலிருந்து வெளியேறி போராட்டம் நடத்துவது; அல்லது போராட்டங்களை நிறுத்திவிட்டு ஆட்சிநடத்தவேண்டு'மென்ற எம். என். கோவிந்தன் நாயரின் இந்த உத்தரவு பூர்ஷ்வா நாடாளுமன்றத்தின்மீது வைத்திருந்த அளவு கடந்த நம்பிக்கைக்குச் சரியான உதாரணமாகும். ஆனால் இதற்கு நேர் எதிரான கொள்கையைத்தான் மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி வகுத்தது. "புதிய நிலைமையும் நமது கடமைகளும்",

[ 17-ஆம் பக்கம் பார்க்க ]

# பூர்ஷ்வா ஜனநாயகமும் திருத்தல்வாதமும்!

அரசியல் துறையில் மார்க்கிஸத்தின் அடித்தளத்தையே - அதாவது, வர்க்கப் போராட்டம் என்ற சித்தாந்தத்தையே - திருத்தி அமைக்க முயல்வதுதான் திருத்தல்வாதம்.

அரசியல் சுதந்திரம், ஜனநாயகம், வயது வந்தோர் வாக்குரிமை ஆகியவை இருப்பதால, வர்க்கப்போராட்டத்திற்கு ஆதாரம் இல்லாமல் போகின்றன என்று திருத்தல்வாதிகள் நமக்குச் சொல்கிறார்கள். இதன் காரணமாக, மார்க்கிஸத்தின் கம்யூனிஸ்ட் அறிக்கையிலுள்ள உழைக்கும் மக்களுக்கு தேசம் என்பது இல்லை என்ற பார்வை தவறானதாக ஆகிவிடுகிறது என்றும் கூறுகிறார்கள். காரணம், ஒரு ஜனநாயக அமைப்பில் பெரும்பான்மையோரின் விருப்பம் பிரதிபலிக்கப்படுவதால் அரசாங்க அமைப்பை ஒரு வர்க்கத்தின் கருவி என்று கருதக்கூடாது. அதன் காரணமாக முற்போக்குத் தன்மையோடு, சமுதாயச் சீர்திருத்தத்தில் நம்பிக்கையுடைய பூர்ஷ்வாக்களுடன் பிற்போக்காளர்களுக்கு எதிராகக் கூட்டுச் சேர்வதை நிராகரிக்கக் கூடாது என்கிறார்கள்.

மிதவாத பூர்ஷ்வாக்களும் இதே கருத்தைத்தான் கூறியுள்ளார்கள். பண்டைக்கால வர்க்கங்களையும், வர்க்க வேறுபாடுகளையும் பூர்ஷ்வா நாடாளுமன்ற அமைப்புமுறை ஒழித்துவிடுகிறது என்றும் கூறினார்கள், காரணம் வாக்களிக்கும் உரிமையும் அரசாங்கத்தில் பங்கு பெறும் வாய்ப்பும் வேறுபாடின்றி எல்லாக் குடிமக்களுக்கும் கிடைக்கின்றது என்றார்கள்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியின் ஐரோப்பாவின் அனுபவமும், 20-ம் நூற்றாண்டின் முற்பகுதியின் ரஷ்யப் புரட்சியின் அனுபவமும் இந்தக் கருத்துக்கள் முட்டாள்தனமானவைகள் என்று எடுத்துக் காட்டுகின்றன.

"ஜனநாயக" முதலாளித்துவத்தின் கீழ் கிடைக்கும் சுதந்திரம், சமுதாயத்திலுள்ள பொருளாதாரப் பாகுபாடுகளைக் குறைப்பதற்குப் பதிலாக, மேலும் அதிகரிக்கச் செய்து ஆழமாக்கவே செய்கின்றன.

பார்லிமெண்டரி ஜனநாயகம் என்பது— மிக அதிகமான ஜனநாயகத் தன்மை கொண்ட பூர்ஷ்வா குடியரசுகளை அதில் இயல்பாகப் பொதிந்துகிடக்கும் வர்க்க ரீதியாக நடைபெறும் ஒடுக்குமுறையின் கருவிகள்தான் அவை என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

—லெனின்
"மார்க்கிஸமும் திருத்தல்வாதமும்"
என்ற நூலில்.

